# விற்பனையாகும் இதர நூல்கள்



























தமிழ்வாணன்

கட்டபொம்மன் கொள்ளைக்காரன்!

# கட்டபொம்மன் கொள்ளைக்காரன்!

## தமிழ்வாணன்

# கப்பல் மன்னன் கொள்ளைக்காரன்


ஆசிரியர் :

**தமிழ்வாணன்**

பதிப்பாசிரியர் :

**லேனா தமிழ்வாணன், எம்.ஏ.**





**மணிமேகலைப் பிரசுரம்**

தபால் பெட்டி எண் : 1447

7 (ப.எண் 4), தணிகாசலம் சாலை,

தியாகராயநகர், சென்னை – 600 017.

தொலைபேசி : 2434 2926, 2434 6082

மின் அஞ்சல் : manimekalai1@dataone.in

மின் இணையம் : www.tamilvanan.com




## நூல் விவரம்


| | |
|---|---|
| நூல் தலைப்பு | **கட்டபொம்மன் கொள்ளைக்காரன்** |
| ஆசிரியர் | **தமிழ்வாணன்** |
| மொழி | தமிழ் |
| பதிப்பு ஆண்டு | 2010, 2014 |
| பதிப்பு விவரம் | இரண்டாம் பதிப்பு |
| உரிமை | ஆசிரியருக்கு |
| தாளின் தன்மை | 11.6 |
| நூலின் அளவு | கிரௌன் சைஸ் (12 x 18 செ.மீ.) |
| அச்சு எழுத்து அளவு | 10 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | iV+220=224 பக்கங்கள் |
| நூலின் விலை | **ரூ. 100.00** |
| அட்டைப்பட ஓவியம் | மோகன் கிராஃபிக்ஸ் |
| லேசர் வடிவமைப்பு | பி.எஸ். முத்து கிராஃபிக்ஸ் சென்னை - 600 015. |
| அச்சிட்டோர் | ஸ்கிரிப்ட் பிரிண்டர்ஸ் சென்னை - 600 094 |
| நூல் கட்டுமானம் | தையல் |


## விற்பனையாகும் இதர நூல்கள்!

## விற்பனையாகும் இதர நூல்கள்!





# கட்டபொம்மன் கொள்ளைக்காரன்

இருபத்தோராண்டுகட்கு முன்னர், அண்ணல் காந்தியடிகளின் ஆணைவழி "வெள்ளையனே வெளியேறு!" என்று முழங்கியவாறு, விடுதலை வேட்கையுற்ற நம் பாரத மக்கள் வீறுகொண்டெழுந்தனர். அந்த ஆகஸ்டுப் புரட்சியின்போது, நான் பள்ளி இறுதி வகுப்பில் படித்துக் கொண்டிருந்தேன். எங்கள் பள்ளி மாணவர்களுக்குள், எனக்குத்தான் ஏதோ கொஞ்சம் பேசத் தெரியும். அதனால் என்னைப் பிடித்து மாணவர் காங்கிரசின் தலைவராகப் போட்டுவிட்டார்கள். இப்பொழுது செய்தி இலாகா டைரக்டராக இருக்கும் திரு. திரவியம் அவர்கட்கு இதில் பெரும் பங்கு உண்டு.

நான் மாணவர் காங்கிரஸ் தலைவன் ஆனதும், கதர் ஜிப்பாவை மாட்டிக்கொண்டு தேசப் பணியில் தீவிரமாகக் குதித்தேன். மாணவர்களை ஒன்று திரட்டினேன்.

ஒரு நாள் -

நான் சினிமாக் கொட்டகையில் மாணவர்களைச் சேர்த்து வைத்துக்கொண்டு, "வெள்ளையர்களே வெளியேறுங்கள்!" என்று ஆவேசத்தோடு பேசிக் கொண்டிருந்தேன்.

அப்போது ஒருவன் ஓடிவந்து, "கடைத்தெருவில் போலீஸ் சுட்டுக்கொண்டிருக்கிறது! மக்கள் மடிந்து கொண்டிருக்

கிறார்கள்! வழக்குமன்றம் தீப்பிடித்து எரிந்து கொண்டிருக் கிறது!" என்று கத்திவிட்டு ஓடினான்.

அவ்வளவுதான்! நாங்கள் அத்தனை பேர்களும் அவனைப் பின்பற்றிவிட்டோம்!

நான் வீட்டுக்குச் சென்றபோது, என் அன்னையார் தெரு வாயிலிலேயே நின்று அழுதுகொண்டிருந்தார்கள். நாங்கள் உடன்பிறந்தவர்கள் ஒன்பது பேர்கள். இருந்தும் கூட எனக்காக அழுதுகொண்டே நின்றிருந்த அவர்கள், என்னைக் கண்டதும் தாவியணைத்து உள்ளே அழைத்துச் சென்றார்கள்.

அன்றிரவு ஒரு மணியிருக்கும். போலீஸ் இலாகாவில் பணிபுரிந்த என் நண்பர் ஒருவர் மாறுவேடத்தில் எங்கள் வீட்டுக்கு வந்தார். அவர் அன்னையாரை அழைத்து, "நம் தம்பிக்கும் இன்னும் பன்னிரண்டு மாணவர்களுக்கும் 'அரஸ்டு வாரண்டு' பிறப்பித்திருக்கிறது. ஆகையால் இப்பொழுதே நம் தம்பியை எங்கேயாவது வெளியூருக்கு அனுப்பிவிட வேண்டும்," என்று கூறினார்.

என் தந்தையை இழந்து நின்ற என் அன்னையார் இதைக் கேட்டதும் மூர்ச்சையுற்றார்கள். அப்போது திருமண மாகாதிருந்த என் சகோதரிகள், என் அன்னையாரைத் தாங்கிப் பிடித்துக் கொண்டார்கள்.

நான் அந்த நடுநிசியில் மாறு வேடத்தில் நகரைவிட்டுப் புறப்பட்டேன்.

மறுநாள் இரவு குற்றாலம் வந்து சேர்ந்தேன்

குற்றாலத்தில் ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த எங்கள் குடும்ப நண்பரான ஒரு பெரியவரை அடைந்து, நடந்தவற்றையெல்லாம் அவரிடம் விளக்கிச் சொன்னேன்.



அந்தப் பெரியவர் என்பால் அன்புகூர்ந்து ஆதரவு தந்தார். "வாரண்டு ரத்தாகும் வரையில் நீ இங்கேயே தங்கியிருக்கலாம்" என்று அடைக்கலம் அளித்தார்.

அந்தப் பெரியவர் வீட்டில் ஒரு சிறந்த புத்தக அறை இருந்தது. அந்த அறைக்குள்ளேயே நான் இருபத்தொரு நாள்கள் அடைபட்டுக் கிடந்தேன். அந்த இருபத்தோரு நாள்களும் என் வாழ்க்கையிலேயே என்றும் மறக்கமுடியாத நாள்களாகும். அந்தச் சமயத்தில்தான் கட்டபொம்மன் என் கருத்திலே பதிந்தான். எவ்வாறெனில்-

அந்தப் புத்தக அறைக்குள் கட்டபொம்மனைப் பற்றிய ஒரு நூல் என் கண்ணில் பட்டது. எடுத்துப் படித்தேன். அது முழுக்க முழுக்க கட்டபொம்மனுக்கு எதிரான புத்தகம். அதில் சில பக்கங்களைப் படித்ததுமே நான் சினத்தால் பொங்கினேன். என் உடம்பு துடித்தது. புத்தகத்தைத் துண்டு துண்டாகக் கிழித்தெறிந்தேன்.

எனக்குப் பகலுணவு கொண்டுவந்த பெரியவர் அந்தக் காகிதத் துண்டுகளைக் கண்டார், விழித்தார்.

"நமது கட்ட பொம்மனைப் பற்றி ஒருவன் தன் மனம் போனபடியெல்லாம் எழுதியிருக்கிறான்! வெள்ளையனை எதிர்த்த ஒரு வீரச்சிங்கத்தை, கப்பம் கட்டி அறியாத ஒரு கன்னித் தமிழ்க் காவலனைக் கண்டபடியெல்லாம் எழுதுவதா? அந்நூல் உங்கள் நூல் நிலையத்தில் இருப்பதா?" என்று நான் கத்தினேன்!

பெரியவர் எழுந்து சென்று கதவைத் தாழிட்டுவிட்டு வந்து, என் எதிரே அமைதியுடன் அமர்ந்தார். அவர் சொன்னார்.

"உளக்கொதிப்பில் நீ உன் அறிவை இழந்துவிட்டாய். எனக்கு உரிமையுள்ள இப்புத்தகத்தை நீ எப்படிக் கிழிக்கலாம்?

கிழிக்கக்கூடாது என்பதை நீ அறியாதவனா? இல்லை; அறிந்தவனே! அறிந்திருந்தும் நீ கிழித்ததற்குக் காரணம், நீ ஆத்திரத்துக்கு அடிமையாகி விட்டதுதான். கட்டபொம்மன் மீது நீ கொண்டிருக்கும் பற்று வெறியாக முற்றி உன் அறிவுக்குத் திரை போட்டு விட்டது. எந்த உணர்ச்சிக்கும் அடிமையாகாதவனே மனிதன். மற்றவர்களெல்லாம் மனித உருவம் படைத்தவர்கள்; அவ்வளவுதான்!

நாம் ஒரு கருத்தைக் கொண்டிருக்கும்போது அந்தக் கருத்துக்கு எதிராக வேறொரு கருத்து வெளியிடப்படுமானால், அதற்காக நாம் பரபரப்பு அடையக்கூடாது. அந்த மாற்றுக் கருத்தை நாம் அமைதியுடன் ஆராய வேண்டும். நம் கருத்தையும் அந்த எதிர்க் கருத்தையும் ஒப்பிட்டு நோக்கி, இரண்டில் எது சிறந்தது எனச் சிந்திக்க வேண்டும். அப்போது, நம்முடைய கருத்து தவறு என்று நம் உணர்வில் படுமாயின், நாம் இதுகாறும் பற்றி நின்ற அந்தப் பழைய கருத்தை உடனே மாற்றிக் கொள்ள வேண்டும். ஆனால், அப்படி மாற்றிக் கொள்வது எல்லாருக்கும் எளிதன்று. ஒரு சிலரால்தான் இதைச் செய்ய முடியும். அந்தச் சிலரிலே நாமும் ஒருவராக இருப்பதுதானே நமக்குச் சிறப்பாகும்?

நாம் கொண்டிருக்கும் கொள்கையின்மீது வெறித் தனமான பற்று வைத்து, மற்றவைகளையும் மற்றவர்களையும் நாம் எப்போதும் எதிர்த்துக் கொண்டேயிருந்தால், எந்தக் காலத்திலும் நாம் உண்மையை அறிந்திட முடியாது. உண்மையை உணராமல் கண் மூடித்தனமாக ஒன்றைப் பிடித்துத் தொங்கிக் கொண்டேயிருக்கிற வாழ்வும் ஒரு வாழ்வாகுமோ?

எதிலும் வெறிகொள்ளாது, எல்லாவற்றையும் ஆழமாக ஆராயும் ஒரு பழக்கத்தை நீ மேற்கொள். அப்போதுதான் தமிழகம் தழைப்பதற்குரிய, தமிழர் முன்னேற்றத்திற்குரிய, ஒரே தகுதியான தொண்டை நீ செய்ய முடியும்.



இன்றே தொடங்கு இப்பணியை. நிறையப் படி. நிறைய எழுது. படிக்கும் போது எதையும் காய்தல் உவத்தலின்றி நடுநிலை உள்ளத்தோடு ஊன்றிப்படி. அவ்வாறே எழுதும் போதும் எதையும் விருப்பு வெறுப்பின்றி எழுதிப் பழகு. இது கொள்ளத்தக்கது, இது தள்ளத்தக்கது என்று பகுத்துணர்ந்து, அங்ஙனம் உணர்ந்ததை அச்சமின்றி எடுத்துச் சொல்லிக் கொண்டேயிரு!"

பசுமரத்தில் ஆணியடிப்பதுபோல் என் உள்ளத்தில் வந்து பதிந்த இந்த வார்த்தைகளை, நான் கண்மூடி மௌனியாகிக் கருத்தூன்றிக் கேட்டுக் கொண்டிருந்தேன். நான் கண் விழித்துப் பார்த்தபோது, பெரியவர் என் எதிரேயில்லை. கதவு சாத்தப்பட்டிருந்தது. ஓடிப் போய்க் கதவை இழுத்தேன். அவர் வழக்கம் போல் பூட்டிக் கொண்டு போய் விட்டாரென்று தெரிந்தது. அவர் அன்பு கனிந்து கூறிய அந்தப் பொன்மொழிகள் என் உள்ளத்தை அனலிடை மெழுகுபோல் உருக்கின. நான் தரையில் அப்படியே குப்புறப் படுத்துக் கொண்டு மனங்கரைந்து அழுதேன்!

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகுதான், என் உணர்விலே ஒரு புதிய தெளிவு உண்டாயிற்று. அன்று முதற்கொண்டு எதைப்பற்றியும் சரியாக ஆராயாமல் ஒரு முடிவுக்கு வருவது,. அந்த முடிவின் மீது ஒரு வெறித்தனமான பற்றுக் கொள்வது என்ற பழக்கங்களை நான் கைவிட்டேன். "எப்பொருள் யார் யார் வாய்க் கேட்பினும், அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்னும் சீரிய கொள்கையை நான் கடைப்பிடிக்கலானேன். அதை இன்று வரை, என்னால் இயன்றவரை, மறவாமல் கடைப்பிடித்து வருகிறேன். அதையே என் வாழ்வின் வழிகாட்டியாகவும் வைத்துக் கொண்டிருக்கிறேன். இவ்வாறு என் மனப்போக்கையே திருத்தியமைத்துக் கொடுத்த அந்தப் பெரியவரை, அவர் புரிந்துள்ள அந்த நன்றியை, என் வாழ்வில் நான் என்றுமே மறக்க முடியாது.

## கட்டபொம்மனைப் பற்றிய ஆராய்ச்சி

1942-ல் இருந்து கட்டபொம்மனைப் பற்றி எனக்குக் கிடைத்த நூல்களையெல்லாம் நான் படித்து வந்தேன்.

கட்டபொம்மனைப் பற்றிப் பேச்சு வந்தபோது, ஒரு திருநெல்வேலி நண்பர் என்னிடம் சொன்னார். **''கட்டபொம்மன் ஒரு கொள்ளைக்காரன், தெலுங்கன். தமிழர்களுக்குத் தனிப்பெருந் தீங்கிழைத்தவன்''** என்று!

"இதற்கு ஆதாரம் என்ன?" என்று நான் கேட்டேன்.

**''திருநெல்வேலிச் சீமைச் சரித்திரம்''** என்று ஒரு நூல் இருக்கிறது. இந்த நூலை எழுதியவர் வெள்ளைக்காரர் அல்ல; நம்மவர்தான். குருகுகதாசப்பிள்ளை யென்பது அவர் பெயர். இந்தத் திருநெல்வேலிச் சீமைச் சரித்திரத்தை வாங்கிப் படித்துப் பாருங்கள். கட்டபொம்மனைப் பற்றி மறைக்கப்பட்ட சில உண்மைகள் உங்களுக்குத் தெரிய வரும்" என்றார் அவர்.

"இந்தப் புத்தகத்தை நான் எப்படிப் பெறுவது?" என்று கேட்டேன்.

"சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தில் கிடைக்கும்" என்று அவர் தெரிவித்தார்.

உடனே கழகத்திற்கு ஓடினேன்.

"இப்பொழுது இந்தப் புத்தகம் எங்களிடம் இல்லை. திரு.வி.க. அவர்களிடம் போய்க் கேளுங்கள், கிடைக்கும். அவர்களிடம் நாங்கள் எல்லாப் பிரதிகளையும் கொடுத்து விட்டோம்" என்றனர் கழகத்தினர்.

தமிழ் விளக்கு திரு. வி. கல்யாண சுந்தர முதலியார் அவர்கள் எனக்கு ஒரு தந்தை போன்றவர்கள். அவர்களிடம் கொஞ்ச நாள் நான் பாடம் கேட்டிருக்கிறேன். இது என் வாழ்வில் கிடைத்திட்ட பெரும் பேறு ஆகும்.



நான் அப்பொழுது 'சக்தி காரியாலயத்' திலிருந்து வெளி வந்து கொண்டிருந்த 'அணில்' என்ற பத்திரிகைக்கு கூட்டாசிரியனாக இருந்தேன். சக்தி காரியாலயமும் திரு. வி.க. அவர்களது இல்லமும் அடுத்தடுத்து இருந்தன. அதனால் திரு. வி.க. அவர்கட்கு ஓய்வு கிடைக்கும்போதெல்லாம் நான் ஓடிச் சென்று பாடம் கேட்டுக் கொண்டிருந்தேன். அந்த நேரத்தில்தான் அங்கு அடிக்கடி வந்து கொண்டிருந்த டாக்டர் மு. வரதராசனார் அவர்களின் நட்புச் செல்வத்தை நான் பெறுவதற்குரிய வாய்ப்பும் கிட்டியது.

திரு. வி.க. அவர்கள் உடல் நலிந்து மெலிந்திருந்த சமயம் அது. அத்துடன் அவர்கள் மனத்திலும் சிறிது அமைதியின்மை நிலவியிருந்தது. அதனால் கட்ட பொம்மனைப் பற்றி அவர்களிடம் கேட்க எனக்கு எளிதில் இயலவில்லை. இருந்தாலும் அதைக் கேட்டே தீருவது என்று முடிவு எடுத்தேன்.

ஒருநாள் காலை நேரம். வெளியே மழை பெய்து கொண்டிருந்தது. திரு.வி.க. அவர்களும் நானும் முற்றத்தில் பேசிக் கொண்டிருந்தோம். அப்போது சாமியார் ஒருவரும் எங்களுடன் இருந்தார். அவர் இன்றும் உயிரோடிருக்கிறார்.

கட்டபொம்மனைப் பற்றி நான் அன்றுவரை படித்திருந்ததையெல்லாம் ஐயா திரு.வி.க. அவர்களிடம் தெரிவித்தேன். அதைக் கேட்டு அவர்கள் உள்ளக் கொதிப்புக் கொள்ளவில்லை. அதற்கு மாறாக, தம் ஊனக் கண்களை மூடிக் கொண்டு அறிவுக்கண்களை அகலத் திறந்தவாறு சிந்தனையில் ஆழ்ந்தார்கள். நீண்ட நேர மௌனத்திற்குப் பிறகு அவர்கள் சொன்னார்கள்.

"கட்டபொம்மனைப் பழிக்கும் சரித்திரத்தை நான் முழுதும் படிக்காவிட்டாலும் கொஞ்சம் படித்திருக்கிறேன். தமிழ் ஆராய்ச்சி காரணமாகக் கட்டபொம்மன் சரித்திரத்தில் என் கவனத்தைச் செலுத்த முடியவில்லை. நீ கட்ட

பொம்மனுக்கு உடன்பாடாக உள்ளவற்றையும் படி; மாறாக உள்ளவற்றையும் படி. இதுவரை கட்டபொம்மனைப் பற்றி வந்திருப்பவைகளையெல்லாம் விடுத்து வராதவைகளையெல்லாம் எடுத்துத் தமிழ் மக்களின் முன்னே வை. அவர்கள் எந்த முடிவை வேண்டுமானாலும் அவர்கள் விருப்பப்படி எடுத்துக் கொள்ளட்டும்."

ஐயாவின் நேர்மையைக் கண்டு என் கண்கள் கலங்கின.

பிறகு, "நம்மிடம் "திருநெல்வேலிச் சீமைச் சரித்திரம்" என்ற நூல் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அதை நான் அடைந்தால் என் ஆராய்ச்சி சிறப்புறும்" என்றேன் நான்.

"ஒரு புத்தகம் இருக்கும் என்று நினைக்கிறேன். நாராயணசாமியிடம் கேட்டு வாங்கிக் கொள்" என்றார்கள் ஐயா.

நாராயணசாமி அவர்கள்தாம் அங்கு எல்லாவற்றையும் பொறுப்பாகக் கவனித்து வந்தார்கள். அவர்களுக்கு ஆஸ்த்மா நோய். அந்நோயால் அடிக்கடி தொல்லைப்படுவார்கள். ஆகவே நான் கேட்ட புத்தகத்தை அவர்களால் தேடித்தர இயலாமல் போயிற்று.

ஏ.கே. செட்டியார் அவர்களும் ஏ.கே. கோபாலன் அவர்களும் ஒருமுறை என்னைப் பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளையவர்களிடம் அறிமுகம் செய்து வைத்தார்கள். உடனே நான் என் ஆராய்ச்சியைத் தூக்கிக் கொண்டு பிள்ளையவர்களிடம் போனேன். "நான் ஆராய்ந்து பார்க்காமல் எந்த முடிவுக்கும் வர இயலாது. ஓய்வு கிடைக்கும் போது படித்துப் பார்த்துச் சொல்லுகிறேன்" என்று அவர்கள் பதில் அளித்தார்கள். அதற்கப்புறம் அவர் திருவனந்தபுரத்துக்குச் சென்று அங்கேயே சிறிது காலம் நிலையாகத் தங்கிவிட்டதால் அவர்களைப் பார்த்திட முடியாமல் போயிற்று.



பின்னர், அடையாற்றைச் சேர்ந்த பேராசிரியர் ஒருவரிடம் என் ஆராய்ச்சியை எடுத்துச் சொன்னேன்.

"கட்டபொம்மன் தெலுங்கன்தான்; அதில் ஐயமில்லை. உன் ஆராய்ச்சி கட்டபொம்மன் கொள்ளைக்காரன் என்று சொல்லுகிறது. அதை உண்மையென்றே வைத்துக் கொள்வோம். கட்டபொம்மனைக் கொள்ளைக்காரன் என்று சொல்ல இந்த நேரத்தில் எவருக்குத் துணிவு இருக்கிறது. கட்டபொம்மனை வீரபாண்டியனாக்கிய பிறகு அவனைக் கொள்ளைக்காரனாக்குவது தேவையற்றது. பல ஆண்டுகள் பாடுபட்டு நிலை நிறுத்திய ஒரு வீரனின் புகழை ஏன் பாழ்படுத்த வேண்டும்?" என்றார் அந்தப் பேராசிரியர்

இடத்தைக் காலி செய்தேன்!

இதற்குப் பிறகு என்னுடைய ஆராய்ச்சிகள் மேலும் மேலும் தீவிரமடையலாயின.

### அரசியல் அல்ல; ஆராய்ச்சி

தலைவர் ம.பொ.சி. அவர்களோடு எனக்கு நெருக்கமான பழக்கம் ஏற்பட்டது. நெருங்கிப் பழகிய பிறகுதான், அவரிடமுள்ள நிறைவும் குறைவும் எனக்குத் தெரிய வந்தன. அவரோடு நான் பழகப் பழக, அவரிடம் கட்டபொம்மனைப் பற்றிப் பேசும் துணிவே எனக்கு இல்லாமல் போயிற்று. காரணம், நான் ம.பொ.சி. அவர்களிடம் வைத்திருந்த அன்பும், ம.பொ.சி. அவர்கள் கட்டபொம்மன்பால் கொண்டிருந்த பற்றுமேதான். அந்தப் பற்றானது, கட்டபொம்மனைப் பற்றி அவரிடம் யாராவது சிறிது குறைவாகப் பேசிவிட்டால், அப்படிப் பேசியவர்கள் மீது ஆத்திரம் கொள்ளும் அளவுக்கு அவரிடம் வளர்ந்து போய் விட்டிருந்தது. அப்புறம் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அவர்களது நாடகம் தொடர்பான கூட்டுறவால், ம.பொ.சி. அவர்களது கட்டபொம்மன் பற்று பைத்தியமாகவே மாறிவிட்டது. அதனால் ம.பொ.சி.யிடம்

கட்டபொம்மனைப் பற்றிப் பேசிக் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வதற்கு, எனக்குக் கொஞ்சமும் வாய்ப்பில்லாமல் போய்விட்டது!

சிவாஜி கணேசன் அவர்களால் கட்டபொம்மனின் தவறான சரித்திரம் நாட்டிலே பரவி வரலாயிற்று. அப்போது, 'கல்கண்டு' பத்திரிகையின் வாசகர்களிடமிருந்து, கட்டபொம்மனைப் பற்றிய பல்வேறு கேள்விகள் எனக்கு வரத் தொடங்கின. நானும் என் உள்ளத்தில் உண்மையென்று பட்ட ஆராய்ச்சி முடிவுகளை அவர்கட்கு ஒளிக்காமல் கூறத் தொடங்கினேன்.

உடனே வந்தது வம்பு!

என்னைத் தவிர எல்லாருமே கட்டபொம்மனைப் பாராட்டிக் கொண்டிருந்த அந்த நேரத்தில், கட்ட பொம்மனுக்குச் சற்று விரோதமாக எழுதிவிட்டார் ஒரு நண்பர்.

அதைப் பார்த்த ம.பொ.சி. **''இந்த நேரத்தில் கட்டபொம்மனைக் கொள்ளைக்காரன் என்று எவனாவது சொன்னால் அவனைக் குத்திக் கிழித்து விடுவார்கள் மக்கள்!''** என்று குதித்தார்.

"மக்களை ம.பொ.சி. சரியாக அறியவில்லை. நம் தமிழ் மக்கள் அத்தகைய வெறியர்கள் அல்ல; அவர்கள் தெளிவான சிந்தனை படைத்தவர்கள்; உண்மையிலிருந்து பொய்யை ஒதுக்கிவிட்டுப் பார்க்கும் திறன் வாய்ந்தவர்கள் என்பதை ம.பொ.சி. அவர்கட்குக் காட்டுவோம்!" என்று நான் முடிவெடுத்தேன். அதன் விளைவாக,-

ஆராய்ந்தேன், இரவு பகல் பாராமல், இன்னல்களைப் பொருட்படுத்தாமல் தொடர்ந்து ஆராய்ந்தேன். அந்த ஆராய்ச்சியின் நிமித்தம் ஒருமுறை திருநெல்வேலி மாவட்டப் பகுதியைச் சுற்றி வந்தேன். அடையாற்று லைப்ரரியிலும்,



கோட்டை லைப்ரரியிலும், கன்னிமேரா லைப்ரரியிலும் எழும்பூர் ரிக்கார்டு ஆபீசிலும் என் நேரத்தைச் செலவிட்டேன். செலவிட்டு, கட்டபொம்மனுக்குத் தொடர்பான சரித்திரச் சான்றுகளையெல்லாம் ஒன்று திரட்டினேன். அந்தச் சான்றுகளை அடிப்படையாகக் கொண்ட வரலாற்றுச் செய்திகளை இந்நூலின் வாயிலாகத் தமிழ்பெருமக்களாகிய உங்கள் முன் வைக்கிறேன். இதைப் படித்துவிட்டு, உங்களுக்கு விருப்பமான முடிவை நீங்களே எடுத்துக் கொள்வீர்களாக!

**நான் பகைவன் அல்ல!**

கட்ட பொம்மனுக்கு எதிரான சான்றுகளை நான் திரட்டிச் சொல்லுவதால், என்னைத் தமிழரசுக் கழகத்துக்குப் பகைவன் என்று பலர் நினைக்கிறார்கள் ம.பொ.சி. என் பகைவர் என்று பலர் கருதுகிறார்கள். ஆனால் உண்மை அதுவல்ல.

என் வாழ்வில் நான் எந்த ஒரு கட்சியையும் பழித்துக் கொண்டே இருப்பவனாகவோ, அன்றிப் பாராட்டிக் கொண்டே இருப்பவனாகவோ என்றுமே இருந்ததில்லை. ஒரு குறிப்பிட்ட கட்சியிலுள்ள குறைகளைச் சொல்லுவேன். நிறைகளைச் சொல்லுவேன். அதே போல் குறிப்பிட்ட ஒருவரிடமுள்ள குறைகளைச் சொல்லுவேன்; நிறைகளையும் சொல்லுவேன். அது மட்டுமல்ல; என்னிடமுள்ள குறைகளையும் நிறைகளையும்கூட நானே சொல்லிக் கொள்ளத் தயங்கமாட்டேன். இதுவே நான் பின்பற்றி வரும் கொள்கையின் விளக்கம்.

எனவே, தமிழரசுக் கழகத் தலைவரும் தோழர்களும் என்னைத் தவறான கண் கொண்டு பார்க்க வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன். தமிழரசுக் கழகத்தின் மீது நான் கொண்டுள்ள பெருமதிப்பும், தலைவர் ம.பொ.சி அவர்கள் பால் கொண்டுள்ள பேரன்பும் என்றும் போல் இன்றும் அப்படியே மாறுபடாமல்தான் இருக்கின்றன. அதைப் போல்,

தமிழரசுக் கழகத் தோழர்களும், தலைவர் ம.பொ.சி. அவர்களும் நான் ஈடுபட்டுள்ள இந்தக் கட்டபொம்மன் ஆராய்ச்சியை அரசியலோடு தொடர்புபடுத்தாமல், அதற்கு அப்பாற்பட்ட விருப்பு வெறுப்பற்ற, ஒரு வரலாற்று ஆய்வெனவே கருதுமாறு வேண்டுகிறேன்.

## பாளையங்களின் தோற்றம்

பாண்டிய மன்னர்களின் காலத்தில், பாண்டி நாடு ஐம்பத்திரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இந்தப் பிரிவுகளுக்குக் கூற்றங்கள் என்று பெயர். இப்போதைய ஒரு தாலுகாவையொத்த பரப்பினையுடையதாயிருந்தது, அப்போதைய கூற்றம். ஒவ்வொரு கூற்றமும் ஒரு தலைவனது பொறுப்பில் விடப்பட்டிருந்தது.

இது பாண்டி நாட்டில் நிலவிவந்த நெடுங்கால வழக்கு. காலப்போக்கில் இந்தக் கூற்றங்களின் அமைப்பும் பெயர்களும் மாறிப் போய்விட்டன. ஆனால் பாண்டிய மன்னர்களின் பிரதிநிதிகளாக அக்கூற்றங்களில் ஆணை செலுத்தி வந்த மறவர்களின் பரம்பரைகள் மட்டும் பெரும்பாலும் மங்காமலிருந்தன. அந்த மறவர்கள் எல்லாம் மாபெரும் வீரப்பண்புகட்குப் பேர் போனவர்கள். போர் வரப்போகிறது என்று கேள்விப்பட்டால், உள்ளம் பூரித்துப் புளகாங்கிதமடைபவர்கள். போர்க்களத்தில் வெற்றி அல்லது வீரமரணம் தவிர வேறு எதையுமே அறியாதவர்கள். கொடுத்த வாக்கை எந்நிலையிலும் கைவிடாது காப்பாற்றும் கண்ணியம் படைத்தவர்கள். அந்தக் கண்ணியத்தின் புண்ணியத்தினால் தான், தென்பாண்டி வீமனைக் கொன்ற பிறகும் விசுவநாதன் மதுரையிலிருந்து ஆட்சிபுரிய முடிந்தது. எனினும், அந்த மறவர் குலத்தலைவர்களால் ஆந்திர அரசுக்கு என்றேனும் ஒருநாள் ஆபத்து வந்தே தீரும் என்று அஞ்சினான் அரியநாதன். அதற்காக அவன் ஒரு யுக்தி செய்தான்.



விசுவநாத நாயக்கனை எதிர்த்துப் படை திரட்டி வந்தார்களே பாண்டியவர்கள், அவர்கள் (தென்பாண்டி வீமனும் செகவீரபாண்டியனும் உள்பட) மொத்தம் ஐந்து பேர்களாவர். அதனால் அவர்கட்குப் பஞ்ச பாண்டியர்கள் எனவும் ஒரு பெயருண்டு. (பொதுவாக, பஞ்சவன் என்ற சொல்லே பாண்டியன் என்னும் பொருளில் இலக்கியங்களில் காணப்படுகிறது. "பஞ்சவன் நீடு கூனும்" என்ற பிரயோகம் அருணகிரிநாதரின் திருப்புகழில் வந்திருப்பது இங்கு நினைவு கொள்ளத் தக்கது.)

இந்தப் பஞ்ச பாண்டியர்களின் சார்பாகப் படை கொண்டு துணை நின்ற மறவர் தலைவர்களை வரவழைத்து ஒன்றுகூட்டி ஓர் உரை நிகழ்த்தினான். அதாவது:-

"வீரம் மிகுந்த பாண்டிய நாட்டவர்களாகிய உங்களை அடிமைப்படுத்தி ஆட்சி புரிவதென்பது எவராலும் இயலாத காரியம். அப்படி ஆட்சி புரியவும் நாங்கள் ஆசைப்பட வில்லை. வடக்கே வளர்ந்து வரும் முகமதிய ஆதிக்கம் தென்னகத்தில் புகுந்து விடாமலிருப்பதற்காகவே எங்கள் விசய நகர அரசு நிறுவப்பட்டது என்பது நீங்கள் எல்லோரும் அறிந்த உண்மை. அந்தப் பெருநோக்கத்தோடுதான் விசய நகரத்தின் பிரதிநிதிகளாகிய நாங்கள் இந்தத் தமிழகத்தில் வந்து தங்கியிருக்கிறோம். முன்பு ஓர் அரை நூற்றாண்டு காலம் முகமதிய ஆட்சியால் தமிழ் மக்கள் அடைந்த அல்லல்களை நாம் அதற்குள் மறந்துவிடலாமா? அந்த மாதிரி ஓர் அவக்கேடு மீண்டும் நேராதிருக்க வேண்டுமானால், நமக்குள் ஆந்திரர் தமிழர் என்ற வேற்றுமைகளை மறந்து, நாமெல்லாரும் இந்துக்கள் என்ற ஒற்றுமை உணர்ச்சியோடு வாழவேண்டும். அப்படி இல்லாவிட்டால், தமிழனாகிய நான் ஓர் ஆந்திர அரசின் தளவாயாக பதவி வகிக்க முடியாது. விசயநகர மன்னர்களும் விசுவநாத நாயக்கரும் எவ்வளவு பெருந்தன்மை வாய்ந்தவர்கள் என்பதை இதிலிருந்தே நீங்கள் அறிந்து கொள்ளலாம். அது மட்டுமல்ல; விசயநகர் மாமன்னர்

இப்போது நமது பாண்டிய மன்னர்களின் மாப்பிள்ளையாகி விட்டார். இவற்றையெல்லாம் கருத்திற் கொண்டு, நாம் ஒருவரையொருவர் வெறுப்பதையும் பகைப்பதையும் விட்டொழிக்க வேண்டும். முகமதியர்களை இந்நாட்டி லிருந்து ஓட்டுவதொன்றையே நமது முதன்மையான குறிக்கோளாகக் கொள்ள வேண்டும். இத்துறையில் முனைந்து பாடுபட்டுக் கொண்டிருக்கும் விசயநகர அரசுக்கு நீங்கள் ஆதரவு நல்கி ஒத்துழைக்க வேண்டும். முகமதியரை எதிர்க்கும் போராட்டத்தில் தென்னகம் முழுவதுக்கும் தலைமை தாங்கி நிற்கக்கூடிய ஒரே தகுதியுள்ள பேரரசு நம் விசயநகரத்தைத் தவிர வேறு எதுவுமேயில்லையென்பதை நீங்கள் எல்லாரும் அறிவீர்கள். அப்படியிருக்க, அந்தத் தலைமையை ஒப்புக் கொள்ளாமல் நீங்கள் வம்பு பண்ணுவீர்களானால், அது நம் விரோதிகளாகிய சுல்தான்களுக்குத்தான் நன்மை பயக்குமே தவிர, இந்துக்களாகிய நமக்கு நலமளிக்க மாட்டாது. நமது ஒற்றுமையைக் கண்டு, பகைவர்கள் பயப்பட வேண்டும். அதற்காகவேனும் நீங்கள் பெயரளவுக்கு எங்கள் தலைமையை ஏற்றுக் கொண்டு மற்றப்படி உங்கள் பகுதிகளில் எப்போதும் போல் சுதந்திரமாக வாழ்ந்து வாருங்கள். உங்கள் உள்நாட்டு அரசியலில் நாங்கள் ஒருநாளும் தலையிட மாட்டோம். பகைவர்களோடு போரிட நேரும் சமயங்களில் மட்டும், உங்களால் ஆன படை உதவிகளை மாத்திரம் நீங்கள் மனமுவந்து அளித்து வந்தால் போதுமானது. அப்புறம் இந்த் தென்னகத்து மண்ணில், முகமதிய சுல்தான்கள் அடியெடுத்து வைக்காமல் அணை போட்டுத் தடுப்பது எங்கள் பொறுப்பு!" என்று அழகாகப் பேசினான் அரியநாதன்!

அரியநாதன் இப்படி இனிமையாக எடுத்துச் சொன்னதைக் கேட்டு, அவன் கூறுவது ஒரு விதத்தில் நியாயம்தான் என்று ஒப்புக் கொண்டனர் மறக்குலத் தலைவர்கள். ஏனெனில், பாண்டியர்களோ பொதிகை மலைக்குப் போய் விட்டார்கள். தென்பாண்டி வீரனுக்கும் விசுவநாதனுக்கும் நிகழ்ந்த வாட்போரின் ஒப்பந்தப்படி,



அவர்கள் விசுவநாதனுக்கு எதிராகப் படை திரட்டி வந்து ஆட்சியைக் கைப்பற்ற முயலுதற்குரிய உரிமையை இழந்து விட்டிருந்தார்கள். இனி வேறு யாரை முன்னிட்டுக் கொண்டு மறக்குலத் தலைவர்கள் புரட்சிக் கொடியை எழுப்புவது? மேலும், மேற்கண்ட அந்த ஒப்பந்தத்திற்கு, பஞ்ச பாண்டியர்களின் படைத் துணைவர்கள் என்ற முறையில் மறவர் தலைவர்களும் ஒரு விதத்தில் கட்டுப்பட்டிருந்தார்கள். இவற்றையெல்லாம் யோசிக்கும் போது, அரியநாதன் கூறிய ஏற்பாட்டை ஏற்றுக் கொள்வதே அறிவுடைமையென்று தோன்றியது அத்தலைவர்களுக்கு!

அப்போது உருவானவைதாம் பாளையங்கள் எனப்படும் குறுநிலப் பகுதிகள்.

பழங்காலத்துக் கூற்றங்களின் அமைப்பு முறையைப் பின்பற்றிப் பாளையங்கள் உருவாக்கினான் தளவாய் அரியநாதன். அப்படி உருவான மறவர் தமிழ்ப் பாளையங்கள் வருமாறு:-

1. இராமநாதபுரம்;
2. புதுக்கோட்டை;
3. சொக்கம்பட்டியென்ற வடகரை;
4. ஏழாயிரம் பண்ணை;
5. நெற்கட்டுஞ் செவ்வல்;
6. வீரகேரளம் புதூர் என்ற ஊற்றுமலை;
7. சிவகிரி;
8. சேத்தூர்;
9. சிங்கம்பட்டி;
10. தலைவன் கோட்டை;
11. கொல்லன் கொண்டான்;
12. அழகாபுரி;

13. ஊர்க்காடு;

14. சுரண்டை;

15. கடம்பூர்;

16. மணியாச்சி;

- முதலியன

அக்காலத்தில் சிவகெங்கை ஒரு தனிப் பாளையமாக உருவாகவில்லை. அது இராமநாதபுரத்தின் ஒரு பகுதியாகவே இருந்து வந்தது.

இந்தப் பாளையங்களின் ஆட்சிப் பொறுப்பு ஆங்காங்கு பரம்பரையாய்க் குறுநில மன்னர்கள் போல் வாழ்ந்து வந்த மறவர் தலைவர்களிடம் ஏற்கெனவே இருந்து வந்ததுதான். அரியநாதன் புதிதாக அவர்கட்கு எதையும் கொடுத்து விடவில்லை. ஆனால், அந்தப் பரம்பரையான ஆட்சி உரிமையை விசயநகரப் பேரரசின் பிரதிநிதியென்ற முறையில் விசுவநாதன் அங்கீகரிக்குமாறு வகை செய்தான் அந்த அரசியல் நிபுணன். அதனால் மறவர்களால் நாயக்க அரசுக்கும், நாயக்க அரசினால் மறவர்களுக்கும் எதிர்காலத்தில் எவ்விதத் தொல்லைகளும் இல்லாதிருக்க வகை செய்யப்பட்டது. இந்த ஏற்பாடானது மறவர்கள் நாயக்க அரசு ஆகிய இரு திறத்தினாருக்கும் மன அமைதியை அளித்தது.

ஆனால் விசுவநாத நாயக்கன் அதற்கு மேலும் ஒரு திட்டம் தீட்டினான்.

"என்ன இருந்தாலும், தமிழர்களின் இந்தப் பணிவு ஒரு நீறுபூத்த நெருப்புப் போன்றதாகும். அது முற்றிலும் அணைந்துவிட்டதாக மனப்பால் குடித்துக் கொண்டு, நாம் அயர்ந்து விடக்கூடாது!" என்று அவன் உள்ளம் உறுத்திக் கொண்டிருந்தது.



அவன் எண்ணத்துக்கு ஏற்றாற்போல், லக்கண்ணா, மாடண்ணா கால முதற்கொண்டே தமிழகத்தில் ஏராளமான ஆந்திர மக்கள் குடியேறியிருந்தார்கள். படைவீரர்களாகவும் அரசப் பிரதிநிதியின் பணியாள்களாகவும் வந்தவர்களைத் தவிர, பசியாலும், பட்டினியாலும் வாடிப் போய் தமிழகத்திற்கு பிழைக்க வந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். இவர்களெல்லாம் தமிழர்களுக்கும் ஆந்திர நாயக்கர்களுக்கும் மூண்டெழுந்த பகைமையின்போது, தம் இனப்பற்றினால் இயல்பாகவே ஆந்திரர்களை ஆதரித்து நின்றார்கள். இந்த அருந்தொண்டுக்குக் கைம்மாறு கிடைக்காமல் போகுமா? கிடைத்தது. அவரவர்கள் தரத்திற்கும் தகுதிக்கும் ஏற்ற வகையில், அவர்கட்கு நில மான்யங்கள் வழங்கப்பட்டன. பலருக்குப் பதவி உயர்வு கிடைத்தது. இதன் பயனாக, தமிழகத்தின் பல பகுதிகளில் குறிப்பாகத் தென்பாண்டி நாட்டின் கீழைப்பகுதி முழுவதிலும் பழங்குடிமக்களாகிய தமிழர்கள் அருகிப் போய் கம்பளத்தார்கள், நாயுடுக்கள், நாயக்கர்கள், வன்னியர்கள் முதலிய ஆந்திர இனத்தவர் பெருகி நிறைந்திருந்தனர். இப்படி ஆந்திரர்கள் மிகுந்திருந்த பகுதிக்ளையும் தனித்தனிப் பாளையங்களாகப் பிரித்து அவைகளின் ஆட்சிப் பொறுப்பையும் ஆங்காங்குள்ள ஆந்திரத் தலைவர்களிடமே ஒப்படைத்தான் விசுவநாத நாயக்கன்.

இப்படிப்பட்ட தெலுங்குப் பாளையப்பட்டுகளைத் தமிழ் மறவர் பாளையங்களைச் சுற்றித் தந்திரமாக அமைத்திருந்தான் விசுவநாத நாயக்கன். அதன் நோக்கம் என்ன? மறவர் பாளையங்கள் தன் ஆட்சியை எதிர்க்கு மானால், அப்படி எதிர்க்கின்ற தமிழ்ப் பாளையங்களைத் தெலுங்குப் பாளையங்கள் அப்படியப்படியே மடக்கிக் கொள்ள வேண்டும் என்பதுதான்! இம்மாதிரித் தெலுங்குப் பாளையங்கள் தென்பாண்டிச் சீமையில் மட்டுமல்ல, கோவை, சேலம், திருச்சி மாவட்டங்களிலும் அமைக்கப் பட்டிருந்தன. அவை வருமாறு:-

1. எட்டையபுரம்;
2. மேல்மாந்தை;
3. காடல்குடி;
4. ஆற்றங்கரை;
5. நாகலாபுரம்;
6. குளத்தூர்;
7. கோல்வார்ப்பட்டி;
8. மாவாலி;
9. கொல்லன்பட்டி;
10. அம்மைநாயக்கனூர்;
11. நிலக்கோட்டை;
12. போடிநாயக்கனூர்;
13. கோம்பை;
14. தேவாரம்;
15. கண்டமநாயக்கனூர்;
16. தொட்டப்பநாயக்கனூர்;
17. காமயநாயக்கனூர்
18. மாதவ நாயக்கனூர்
19. தும்பிச்சி நாயக்கனூர்;
20. ஏழுமலை;
21. கவுண்டன் கோட்டை;
22. கன்னிவாடி;
23. விரூபாட்சி;
24. ஆய்க்குடி;
25. எமகேலாபுரம்;
26. ஒன்பதூர்;
27. கூழப்பநாயக்கனூர்;
28. இரசக்கநாயக்கனூர்;



29. சத்திரப்பட்டி;
30. மாத்தூர்;
31. மருங்காபுரி;
32. செங்குறிச்சி;
33. கடவூர் என்ற பிள்ளை விழுங்கி;
34. இராமகிரி;
35. இடையகோட்டை
36. தோகைமலை;
37. வீரமலை;
38. வெள்ளியகுன்றம்;
39. சிறுபாலை;
40. மாம்பாறை;
41. பள்ளியப்பநாயக்கனூர்;
42. எரியோடு;
43. சொக்கம்பட்டி;
44. மாறனூற்று;
45. தவசிமேடு;
46. அம்பாத்துறை;
47. தேவதானப்பட்டி;
48. தொட்டியன் கோட்டை;
49. அம்பலத்தாறு;;
50. மறவநாடு;
51. பழனி

இவற்றைத் தவிர, கம்பம் என்ற இடத்தில் தன் ஆட்சிக்கு எதிராகப் புரட்சி செய்த சோழ மரபினை அடக்கியதற்காக, தன் தளபதி ராமபத்திர நாயக்கனுக்கு வைகையாற்றின் வடகரையில் வடகரையென்ற பெயரோடு ஒரு பாளையத்தைப் பரிசாக, அளித்தான் விகவநாத நாயக்கன்.

மேற்கூறியவையெல்லாம் பெரும்பாலும் கம்பளத்தாரின் பாளையங்களாகும். இந்தப் பட்டியலில் பாஞ்சாலங் குறிச்சியின் பெயரே காணப்படவில்லையென்பது கவனிக்கத் தக்கது. காரணம் அப்படியொரு பாளையமே அப்போது உருவாகவில்லை. பாண்டியர் காலத்துக் கூற்றங்களிலும் பாஞ்சாலங்குறிச்சியென ஒரு கூற்றம் இருந்ததில்லை. அங்ஙனமிருக்க, 'கெட்டிபொம்முவின் 47 ஆவது பரம்பரை! 600 ஆண்டு ஆட்சி!' என்றெல்லாம் "கட்டபொம்மன் பக்தர்கள்" கதை கட்டித் திரிவது எவ்வளவு பெரிய கேலிக் கூத்தாக இருக்கிறது.

பாளையத்தை ஆளுவோருக்குப் பாளையக்காரர்கள் என்று பெயர். பாளையங்களில் அவர்கள் குறுநில மன்னர்களைப் போலவே விளங்கினார்கள். வரி தண்டுதல், நீதி வழங்குதல், படை வைத்துக் கொள்ளுதல், பாதுகாவல் புரிவது இவையெல்லாம் பாளையக்காரர்களின் பொறுப்பு. பாளையத்தின் மொத்த வருவாயில் மூன்றில் ஒரு பங்கு பாளையத்தின் நன்மைக்காகவும் நிர்வாகத்துக்காகவும் செலவிடப் படவேண்டிய சேமிப்பு நிதியாக வைக்கப்படும். மீதி இரண்டு பங்குகளில் ஒரு பங்கைப் பாளையக்காரர் தம் செலவுக்கு எடுத்துக் கொள்ளலாம்; இன்னொரு பங்கை பேரரசின் பாதுகாப்புச் செலவுக்கு என்று கப்பமாகச் செலுத்த வேண்டும். அத்துடன் போர் எழும்போது பாளையக்காரர்கள் பேரரசுக்குத் தங்கள் படைகளையும் கொடுத்து உதவ வேண்டும். இதுவே பாளைய முறை.

ஆந்திரர்கள் தமிழ் மண்ணில் அமைதியோடு வாழ்வதற்கு அரியநாதன் வகுத்துக் கொடுத்த இந்த ஏற்பாட்டின் காரணமாக, தமிழ்ப்பாளையக்காரர்கள் தங்கள் சீற்றத்தை விட்டுவிட்டுத் தத்தம் பாளையங்களைச் சீர்திருத்துவதில் இறங்கினார்கள்.

காடுகளைக் கலைத்தனர். விளைநிலங்களைப் பெருக்கினர். நீர்ப்பாசன வசதிகளை நிறுவினர்.



கைத்தொழில்களை மக்கள் ஊக்கத்தோடு கைக்கொண்டனர். இதனால் ஆக்கம் பெருகியது. நாட்டின் வாணிபம் வளர்ந்தது.

பாளையங்களிலுள்ள கிராமங்களையும் குடிகளையும் காவல் செய்வதற்குக் குடிக்காவல் என்று பெயர். பாளையங்களுக்கு அருகிலிருந்த, மதுரை அரசுக்குச் சொந்தமான, பொது நிலங்களைக் காவல் புரிவதற்குத் தலைக்காவல் என்று பெயர். நாட்டின் எல்லைப்புறங்களை மதுரை அரசின் சார்பில் காவல் புரியும் முறைக்குத் திசைக்காவல் என்று பெயர். இந்தத் திசைக்காவலுக்காகவும் தலைக் காவலுக்காகவும், பாளையக்காரர்கள் அவர்கள் செலுத்தும் கப்பத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட தொகையைக் கழித்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டார்கள்.

பாளையங்கள் நாயக்கர் ஆட்சியில் சிறிது சிறிதாகப் பெருகின; விரிவடைந்தன. அவை பற்றிய விவரங்கள் பல ஏட்டுச் சுவடிகளிலும், அப்பொழுது நமது நாட்டில் உலவி வந்த கிறிஸ்தவ மதப் பாதிரிமார்களின் குறிப்புக்களிலும் நமக்குக் கிடைக்கின்றன. அவற்றில்கூடப் பாஞ்சாலக் குறிச்சியென்ற ஒரு பெயரே காணப்படவில்லை!

உதாரணமாக ஒன்றைக் கூறலாம். அக்காலத்தில் காம நாயக்கன் பட்டியில் போர்ச்சுக்கீசியப் பாதிரிகளின் முயற்சியால் கிறித்துவ ஆலயம் ஒன்று கட்டப்பட்டது. அதில் குருவாக அமர்ந்த ஓரயி டி-நெல்லோ என்பவர் டி.நோ.எல்லி என்பவருக்கு 1686 இல் சில கடிதங்கள் எழுதியிருக்கிறார். அவர் அப்பகுதிகளில் வாழ்ந்த பாளையக்காரர்களைப் பற்றிய விவரங்களை அக்கடிதங்களில் எழுதியிருக்கிறார். அவற்றில் எட்டய புரத்தைப் பற்றியும் இன்னும் பல கம்பள பாளையங்களைப் பற்றியும் குறிப்புக்கள் காணப்படுகின்றன. ஆனால் பாஞ்சாலங்குறிச்சியைப் பற்றிப் பேச்சே கிடையாது!

18ஆம் நூற்றாண்டில்தான் வரலாற்றிலேயே முதல் முதலாகப் பாஞ்சாலங்குறிச்சி பேசப்படுகிறது. இந்த

உண்மையை ஆராய்ச்சியாளர்கள் கருத்திற் கொள்ள வேண்டும்!

## கெட்டிபொம்மு பரம்பரையின் தோற்றம்

பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் காட்ர கட்டபிரமையா என்ற ஓர் அடைப்பக்காரனால் தொடங்கி வைக்கப்பட்ட இந்தப் பரம்பரை, அதே நூற்றாண்டின் இறுதியில் வீரபாண்டிய கட்டபொம்மன் என்னும் கொள்ளைக்கார கெட்டிபொம்முவோடு முடிவுற்றது.

ஆனால், "கட்டபொம்மன் பரம்பரையினர் பன்னிரண்டாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்திலேயே பாஞ்சாலங்குறிச்சிக்கு அதிபதியாக இருந்து வந்தார்கள்." என்று கட்டபொம்மன் ஆதரவாளர்கள் எழுதியிருக்கிறார்கள். இது சரித்திரத்துக்கு முற்றிலும் மாறுபட்ட கற்பனை; கட்டுக் கதை!

கட்டபொம்மன் மூதாதையர் தமிழகத்திற்கு ஏன் வந்தார்கள் என்பதற்கும் கட்டபெம்மன் ஆதரவாளர்கள் கட்டுக்கதை ஒன்றைக் கையிலே வைத்திருக்கிறார்கள்.

"பல்லாரி நாட்டில் வாடிக்கோட்டை என்னும் ஊரில் பால்ராஜா என்பவன் அரசனாக இருந்தான். அக்காலம் இருந்த தக்காண முஸ்லீம் அரசன், பால்ராஜாவின் பெண் மீது மோகம் கொண்டு, மணம் செய்து கொள்ளத் தூது விட்டான். பெண் கொடுக்கச் சம்மதம் இல்லை; தடுத்துச் சொல்லவும் தைரியமில்லை. ஆகவே, இரவோடு இரவாகப் பால்ராஜ் தன் குடும்பத்துடன் தன்னாடு விட்டுத் தென்னாடு வந்தான். இவ்வழி வந்தவர்களே பாஞ்சாலங்குறிச்சி அதிபர்களாகி நாற்பத்தேழு தலைமுறைகள் அரசாண்டனர்!" இதுவே அந்தக் கதை. இந்தக் கதைக்கு எந்தவிதமான சரித்திரச் சான்றும் கிடையாது.

மாலிகாபூர் தென்னகத்தின் மீது படையெடுத்த காலம் கி.பி. 1310-ம் ஆண்டு. முகமதிய ஆட்சி தக்காணத்தில் முதன் முதலாக ஏற்பட்ட காலம் கி.பி. 1347ம் ஆண்டு. அந்த ஆட்சியை நிறுவியவன் டில்லி சுல்தானின் பிரதிநிதியான ஜாபர் ஹாஸன் பகமனி. முகமதியர்களின் தக்காண ஆதிக்கம் கி.பி. 14ம் நூற்றாண்டில்தான் தொடங்கியது; இது சரித்திரம் கூறும் உண்மை. அப்படியிருக்க, கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் தக்காணத்தில் ஒரு முஸ்லீம் அரசன் எங்கிருந்து வந்து முளைத்தான்? ஆகையால், கட்டபொம்மனின் குல முதல்வன் என்று கூறப்படுகிற பால்ராஜாவிடம் முஸ்லீம் அரசன் பெண் கேட்டான் என்பது வெறும் கற்பனைக் கதையேயன்றி வேறல்ல.



கட்டபொம்மன் ஆதரவாளர்களிலே வேறு சிலர் வேறொரு கதையைக் கூறுகிறார்கள். அதாவது, "பன்னிரண்டாம் நூற்றாண்டில் கொடிய பஞ்சம் வாட்டியதால், ஆதி கட்டபொம்மனைச் சேர்ந்தவர்கள் ஆந்திராவை விட்டு வந்தார்கள்!" என்று அவர்கள் சொல்கிறார்கள். இதுவும் உண்மைக்குப் புறம்பான கற்பனையே! எப்படியெனில் -

பஞ்சங்கள் ஏற்பட்ட இடங்களையும் காலங்களையும் ஆராய்ச்சி செய்து, சரித்திரப் பேராசிரியர்கள் தெளிவாக எழுதி வைத்திருக்கிறார்கள். இப்படி ஆராய்ந்து எழுதப்பட்ட எந்த நூலிலும், 12-ஆம் நூற்றாண்டில் பஞ்சம் ஏற்பட்டதாகவோ, அதனால் ஆந்திராவை விட்டு மக்கள் பெரும் அளவில் வெளியேறியதாகவோ, யாதொரு குறிப்பும் காணப்படவில்லை.

அதுமட்டுமல்ல; மிகப்பெரிய சரித்திரப் பேராசிரியரும், ஆந்திரப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணை வேந்தருமான திரு. சி.ஆர். ரெட்டியவர்களே, "தமிழகத்தில் ஆந்திரர்களின் குடியேற்றம் ஆரம்பித்தது கி.பி. 14ம் நூற்றாண்டுக்குப் பிறகுதான்!" என்று தெளிவுடக் கூறியுள்ளார்.

மதுரையில் விசுவநாதன் ஆட்சி தொடங்கி கி.பி. 16ம் நூற்றாண்டில்தான் ஆந்திரர்கள் பெருமளவில் நம் தாயகத்தில் வந்து தங்கத் தொடங்கினார்கள். இதுவே வரலாறு கூறும் வாய்மை!

கட்டபொம்மனின் பரம்பரையினர் கம்பளத்தார் வகுப்பைச் சேர்ந்தவர்கள். இவர்கள் தொட்டியர் என்றும் அழைக்கப்பட்டார்கள். இந்தத் தொட்டியரில் இரண்டு பிரிவினர் உண்டு. ஒரு பிரிவினர், ஆடுமாடுகளை ஊர் ஊராக ஓட்டிச் சென்று பிழைப்பு நடத்துபவர்கள் மற்றொரு பிரிவினர் பிச்சையெடுத்து வயிறு வளர்ப்பவர்கள். குடு குடுப்பைக் காரர்கள் என்னும் நாடோடிகள் இந்த இரண்டாவது பிரிவைச் சேர்ந்தவர்களேயாவர்.

கம்பளத்தாரில் கொல்லவார், சில்லவார், தோகலவார் முதலிய ஒன்பது வகுப்பினர் இருக்கிறார்கள். (அதனாலே ஒன்பது கம்பளம் என்ற பெயர்) தோகலவார் என்றால் பசு மாடுகளை வைத்திருப்பவர்கள் என்று பொருள். இந்தத் தோகலவார் வகுப்பைச் சேர்ந்தவர்கள்தான் கெட்டிபொம்மு வின் மூதாதையர்.

''கம்பளங்களுள் தோக்கலவார் எனும் குலத்தார்.''
''தெலுங்கு நாட்டி டையிருந்திவண் வந்தவர் தெலுங்கே
இலகுதாய் மொழியாய் வழங்கியல்பினர்...''
''குடல் பசிப்பினும் கொண்டையில் பூவினைச்சூடி,
உடல் மினிக்கியே ஊக்கமுற்றுலவுவார்...''

என்றெல்லாம் இந்தத் தோகலவாரைப் பற்றிப் பேசுகிறது . வீரபாண்டியம் என்னும் கவிதை நூல்.

எனவே, கட்டபொம்மனின் மூதாதையர்கள் ஊர் ஊராக ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டு திரிந்த நாடோடிகளாவர். நிலையாக ஓரிடத்தில் தங்கிப் பழக்கமில்லாத இவர்களை, அரியணையில் அமர்ந்தாண்ட அரச பரம்பரையினர் என்று கயிறு திரிப்பது, வரலாறு அறியாத மக்களை ஏமாற்றுவதற்கான ஓர் எழுத்து வித்தையேயாகும்!



கட்டபொம்மன் பரம்பரையிலேயே, வரலாற்றின் கண்களுக்குப் புலனாகின்ற முதல்வன் காட்ர கட்ட பிரமையா என்பவன்தான். இவன் எட்டயாபுரம் பாளையக்காரனிடம் வெற்றிலை மடித்துக் கொடுக்கும் அடைப்பக்காரனாக வேலை பார்த்து வந்தான். அப்போது எட்டயாபுரத்தில் பாளையக் காரனாக இருந்தவன் பெயர் எட்டப்ப நாயக்கன்.

அடைப்பக்காரர்களுக்கு எப்போதுமே ஒரு நல்ல வாய்ப்பு உண்டு. அடைப்பக்காரன் தன் எஜமானுக்குப் பக்கத்திலேயே இருந்து அவருக்கு வெற்றிலைபாக்கு மடித்து கொடுத்து, கைகால்களைப் பிடித்து விட்டு, அவரை அடிக்கடி புகழ்ந்து, மாற்றாரை மட்டமாகப் பேசி, அவரது அன்பைப் பெற்றுவிடுவான். அப்புறம் எஜமானிடம் அந்த அடைப்பக்காரன் கேட்டதெல்லாம் கிடைத்துவிடும்!

காட்ர கட்ட பிரமையாவின் குடும்பத்தினர் விறகு வெட்டிப் பிழைத்து வந்தவர்கள். எட்டயாபுரம் பாளையத்தில அடைப்ப வேலை கிடைத்ததும், அவன் விறகு வெட்டும் வேலையை விட்டு விட்டான்.

எட்டயாபுரம் பாளையத்தை அடுத்து, செக்காரப் பட்டி எனும் ஓர் ஊர் இருந்தது. அந்தச் செக்காரப்பட்டியிலுள்ள தரிசு நிலங்களைப் பண்படுத்திப் பயிரிட்டு வந்தார்கள் சில வேளாளர்கள். அதனால் அப்பகுதி மிகவும் வளப்ப முற்றிருந்தது.

வளம் கொழித்த அப்பகுதியைத் தன் பாளையத்தோடு சேர்த்துக் கொள்ளத் திட்டமிட்டான் எட்டப்ப நாயக்கன். அவனுக்கு அந்த ஆசையை உண்டாக்கியவன் வேறு யாருமல்ல; அவனது அடைப்பக்காரனாகிய காட்ர கட்ட

பிரமையாதான்! அந்த ஆசையை எப்படி நிறைவேற்றிக் கொள்வது என்ற சூழ்ச்சியையும் அவனே சொல்லிக் கொடுத்தான். அதன்படி, காட்ர கட்ட பிரமையாவைச் செக்காரப்பட்டிக்கு அனுப்பி வைத்தான் எட்டப்ப நாயக்கன்.

இந்தச் சமயத்தில் விஸ்வநாத நாயக்கனை எதிர்த்து வீழ்ந்த பஞ்ச பாண்டியர்களின் வழித் தோன்றல்களான இளம் பஞ்சவழுதிப் பாண்டியர் என்போர், தென்பாண்டி நாட்டில் வாழ்ந்து வந்தார்கள்.

எட்டப்பனால் சூழ்ச்சித் திட்டத்தோடு அனுப்பப்பட்ட காட்ர கட்ட பிரமையா, செக்காரப்பட்டிக்கு வந்து சேர்ந்தான். அப்போது அந்த ஊரில் ஊர்க்காவல் வேலை காலியாக இருந்தது. வாது, சூது அறியாத அந்த ஊர் மக்கள், அவனுக்கு அந்த வேலையைக் கொடுத்து ஆதரித்தார்கள்.

காட்ர கட்ட பிரமையா அவ்வாறு அங்குக் காலூன்றிக் கொண்டவுடன் வெவ்வேறு இடங்களிலே சிதறிக் கிடந்த தன்னுடைய உறவினர்களையும் இனத்தவரையும் சிறிது சிறிதாகக் கொண்டு வந்து செக்காரப்பட்டியிலே குடியமர்த்தினான். வஞ்சனையறியாத அவ்வூர் வேளாள மக்கள் அதையும் அனுமதித்தார்கள்.

எசமானன் எட்டப்பனுக்கு எல்லையில்லாத மகிழ்ச்சி, தன்னுடைய அடைப்பக்காரன் சொன்னபடி செய்து காட்டுகிறானேயென்று! அவன் ஒருநாள் தன்னை நேரில் வந்து பார்க்கும்படி காட்ர கட்ட பிரமையாவுக்குச் சொல்லியனுப்பினான். அந்த உத்தரவைத் தலைமேல் தாங்கி ஓடோடி வந்தான் காட்ர கட்ட பிரமையா.

செக்காரப் பட்டியை உடனே கைப்பற்றும் பொருட்டு, ஒரு படையை அனுப்பி வைப்பதாகக் கூறினான் எட்டப்பன்.

"படை இப்பொழுது அனுப்ப வேண்டாம். உரிய தருணம் பார்த்து நான் சொல்லியனுப்புகிறேன். அப்போது அனுப்புங்கள்!" என்று கூறிவிட்டு வந்தான் அடைப்பக்காரன்.



செக்காரப்பட்டிக்குத் திரும்பி வந்ததும் பிரமையாவின் சிந்தனை வேறு திசையில் சென்றது. "செக்காரப்பட்டியை எட்டப்பனுக்குப் பிடித்துக் கொடுப்பதைவிட, அதை நாமே கைப்பற்றிக் கொண்டு விட்டால் என்ன?" என்று அவன் எண்ணலானான். ஆனால், அதற்கு வேண்டிய படை பலம் அவனிடம் கிடையாது அல்லவா? எனவே எட்டப்பனையும் இளம்பஞ்ச வழுதிப்பாண்டியர்களையும் மோதவிட்டு, அதன் மூலம் தன் ஆசையை நிறைவேற்றிக் கொள்வது என அவன் தீர்மானித்தான். நேரே இளம்பாண்டியர்களிடம் சென்றான்.

"எட்டப்பன் செக்காரப்பட்டியின்மீது திடீர்ப்படையெடுக்கத் திட்டமிட்டிருக்கிறான். நானும் அவனைப் போல் ஒரு சம்பளத்தானேயானாலும், அவனுடைய இந்த அநீதிச் செயலுக்கு உடந்தையாயிருக்க என் மனம் ஒப்பவில்லை. ஆகையால் நான் ஓடோடியும் வந்து உங்களிடம் உண்மையைக் கூறினேன். நீங்கள் விழிப்போடிருந்து அவனை விரட்டியடிக்க வேண்டும்" என்று கூறினான்.

இதைக் கேட்ட இளம் பஞ்ச பாண்டியர்கள் உடனே தம் படைகளைத் திரட்டி வைத்துக் கொண்டு, எட்டப்பன் வருகைக்காக எதிர்பார்த்திருந்தார்கள்.

"உடனே படைகளை அனுப்பி வைக்கவும்" என்று எட்டப்பனுக்குச் செய்தியனுப்பினான் காட்ர கட்டபிரமையா.

அவனது வஞ்சகத் திட்டத்தைக் கொஞ்சமும் அறியாத எட்டப்பன், ஒரு படையை அனுப்பி வைத்தான்.

தமக்கு வெற்றி நிச்சயம் என் எக்களிப்பில், இரவோடு இரவாகச் செக்காரப்பட்டு எல்லைக்குள் புகுந்தன எட்டப்பன் படைகள்.

எட்டப்பனின் படை உதைக்கப் போகிறதா, அல்லது உதைபடப் போகிறதா என்பதை அறிவதற்கு ஆவலோடு காத்திருந்தான் காட்ர கட்ட பிரமையா.

"எட்டப்பனின் படை வெற்றி பெற்றால், நாம் அவனோடு சேர்ந்து விடுவோம். அன்றி இளம் பஞ்ச பாண்டியர்கள் வெற்றி பெற்றால், அவர்களோடு சேர்ந்து கொள்வோம்!" என்று அவன் திட்டமிட்டுக் கொண்டிருந்தான்.

எட்டப்பன் படைவந்து, செக்காரப்பட்டி எல்லைக்குள் புகுந்ததும், களம் காண காத்திருந்த இளம் பாண்டியர்கள் அதைத் திடீரென்று தாக்கினார்கள். இந்தத் திடீர்த் தாக்குதலைச் சிறிதும் எதிர்பாராத அப்படை, அளவில் பெரியதாயிருந்தாலும் திணறிச் சிதறியோடியது!

போரின் முடிவுக்காகக் காத்திருந்த காட்ர கட்ட பிரமையா உடனே வெளியே வந்தான். இளம்பஞ்ச வழுதிப் பாண்டியர்களைப் பாராட்டினான். அவர்கள் சார்பில் வெற்றி விழாக் கொண்டாடினான். அவனது குள்ளநரித் தந்திரத்தை அறியாது, அவர்களும் அவனைக் கொண்டாடி நன்றி பாராட்டினார்கள். தங்கள் படையிலே அவனை ஒரு தளபதியாக நியமித்தார்கள்.

அப்போதுதான் எட்டப்பனுக்குத் தன்னுடைய அடைப்பக்காரன் புரிந்த துரோகச் செயல் தெளிவாகப் புலனாயிற்று!

அவன் கொதித்தான்; குமுறினான்!

அவனை எப்படியாவது பழி வாங்கியே தீருவது என்று முடிவெடுத்தான்!

ஆனால் அவன் காலத்தில் அது முடியவில்லை. இருந்தாலும் அந்த வஞ்சினம் பரம்பரை பரம்பரையாகத் தொடர்ந்து வந்தது. அதுவே, அந்த எட்டப்பன் வழித்தோன்றலாகப் பல தலைமுறைகளுக்குப் பின் வந்த வேறொரு எட்டப்பன், என்பவன் காட்ர கட்ட பிரமையாவின் மரபில் வந்த நமது கதைத் தலைவன் கொள்ளைக்கார கெட்டி பொம்முவை வெள்ளைக்காரரிடம் காட்டிக் கொடுக்க வைத்தது.



காட்ர கட்ட பிரமையாவின் மகன் (வெறும்) கட்டபிரமையா; இவன் தன் தந்தையைக் காட்டிலும் சூழ்ச்சிக்காரன். எதிரிகளோடு நேருக்கு நேர் நின்று போரிடாமல், அவர்களை மறைந்திருந்து தாக்குவதில் கெட்டிக்காரன். இந்தக் கெட்டிக்காரன் என்ற பொருளில்தான், அவன் வகுப்பைச் சேர்ந்த கம்பளத்தார் அவனைக் கெட்டி பொம்மு என்று அழைத்தார்கள். அதுவே பின்னால் அந்த மரபில் தோன்றியவர்களுக்கெல்லாம் பரம்பரைப் பட்டமாக வந்து விட்டது. இந்தக் கெட்டிபொம்மு என்ற பெயர்தான் தமிழில் கட்டபொம்மன் என்றும் மருவி வழங்கலாயிற்று.

அது மட்டுமல்ல; தன் பெயரில் பாண்டியன் என்ற பெயரைச் சேர்த்துக் கொண்டவனும் இவனேதான். அது எப்படியென்பதை இப்போது காணப்போகிறோம்.

## பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்தின் தோற்றம்

போரில் வெல்லப்பட்ட ஒரு வீரனின் பெயரை வெற்றி கொண்ட வீரனொருவன் தன் பெயரோடு இணைத்துக் கொள்வது, அக்காலத்து மரபுதான்; அதை நாம் மறுக்கவில்லை. ஆனால், கட்டபிரமையா இளஞ்பஞ்ச வழுதிப் பாண்டியர்களை வாளால் வெல்லவில்லை; வஞ்சனையால் வென்றான். உலகிலேயே தொன்மைமிக்க அந்த மன்னர் குலத்துக்குரிய பாண்டியன் என்னும் புனிதமான புகழ் மலிந்த பெயரையும் அநியாயமாக வௌவிக் கொண்டான். தமிழைக் காப்பதாகச் சொல்லிக் கொள்ளும் ம.பொ.சி. அவர்கள், அந்த விழுமிய பெயரைப் புனைந்துகொண்ட புல்லர்தம் மரபினை எப்படித்தான் போற்றத் துணிந்தாரோ, புரியவில்லை!

இளம்பஞ்ச வழுதிப் பாண்டியர்கள் வீரமரணம் எய்தி வீழ்ந்த இடம், காட்டிக் கொடுத்த கட்ட பிரமையாவுக்குக் கிடைத்தது. அவன் அந்தக் காடுகளையெல்லாம் அழித்து விட்டு பல வீடுகளைக் கட்டினான். தன் உற்றார்

உறவினரையும், மற்றும் தன் இனத்தவரான கம்பளத்தினரையும் அங்குக் கொண்டு வந்து குடியேற்றி, அந்த இடத்துக்குப் பாஞ்சாலங்குறிச்சியென்று பெயர் வைத்தான். அதுவே பாஞ்சாலங் குறிச்சி பாளையம் தோன்றிய வரலாறு.

பாளையத்திற்கு ஒரு தலைநகர் வேண்டுமல்லவா? கட்டபிரமையா தான் இருக்கும் இடத்தையே தலைநகராக்கி, அதற்கு ஜெகவீர பாண்டியபுரம் என்று பெயர் கொடுத்தான்.

கட்டபொம்மன் சரித்திரத்தை எழுதியுள்ள பலர், பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை எப்படி உருவாயிற்று என்பதற்கு ஒரு கதை சொல்லுகிறார்கள்.

ஆதி கட்டபொம்மன் ஒரு நாள் வேட்டையாடுவதற்கு வெளியே போனானாம். அப்போது அவனது வேட்டை நாய்கள் ஒரு முயலை விரட்டிச் சென்றனவாம். உயிருக்குப் பயந்து ஓடிக் கொண்டிருந்த அந்த முயல், ஒரு மேடான இடத்தை அடைந்ததும் திடீரென்று திரும்பி வேட்டை நாய்களை விரட்டியதாம்! அந்த மண்ணுக்கு இருந்த வீர மகிமையே இதற்குக் காரணம் என்று கண்டானாம் கட்டபொம்மன். உடனே அந்த இடத்தில் அவன் ஒரு கோட்டையை எழுப்பினானாம்! பாஞ்சாலன் என்ற தன் பாட்டன் நினைவைக் கொண்டு, ஆதி கட்டபொம்மன் இந்த இடத்துக்குப் பாஞ்சாலங்குறிச்சியெனப் பெயர் வைத்தானாம்!

ஒட்டுத் திண்ணையில் உட்கார்ந்து பழங்கதை பேசும் கிழங்களும் பெண்களுமே கேட்டு மகிழக்கூடிய இந்தக் கட்டுக் கதையை, வரலாற்று ஆய்வாளர்கள் தம் காதில் கூடப் போட்டுக் கொள்ள மாட்டார்கள் என்பதை நான் கூறத் தேவையில்லை!

இந்தக் கதையின்படி, பாஞ்சாலங்குறிச்சி யென்ற பெயர் வருவதற்குக் காரணமாயிருந்த அந்த ஆதி கட்ட பொம்மனின் பாட்டன் யார் தெரியுமா? அவன் ஆந்திர நாட்டிலே



பெல்லாரியை ஆண்ட மன்னவன் என்கின்றனர் கட்டபொம்மன் ஆதரவாளர்கள். இவர்கள் குறிப்பிடுகிற காலத்தில் பெல்லாரிப் பகுதியில் பாஞ்சாலன் என்று ஓர் அரசன் இருந்ததாகவே ஆந்திர நாட்டின் வரலாற்றில் காணப்பட வில்லை. இவர்கள் சொல்லுகிற காலத்திற்கு முன்னே பார்த்தாலும் அப்படி அங்கொருவன் இருந்ததாகத் தெரிய வில்லை. பின்னே பார்த்தாலும் இருந்ததாகத் தெரியவில்லை. எனவே, கொள்ளைக்காரக் கெட்டி பொம்முவை ஒரு பழமையான அரச மரபினன் என்று கூறி, வரலாற்றினை அறியாத பொது மக்களை ஏமாற்றும் பொருட்டுப் புனையப்பட்ட கற்பனைக் கூற்றே இது என்பதில் கொஞ்சமும் ஐயமில்லை.

வஞ்சகத்தால் பெற்று வஞ்சகத்தால் உருவாக்கப்பட்ட பாஞ்சாலங்குறிச்சி, பாளையத்தில் கட்டபிரமையா என்ற கெட்டி பொம்மு நாயக்கன் பாளையக்காரன் என்னும் அந்தஸ்தைப் பெற்ற ஆண்டு கி.பி. 1709 என்பது வரலாற்று ஆசிரியர்களின் முடிவு ஆகும். அதாவது, நாம் முன்னரே குறிப்பிட்டுள்ளது போல், பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில்தான் பாஞ்சாலங்குறிச்சிப் பாளையம் தோற்றுவிக்கப்பட்டது. அந்த நூற்றாண்டின் இறுதியிலேயே அதுவும் முடிவடைந்து விட்டது.

1709-ல் பட்டமேற்ற கட்ட பிரமையா 1736 வரை ஆட்சி புரிந்தான். இவன் தன் பெயரை ஜெக வீரபாண்டிய கட்டபொம்ம நாயக்கன் என்று மாற்றி வைத்துக் கொண்டிருந்தான்.

இவன் காலத்தில் மதுரை நாயக்க அரசு வலுவற்ற நிலையில் இருந்தது. எனவே, தன்னைத் தட்டிக் கேட்பார் யாருமில்லையென்ற துணிவோடு, அவன் தன் இனத்தாரையெல்லாம் ஒன்றுசேர்த்து ஒரு பெரும் படையை நிறுவிக் கொண்டான். அந்தப் படையின் துணை கொண்டு, பக்கத்துப் பாளையங்களில் ஊக்கமுடன் புகுந்து கொள்ளை

யடிக்கத் தொடங்கினான். அதே போல் மற்றப் பாளையக்காரர்கள் தன் ஊரில் புகுந்து கொள்ளையடிக்காமலிருப்பதற்காக, அவன் தனக்குச் சொந்தமான பல இடங்களில் பல பாதுகாப்பான கோட்டைகளைக் கட்டிக் கொண்டான்; காவல் நிலைகளை அமைத்துக் கொண்டான்.

அந்தக் காலத்தில், தென் பாண்டி நாட்டிலுள்ள தெலுங்குப் பாளையங்களுக்கெல்லாம் தலைமை தாங்கி நின்றது எட்டயாபுரப் பாளையம். அந்தத் தலைமைப் பதவியைப் பாஞ்சாலங்குறிச்சிக்கு மாற்றிக் கொள்வதற்கு அவன் ஒரு யுக்தி செய்தான். அதாவது,

எல்லாத் தெலுங்குப் பாளையங்களிலுள்ள கம்பளத்து மக்களும் ஜக்கம்மா என்ற தேவதையைத் தங்கள் குல தெய்வமாக வணங்கி வழிபட்டு வந்தார்கள். அந்த ஜக்கம்மாவுக்குப் பாஞ்சாலங்குறிச்சியில் ஒரு கோயில் எடுத்தான் கட்ட பிரமையா. அந்தக் கோயிலிலும் அவன் தன்னையே தலைமைப் பூசாரியாகவும் ஆக்கிக் கொண்டான்.

இந்த ஜக்கம்மா கோயில்தான் அவனையும் அவன் பரம்பரையினரையும் தூக்கிவிட்டது. கட்ட பிரமையாவின் கொடுங் குணங்களையெல்லாம் அவனுடைய கொள்ளைச் செயல்களையெல்லாம் இந்தக் கோயில்தான் மறைத்து நின்றது!

ஜக்கதேவியின் மகிமை எங்கும் பரவத் தொடங்கியது. அம்மையை வழிபடுவதற்காக, தெலுங்குப் பாளையங்களின் மக்கள் எல்லாம் திரண்டு வந்தார்கள். கம்பளத்தினரும் மற்றையோரும் பூசாரி பிரமையாவின் காலில் வீழ்ந்து வணங்கினார்கள். இதனால், கம்பளப் பாளையங்களின் தலைமைப் பதவி நாளடைவில் எட்டயாபுரத்திலிருந்து பாஞ்சாலங்குறிச்சிக்கு மாறிவிட்டது! பாஞ்சாலங் குறிச்சிக்கு ஒரு புதிய புகழையும் மகிமையையும் தேடிக் கொடுத்தாள் தேவி ஜக்கம்மை! இன்றைக்கும் அந்தக் கோவிலுக்குப் பூசாரியாயிருப்பவர் கட்ட பிரமையாவின் வழி வந்தவரே.



பிரம்மாவுக்குக் கர்வம் ஏற்பட்டதாம். உடனே முருகக் கடவுள் அவரைத் தலையில் குட்டிச் சிறையில் தள்ளி விட்டு, தாமே படைப்புத் தொழிலைச் செய்யத் தொடங்கி விட்டாராம். முருகனுடைய புதிய படைப்புகள் எப்படியிருக்கின்றன என்பதைக் கண்டறிவதற்காகத் தேவர்கள் பூவுலகிற்கு வந்தனராம். அப்போது வெள்ளைக்காரர்கள் ராணுவக் கவாத்து செய்து கொண்டிருந்தார்களாம். அவர்களுடைய புதுமையான தோற்றத்தையும் பீரங்கி முழக்கத்தையும் கண்ட தேவர்கள் கதிகலங்கிப் போய் முருகப் பெருமான் காலடியில் ஓடிப் போய் வீழ்ந்து, தங்களைக் காப்பாற்றும்படி வேண்டிக் கொண்டார்களாம். அவ்வாறு ஓடி வந்து விழுந்தவர்களில் பிருகு முனிவர் ஒருவர். அவர் வெள்ளைக்காரர்களின் பாணியில் காற்சட்டை, மேற்சட்டை, தொப்பி முதலியவற்றை அணிந்திருந்தாராம். வெள்ளைக் காரரிடமிருந்து தப்புவதற்காக, அவர் அந்த வேஷத்தைப் போட்டுக் கொண்டதாகக் கூறினாராம். அந்தச் சமயத்தில், அங்கு நாரத முனிவர் தோன்றி, பாஞ்சாலங்குறிச்சியில் கட்டபொம்மன் பிறக்கப் போவதையும், அவர் வெள்ளைக்காரர்களை அடக்கப் போவதையும் முருகப் பெருமானுக்கு எடுத்துச் சொன்னாராம்! இப்படி ஆரம்பமாகிறது கலியுகப் பெருங்காவியம் என்னும் ஒரு கவிதை நூல்!

இதில் கட்டபொம்மன் புகழ்பாடப்படுகிற ஒரேயொரு காரணத்துக்காக, மாபெரும் அபத்தக் களஞ்சியமாய் விளங்கும் இந்த நூலை ம. பொ.சி. பாராட்டுகிறார்! கட்ட பொம்மன் மீது அவர் வைத்திருக்கும் ஓர் அர்த்தமற்ற அபிமானத்தைத் தவிர, இதற்கு வேறு ஏதாவது காரணம் கூற முடியுமா? காய்தல் உவத்தல் இன்றி நடுவுநிலை மனப்பான்மையோடு ஒரு பொருளை ஆராய்ந்து முடிவு காண வேண்டியதே ஆராய்ச்சியாளர்களின் கடமை. அதுவே அவர்களின் இலக்கணம். அதை விடுத்து, ஒரு குறிப்பிட்ட நபர்மீது அல்லது கொள்கைமீது ஒருவர் அபிமானமுடையவராகிவிட்டால்,

அவர் எவ்வளவு பெரிய அறிவுடையவராயிருப்பினும் அவரது அறிவுக்கண் குருடாகிவிடுமென்பதற்கு இதைவிட வேறு சான்று வேண்டுமா?

கட்டபொம்மனிடம் உண்மையான சிறப்புக்கள் இருக்குமாயின், அவை பாராட்டப்படட்டும்; அதை யாரும் மறுக்கப் போவதில்லை. ஆனால், அவனை "நாம்" பாராட்டி விட்டோமென்பதற்காக, அவனிடம் பிற ஆராய்ச்சியாளர்கள் காணும் குறைபாடுகளை மறுப்பதோ, மறைப்பதோ, அன்றி இக் "கலியுகப் பெருங்காவியம்" போன்றவற்றில் வரும் அண்டப் புளுகுகளை ஆதரித்துப் போற்றுவதோ நேர்மையாகாது. தம்மை நம்பிப் பின்பற்றும் மக்கட் பகுதிக்கு நெஞ்சார இழைக்கப்படும் வஞ்சகம் என்றுதான் அதைச் சொல்ல வேண்டும்.

கர்ண பரம்பரைக் கதைகளை சில நாடோடிப் பாட்டுக்களையும் ஆதாரமாகக் கொண்டு, வீரபாண்டியம் என்று ஒரு கவிதை நூல் வெளி வந்திருக்கிறது. இதை எழுதியவர் கவிராஜ் பண்டித ஜெகவீரபாண்டியனார் என்னும் ஓர் உயரிய புலவர். பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் என்னும் உரைநடை நூலையும் இவர் இயற்றியுள்ளார். இந்த உரைநடை நூலைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு கட்டபொம்மனைப் பற்றிய பிற ஆராய்ச்சிகள் எதுவுமே இல்லாமல், பல பேர் பல நூல்கள் எழுதி விட்டார்கள். அவற்றுள் ஒன்றுதான் ம.பொ.சி. அவர்கள் எழுதியுள்ள வீரபாண்டியக் கட்டபொம்மன்!

திரு. ஜெகவீர பாண்டியனார் அவர்கள் கட்டபொம்மனைப் பாராட்டி எழுதிய ஆசிரியர்களிலே தலைமை சான்றவராவார். அவரே இந்தக் கலியுகப் பெருங்காவியத்தைப் பற்றி என்ன சொல்கிறார் தெரியுமா?

''கலியுகப்பெருங் காவியம் எனும் பெயராலே
பொலிவிழந்தவோர் புன்கவி பொய்பல புனைந்து



வலிய வீரவிம் மாபெருஞ் சரிதத்தின் வரம்பை
நலிவு செய்தது நல்லறிவோரதை நாடார்!''

என்கின்றார் அவர்!

அத்தகைய அருமையான சாற்றுக் கவியைப் பெற்ற இந்தக் கலியுகப் பெருங்காவியத்தைத்தான் சிலம்புச் செல்வர் ம.பொ.சி. சிறப்பாகப் போற்றுகிறார்!

கலியுகப் பெருங்காவியம் நாலாயிரம் பாடல்கள் கொண்ட ஒரு புனைசுருட்டுப் புராணம். இதை எழுதியவர் நமச்சிவாயக் கவிராயர் எனப்படும் பஞ்சாட்சரக் கவிராயர். கொள்ளைக்காரக் கட்டபொம்மனின் கத்தி முனைக்குப் பயந்து அவர் உளறிக் கொட்டியிருக்கிறார் அந்தக் "காவியத்"தை!

கட்டபொம்மனைப் பற்றி எத்தனையோ பாடல்கள் இந்த நாட்டில் உலாவி வருகின்றன. இவற்றுள் அச்சில் வந்த பாட்டுக்களைக் காட்டிலும் அச்சில் வராத பாட்டுக்களே அதிகம். அச்சில் வந்தவையெல்லாம் பெரும்பாலும் கட்டபொம்மனைப் புகழும் பாடல்கள்! வராதவையெல்லாம் பெரும்பாலும் இகழும் பாடல்கள்!

முடிமன் என்னும் ஊரில், மலையேறு சின்னு நாயக்கர் என்ற ஒரு கவி இருந்திருக்கிறார். இவர் பாஞ்சாலங்குறிச்சிப் போர் வரலாற்றைக் கும்மியாகப் பாடியிருக்கிறார். இதற்கு கட்டபொம்மு சண்டைக் கும்மியென்று பெயர்.

இதைத் தவிர பாஞ்சாலங்குறிச்சிச் சண்டைக் கும்மியென ஒன்று இருக்கிறது. இதைப் பாடியவர் தம்மை மங்கை வாழ் கவியென்னும் பெயரால் குறிப்பிட்டிருக்கிறார்.

கட்டபொம்மனது இராமநாதபுரத்துப் பேட்டியை வருணிக்கும் கும்மிப் பாடல்களும், எட்டையாபுரத்து ஏட்டுச் சுவடிகளும் வேறு இருக்கின்றன.

தூத்துக்குடிக் கரையோரங்களில் வழங்குகிற நாட்டுப் பாடல்களில் கட்டபொம்மனைப் பற்றிய சில விவரங்கள் இருக்கின்றன.

ஆனால் இவையெல்லாம் வரலாற்று ஆராய்ச்சிக்குப் பயன்படும் அளவில் நம்பத் தகுந்த சான்றுகளல்ல. ஏனெனில் பாட்டுடைத் தலைவனைப் பாராட்டுவதற்கென்றே எழுந்த பாடல்கள் இவை. அவனுடைய கொடுமைச் செயல்களை யெல்லாம் உயரிய வீரச் செயல்களாக முலாம் பூசியும் மிகைப்படுத்தியும் சித்தரித்து விடுவது, அம்மாதிரிப் பாடல்களை இயற்றும் கவிஞர்களின் பரம்பரை மரபு!

பிறகு எதைத்தான் சான்றாக ஏற்றுக் கொள்வது என்று கேட்கிறீர்களா?

கட்டபொம்மன் காலத்திலேயே வாழ்ந்த சிலரும், அவன் காலத்துக்குப் பிறகு வாழ்ந்த பலரும், அவனைப் பற்றிய பல குறிப்புக்களை எழுதி வைத்துச் சென்றிருக்கிறார்கள். இந்த விவரங்கள் டச்சு மொழியிலே, பிரெஞ்சு மொழியிலே, ஆங்கில மொழியிலே, தெலுங்கு மொழியிலே, மலையாள மொழியிலே இன்றைக்கும் நமக்குக் கிடைக்கின்றன.

கட்டபொம்மன் காலத்திலும் அவனுக்குப் பிறகும் வாழ்ந்த பாதிரிமார்கள், மற்றும் பல வெளிநாட்டவர்கள் ஆகியோரது கூற்றுகளில், வரலாற்றுக்கு உதவும்படியான செய்திகள் நிரம்ப இருக்கின்றன.

கட்டபொம்மனைப் பற்றிய குறிப்புகளைக் கொண்ட பட்டயங்கள் பல நமக்குக் கிடைத்திருக்கின்றன. பாளையங்களின் பழமையான ஓலைக் சுருணைக்குள்ளே தலைமுறை தலைமுறையாக ஒளிந்து கொண்டிருந்த பல ஏட்டுச் சுவடிகள் நமக்கு அகப்பட்டிருக்கின்றன.

இவையே வரலாற்று ஆசிரியர்களால் ஏற்றுக் கொள்ளத் தக்க நம்பகமாக சான்றுகளாகும். இத்தகைய சான்றுகளை



ஆதாரமாகக் கொண்டே நாம் இந்தக் கட்டபொம்மன் ஆராய்ச்சியில் இறங்கியுள்ளோம்.

### சாதிக்கான், அப்பாஜிராவ், அன்வார்கான்

வரலாற்றுக்கு அறிமுகமான காட்ர கட்ட பிரமையா தான் கட்டபொம்மனின் குல முதல்வன். அடுத்தபடியாக வந்தவன் அவன் மகன் கட்ட பிரமையா. இவன்தான் கட்ட பொம்மன் அல்லது கெட்டிபொம்மு என்ற பட்டத்தை முதல் முதலாகப் பெற்றவன். பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்தை நிறுவிய வனும் இவனேதான். தன் பெயரை ஜெகவீரபாண்டிய கட்டபொம்மன் என மாற்றி வைத்துக் கொண்டிருந்த இவன், கி.பி. 1709 முதல் 1736 வரையில் பாளையக்காரனாகப் பதவியேற்றிருந்தான்.

இவனுக்குப் பிறகு, இவன் மகன் பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன் என்பவன் பாஞ்சாலங்குறிச்சியின் பாளையக்காரன் ஆயினான். இவன் காலம் கி.பி. 1736 முதல் 1760 வரை.

இவனுக்குப் பிறகு பட்டத்துக்கு வந்தவன் இவன் மகன் ஜெகவீரபாண்டிய கட்டபொம்மன். அதாவது, இவனது பாட்டனாகிய கட்டபிரமையா வைத்துக் கொண்டிருந்த புனை பெயரையே இவனுக்கு இயற்பெயராக இட்டிருந்தார்கள். இவன் 1760 முதல் 1790 வரை பாளையக்காரனாயிருந்து வந்தான்.

இவனுடைய மகன் தான் ம.பொ.சிக்கு உரியவனான வீரபாண்டிய கட்டபொம்மன். இவன்தான் கடைசிக் கட்ட பொம்மன். இவன் பதவிக் காலம் 1790 முதல் 1799 வரையில். இவனோடு கட்டபொம்மன் பரம்பரையே முடிந்து விட்டது; பாஞ்சாலங்குறிச்சிப் பாளையமும் இல்லாமற் போய் விட்டது.

பின்னால் வரப்போகும் சில வரலாற்று ஆராய்ச்சிகளைத் தெளிவாகப் புரிந்து கொள்ளும் பொருட்டு, அந்தப்

பரம்பரையினரைப் பின்வருமாறு வரிசைப்படுத்திக் கொள்வோமாக:-

1. காட்ர கட்ட பிரமையா - குல முதல்வன்

2. கட்டபிரமையா என்ற முதலாம் ஜெகவீரப் பாண்டிய கட்டபொம்மன் - கொள்ளுப் பாட்டன். (காலம் 1709 - 1736)

3. பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன் (காலம் 1736 - 1760 - பாட்டன்)

4. இரண்டாம் ஜெகவீரபாண்டிய கட்டபொம்மன் (காலம் 1760 - 1790 - தந்தை)

5. வீரபாண்டிய கட்ட பொம்மன் (காலம் 1790 - 1799) - ம.பொ.சி. கட்டபொம்மன்

இதிலே, வீரபாண்டிய கட்ட பொம்மனின் தந்தையாகிய ஜெகவீரபாண்டிய கட்டபொம்மனும் அவனது பாட்டனாகிய ஜெகவீரபாண்டிய கட்டபொம்மனும் ஒரே பெயரினை உடையவராகயிருக்கவே, அதனால் குழப்பமடைந்த சில நூலாசிரியர்கள் கொள்ளுப்பாட்டன் காலத்திய சில நிகழ்ச்சிகளை அப்பன் காலத்தில் நடந்ததாய்த் தவறாய் எழுதி வைத்திருக்கிறார்கள். இந்தத் தவற்றை முதன் முதலில் மதுரைக் கவிராஜ பண்டிதர் ஜெகவீரபாண்டியனார் செய்ய, மற்றவர்களும் அதைப் பின்பற்றிவிட்டார்கள். அது எப்படியென்றால்,

மதுரை அரசி மீனாட்சியை வஞ்சித்து அந்த அரசையே கௌவிக் கொண்டானல்லவா சந்தா சாகிப், அப்போது அவன் அந்த அரசுப் பகுதியிலுள்ள பாளையக்காரர்களும் சிற்றரசுகளும் இனிமேல் தனக்கே கப்பம் கட்டி வர வேண்டுமென்று ஓர் உத்தரவு பிறப்பித்தான்.



நீண்ட நாள்களாக நாயக்க மன்னர்களின் தெம்பற்ற நிலையை நன்கு தெரிந்து வைத்துக் கொண்டிருந்த பல பாளையக்காரர்கள், வரி செலுத்தாமலே தவணை சொல்லி வந்தனர். தென்பாண்டி நாட்டு மறவர் பாளையங்கள் இன்னும் ஒருபடி மேலே போயிருந்தன. அவை நாயக்க ஆதிக்கத்தை உதறிவிட்டு, சுதந்திரமாக இருந்து வந்தன.

இந்த நிலையில்தான் சந்தாசாகிப் மதுரை அரசைக் கைப்பற்றி, தன்னுடைய ஆட்சி அதிகாரத்தை நிலைநாட்ட முயன்றான். அதில் அவனுக்கு உதவி புரிய முன் வந்தனர் அவனது இரு சகோதரர்களாகிய புடா சாகிபும், சாதிக் சாகிபும்.

திருச்சியில் இருந்த சந்தா சாகிப் புடா சாகிபை ஒரு படையுடன் மதுரைக்கு அனுப்பினான்

சாதிக் சாகிபை ஒரு படையுடன் அவன் திண்டுக்கல்லுக்கு அனுப்பி வைத்தான். இந்த சாதிக் சாகிபுதான் சாதிக்கான் என்ற பெயரால் தென்பாண்டி நாட்டில் அழைக்கப்பட்டான்.

"சமாதான முறையில் மதுரையிலிருந்தும் திண்டுக்கல் லிலிருந்தும் எவ்வளவு பணம் திரட்டி எனக்கு அனுப்ப முடியுமோ அனுப்பி வையுங்கள். வீணாகச் சண்டையிட்டு உள்நாட்டுப் போரை உண்டாக்கி விடவேண்டாம்!" என்று இவ்விரு சகோதரர்களுக்கும் சந்தா சாகிப் எழுதி அனுப்பி வைத்த கடிதச் சான்று இன்றும் இருக்கிறது.

மதுரை வந்த புடா சாகிப் தன் திறமையினால் பணம் திரண்டி அண்ணன் சந்தா சாகிபுக்கு அனுப்பி வைத்தான். ஆனால் சாதிக்க னால் அது இயலவில்லை. சண்டையிட்டுப் பணம் திரட்டக்கூடாது என்று அண்ணன் தடுத்து விட்டான். இந்நிலையில் குழம்பித் தடுமாறியவாறு, 1736-ம் ஆண்டு அவன் திருநெல்வேலிச் சீமைக்குச் சோர்வுற்று வந்து சேர்ந்தான்.

சந்தா சாகிபின் உள்நோக்கங்கள் வேறு விதமாயிருந்தாலும், வெளியே தான் ஆர்க்காட்டு நவாபின் பிரதிநிதியாகவே ஆட்சிபுரிவதாக அவன் சொல்லிக் கொண்டான். மொகலாய ஆட்சியைத் தமிழகத்தில் அசைக்க முடியாதவாறு வேரூன்ற வைத்துவிடுவதே தன் குறிக்கோள் என்று பெருமைப் பறைசாற்றிக் கொண்டான். ஐதராபாத் நிஜாமின் ஆசியும் அவனை அணைத்து நின்றது. இந்த நிலையில்தான் தென்பாண்டி நாட்டில் கப்பம் திரட்டி வருவதற்காகச் சென்றிருந்தான் சாதிக்கான்.

ஆர்க்காட்டு நவாபின் பிரதிநிதியிடமிருந்து ஒருவன் கப்பம் வசூலிக்க வந்திருக்கிறான் என அறிந்ததும், அப்பகுதியில் உள்ள பாளையக்காரர்கள் கப்பம் தர மறுத்தனர். ஆனால், பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரனான முதலாம் ஜெகவீரபாண்டிய கட்டபொம்மன் மட்டும் தன் சுயநலத்தை முன்னிட்டு வேறு விதமாய் நடந்து கொண்டான்.

அவன் நடந்து கொண்ட விதம் பற்றி ஆர்க்காட்டிலே அகப்பட்ட நவாபுகளின் பழஞ்சுவடிகளில் குறிப்பிடப் பட்டிருக்கிறது. அதைக் கட்டபொம்மன் ஆதவராளர்களும் ஒப்புக் கொள்கிறார்கள். இப்போது நாம் காணப்போகிற சில விவரங்கள் கட்டபொம்மனது எதிர்ப்பாளர்கள் தந்தது அல்ல. பாஞ்சாலங்குறிச்சியானைப் புகழ்ந்து காவியமாகப் பாடப்பட்ட வீரபாண்டியம் என்னும் நூல் இதைப் பற்றிப் பின்வருமாறு கூறுகிறது:-

''சாதிக்கானெனும் பெயரினன் நவாபினல் லுறவோன்
ஆதியாயர சமைச்சியல் புரிந்தநல் அடலோன்
காதுவெம்படைக் கடலுடன் தென்திசை போந்து
நீதி செய்திட நெல்லையம் பதியடைந் திருந்தான்!''

''மாறுபாடுடன் குறுநில மன்னர்கள் பலரும்
மீறிநின்றனர் மிகைபடப் பேசினர் எங்கும்
தாறுமாறுமாய்ச் சண்டைகள் மூண்டன தளர்ந்து
வேறினிச் செய்வதென்னென மிகமன மெலிந்தான்!''



இந்த நிலையில் பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரன் உதவியை சாதிக்கான் நாடுகிறான்.

"வாட்டம் இனிக் கொள்ள வேண்டாம் மன்னவா!" என்று அவனுக்கு நேசக் கரம் நீட்டுகிறான் ஜெகவீரன். தன் படைபலம் கொண்டு மற்றப் பாளையக்காரர்களிடமிருந்து அவனுக்குக் கப்பம் வசூலித்துத் தருகிறான். அந்த உதவிக்காகச் சாதிக்கான் அவனுக்கு அளிக்கும் பரிசுகளைப் பாருங்கள்:

''வருதிறையில் ஆறிலொன்றை வைத்துக்
கொண்டைந்தை மட்டும்
இருமுறையா யெமக்கனுப்பி யிதம்புரிந்து வருகவென
அருமணி மாலையொன்றை அன்புடனே அவனெடுத்துப்
பெருமையுடன் இவன்கழுத்தில் பேணி யணிந்
துபசரித்தான்!''

''தென்னாட்டுக் குன்னை நாம் சின்னநவா
பென்றுவைத்தோம்
முன்னாட்டுமொழிப்படியே முறைபுரிந்து முதன்மை
எய்தி
எந்நாட்டும் புகழ்நாட்டி எஞ்ஞான்றும் எமக்குறவாய்
இந்நாட்டிலிருந்தருளி இனிதுதவி வருகவென்றான்!''

அதாவது, "இனிமேல் வசூலாகும் கப்பத் தொகைகளில் ஆறிலொரு பங்கை நீ எடுத்துக் கொண்டு மீதியை மட்டும் எமக்கு இரண்டு தவணைகளில் அனுப்பிவா!" என்று கூறி, ஜெகவீரபாண்டியன் கழுத்தில் சாதிக்கான் ஒரு விலையுயர்ந்த மணிமாலையை அணிவித்தானாம். அத்துடன் அவனுக்குத் தென்னாட்டின் சின்ன நவாபு என்ற கௌரவப் பட்டத்தையும் அளித்தானாம்!

ம.பொ.சி. கட்டபொம்மனாகிய வீரபாண்டிய கட்ட பொம்மனது கொள்ளுப்பாட்டன் காலத்தில் நிகழ்ந்த இந்த நிகழ்ச்சியை, அவனது தந்தை காலத்தில் நிகழ்ந்ததாகச் சில ஆசிரியர்கள் - தப்பாக எழுதியிருக்கிறார்கள்.

திரு. எம்.எஸ். சுப்பிரமணிய ஐயரவர்கள் வீரகட்ட பொம்மு என்று ஒரு நூல் இயற்றியுள்ளார்.

ஆசிரியை திருமதி வி.கே. லீலா அவர்கள் வீரபாண்டிய கட்டபொம்மு என்ற ஒரு புத்தகம் எழுதியுள்ளார்.

இவ்விரண்டு நூல்களும் கட்டபொம்பனது புகழைப், பரப்புவதற்கென்றே எழுதப்பட்டவை.

எனினும், ஜெகவீரபாண்டியன் சாதிக்கானது கைக்கூலியாக மாறி அவனால் சின்ன நவாபு என்று விருதளிக்கப்பட்ட இந்த வெட்கக் கேடான நிகழ்ச்சியை. அவ்விரு நூல்களின் ஆசிரியர்களும் மறைத்து வைக்க எண்ணாமல் வெளியிட்டிருக்கிறார்கள். உண்மையை மறைக்காத அந்த உத்தமப் பண்புக்காக அவர்களைப் பாராட்ட வேண்டும்.

ஆனால், தலைவர் ம.பொ.சி. அவர்கள் என்ன செய்திருக்கிறார் தெரியுமா?

இந்த விவரம் வெளிப்பட்டால் தன்னால் சிறப்பாகச் சிங்காரிக்கப்பட்டிருக்கும் கட்டபொம்மன் மரபினது புகழுக்கு மாசு ஏற்பட்டு விடுமேயென்று அஞ்சியவராய், அவர் தாம் எழுதியுள்ள வீரபாண்டியக் கட்டபொம்மன் என்ற நூலிலே, இந் நிகழ்ச்சியை வேண்டுமென்றே மறைத்துள்ளார்? இதுவா ஒரு வரலாற்று நூலாசிரியரின் நேர்மைப் பண்பு?

சந்தா சாகிபின் தம்பியாகிய சாதிக்கானிடம் இத்தகைய பட்டங்களையும் பதவிகளையும் பெற்ற முதலாம் ஜெகவீரபாண்டியன் 1736-ஆம் ஆண்டின் இறுதியில் காலமானான். அவனுக்குப் பிறகு அவன் மகன் பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன் பட்டத்துக்கு வந்தான்.

இந்தப் பொல்லாப் பாண்டியன் காலத்தில்தான், மராட்டிய மண்டலத் தலைவனான ராகோஜி பான்ஸ்லே



தமிழகத்தின்மீது படையெடுத்து வந்து, அப்போது ஆர்க்காட்டு நவாபாயிருந்த தோஸ்த் அலியைத் தாமல் செருவுக் கனவாய்ப் போரில் கொன்றொழித்த சம்பவம் நிகழ்ந்தது.

தோஸ்த் அலியைக் கொன்ற பிறகு, ராகோஜியின் படைகள் திருச்சிக்கோட்டையை முற்றுகையிட்டன.

அந்த முற்றுகையின் போது, சந்தா சாகிபைக் கோட்டைக்குள்ளிருந்து வெளியே இழுக்கும் பொருட்டு, அவன் தம்பி புடாசாகிபின் தலையை வெட்டி அவனுக்கு அனுப்பி வைத்தான் ராகோஜி. அப்போதும் சந்தா சாகிப் வெளியே வரவில்லை. அதன்பின், ராகோஜியின் தளபதியான முராரிராவ், சந்தாசாகிபின் மற்றொரு தம்பியான சாதிக்கானைத் தேடித் திருநெல்வேலி பகுதியை நோக்கிச் செல்லலானான்.

இந்தச் சமயத்தில், பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்தைப் பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன் ஆட்சி புரிந்து வந்தான். ஒரு பெரிய தர்மசங்கடம் ஏற்பட்டது அதாவது:-

தன் பரம்பரைக்கே உரியதாகச் சின்ன நவாபுப் பட்டமும் வரி வசூல் அதிகாரமும் அளித்த சாதிக்கானை ஆதரிப்பதா. அல்லது வெற்றி முழக்கம் செய்துவரும் மராட்டியர்கள் பக்கம் சேர்ந்து கொள்வதா என்று புரியாமல், பொல்லாப் பாண்டியனது சித்தம் தத்தளித்தது. எனினும் அவன் மிகவும் தந்திரசாலியாகையால், பாம்புக்குத் தலையையும் மீனுக்கு வாலையும் காண்பிக்கின்ற நயவஞ்சக யுக்தியைக் கையாளுவதென்று தீர்மானித்தான். அவ்வாறே, சாதிக்கானுக்கு ஒரு சிறு படையை உதவிக்கு அனுப்பிவிட்டு, அதே சமயத்தில் முராரிராவுடன் இரகசியமாகத் தொடர்பு கொண்டான். சாதிக்கானின் படை பலத்தையும் அவனது போர்த்திட்டங்களையும் பற்றிய உளவுகளையெல்லாம் அவன் முராரிராவுக்குத் தெரிவித்தான்.

சாதிக்கான் வெற்றி பெற்றால், "உனக்குப் படை உதவி செய்தேனே!" யென்று சொல்லி அவன் பக்கம் சேர்ந்து கொள்ளலாம்; முராரிராவ் வெற்றி பெற்றால், "உனக்கு எதிரியின் உள் மர்மங்களையெல்லாம் உளவு கூறினேனே!" யென்று சொல்லி அவன் பக்கம் சேர்ந்துக் கொள்ளலாம்; இதுவே பொல்லாப் பாண்டியன் கையாண்ட குள்ள நரித் தந்திரம்! போரில் சாதிக்கான் தோற்றான். அவன் தலையை வெட்டித் திருச்சிராப்பள்ளிக்கு அனுப்பி வைத்தான் முராரிராவ்.

சாதிக்கானின் தலையைக் கண்ட சந்தா சாகிப், ராகோஜி எதிர்பார்த்தபடியே திருச்சிக் கோட்டையை விட்டு வெளியே வந்து வீரப்போர் புரிந்து தோல்வியுற்றதையும், ராகோஜி அவனைக் கைது செய்து கொண்டு போய் மாரட்டிய மண்டலத்திலுள்ள சத்தாரா என்னுமிடத்தில் சிறை வைத்ததையும், ராகோஜியின் பிரதிநிதியாக முராரிராவ் திருச்சிக்கோட்டையில் அமர்ந்து ஆட்சி புரியுமாறு நியமிக்கப்பட்டதையும் நாம் ஏற்கெனவே விவரித்துள்ளோம். அந்த முராரிராவின் ஆட்சியில் ஒரு முக்கியமான சம்பவம் நிகழ்ந்தது. திருச்சியில் நிரந்தரமாகத் தங்கிவிட்ட முராரிராவ், அன்று சந்தா சாகிப் ஆண்ட அத்தனை நிலப்பகுதியையும் தன் வசப்படுத்திக் கொண்டான். அந்த நிலப்பகுதிகளில் வரிவசூல் செய்து வருமாறு தன்னுடைய பிரதிநிதிகளை அனுப்பி வைத்தான். அந்தப் பிரதிநிதிகளில் ஒருவன் பெயர் அப்பாஜி ராவ். அவன் திருநெல்வேலிச் சீமைக்கு வந்து சேர்ந்தான்.

மராட்டியர், ஆட்சி இன்னும் உறுதியாக நிலை பெறாதிருந்தமையால், தென்பாண்டிய நாட்டுப் பாளையக் காரர்கள் அப்பாஜிராவிடம் கப்பம் கட்டத் தயங்கினர். மறவர் பாளையங்கள் சுதந்திரக் கொடியைத் தூக்கி நின்றன. எட்டையாபுரம் போன்ற இரண்டொரு தெலுங்குப் பாளையங்கள்கூட, மறவர் பாளையங்களைப் பின்பற்றி மராட்டியப் பிரதிநிதிக்கு ஆதரவு அளிக்க மறுத்து நின்றன.



அந்தச் சமயத்தில் பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன் என்ன செய்தான் தெரியுமா?

காற்று எந்தப் பக்கம் அடிக்கிறதோ அந்தப் பக்கத்தில் சாய்வதிலும், மானத்தை விற்றேனும் தன்னலத்தைக் காத்துக் கொள்வதிலும், தன்னரிகரில்லா மன்னவனாய் விளங்கிய அந்தப் பாஞ்சைப் பதியான், நேரே திருநெல்வேலிக்கு வந்தான். அப்பாஜிராவுக்குத் தண்டனிட்டு நின்றான். "மிலேச்சர்களான மொகலாயர்களை ஒழித்து, தென்னகத்தில் மீண்டும் இந்த தர்மத்தை நிலைநாட்டிய உங்கள் மராட்டிய வீரத்தின் பெருமையே பெருமை!" என்று அவனை வானளாவப் புகழ்ந்தான்.

அதைக் கேட்டு உச்சி குளிர்ந்தான் அப்பாஜிராவ். அதன் பயனாக-

மற்றப் பாளையங்களிலெல்லாம் வரிவசூல் செய்து அந்த வரிவசூலில் ஒரு குறிப்பிட்ட பகுதியைத் தனக்குத் தரகுப் பணமாக (அதாவது கமிஷனாக) எடுத்துக் கொண்டு, மீதியை மராட்டிய அரசுக்குச் செலுத்தி வருமாறு பொல்லாப் பாண்டியனுக்கு அதிகாரம் அளித்தான் அப்பாஜிராவ்! இத்தகைய கமிஷன் ஏஜெண்டைத்தான் மாபெரும் சுதந்திரவீரன் என்று பாராட்டுகிறார் ம.பொ.சி. அவர்கள்!

முன்பு ஒரு சாதிக்கான் வந்தான்; அவன் காலில் வீழ்ந்து கைக்கூலியாக மாறினான் முதலாம் ஜெகவீரபாண்டியன் கட்டபொம்மன்!

இப்போது ஓர் அப்பாஜிராவ் வந்தான்; அவன் காலில் வீழ்ந்து கைக்கூலியாக மாறினான் பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன்!

இத்தகைய ஒரு காட்டிக் கொடுத்த பரம்பரையைத் தான் இதுகாறும் போற்றிப் புகழ்ந்து வந்தோம், அறியாமை காரணமாக!

வரி வசூலிக்கும் அதிகாரத்தைப் பெற்றவுடன் அடங்காத பாளையக்காரர்களையெல்லாம் அடக்குவதற்கு ஓர் ஆலோசனை கூறினான் பொல்லாப் பாண்டியன். அதாவது, திருச்சியிலுள்ள முராரிராவை ஒரு பெரும் படையோடு தென்பாண்டி நாட்டுக்கு வரவழைக்குமாறு அவன் அப்பாஜிராவிடம் தெரிவித்தான். அதன்படியே, அப்பாஜிராவும் முராரிராவுக்கு ஒரு கடிதம் எழுதினான்.

அப்பாஜிராவிடமிருந்து பணத்தை எதிர்பார்த்துக் காத்திருந்த முராரிராவுக்கு, அக்கடிதம் பாளையக்காரர்கள் மீது சினத்தை எழுப்பியது. ஒரு பெரிய படையுடன் அவன் திருநெல்வேலியை நோக்கிப் புறப்படத் தயாரானான். ஆனால் அதற்கு இடையூறாக, அவன் சிறிதும் எதிர்பாராத ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

அதுதான் நிஜாம் உல்முல்கின் தென்னாட்டுப் படையெடுப்பு!

இரண்டு லட்சம் போர் வீரர்களும் எண்பதினாயிரம் குதிரை வீரர்களும் கொண்ட அப்படையை எதிர்த்து நின்று போரிடுவதற்குத் தன்னால் இயலாதென்பதை நன்குணர்ந்த முராரிராவ், தன் கையில் அகப்பட்டதையெல்லாம் சுருட்டிக் கொண்டு ஓடிவிட்டான். அவன் போன பிறகு அப்பாஜிராவுக்கு என்ன வேலை? அவனும் தன் தாயகமாகிய மராட்டிய மண்டலத்துக்குத் திரும்பிப் போய் விட்டான்.

மராட்டியர் ஓடிமறைந்த பிறகு, தென்னகம் முழுவதும் மீண்டும் 1744-ல் ஆர்க்காட்டு நவாபின் வசமாகியது. நிஜாம் உல்முல்கால் நவாப் ஆக்கப்பட்ட அன்வாருதீன், தன் மூத்த மகனாகிய மகபூஸ்கானைத் தனக்கு உதவியாக ஆர்க்காட்டிலேயே வைத்துக் கொண்டு, இளையமகன் முகமதலியைத் தன் பிரதிநிதியாகத் திருச்சிக் கோட்டையில் அமர்த்தி வைத்தான்.



திருச்சியிலிருந்த முகமதலி, அன்வர்கான் என்ற தனது பௌஜ்தார் ஒருவனைத் திருநெல்வேலிச் சீமைக்கு வரிவசூல் செய்து வருமாறு அனுப்பி வைத்தான்.

அன்வர்கான் வருகிறான் என்பதை அறிந்ததும் பொல்லாப் பாண்டியன் திகிலடைந்தான். காரணம், தான் மராட்டியர்களுக்கு உதவியதற்காக முகமதியர்கள் தன் பாளையத்தையே பறித்துக் கொண்டு விட்டால் என்ன செய்வது? இருந்தாலும் ஆளுக்குத் தகுந்தாற்போல், சமயத்துக்கு ஏற்றாற்போல், தன் வேஷத்தையும் பேச்சையும் மாற்றிக் கொள்வதில் அவன் பொல்லாத சமர்த்தன் அல்லவா? எனவே, அன்வர்கான் திருநெல்வேலிக்கு வந்து விட்டான் என்பதை அறிந்ததும், அவன் ஓடோடியும் சென்று அவன் காலில் வீழ்ந்து மண்டியிட்டான். முன்னாள் நவாபின் பிரதிநிதியாகிய சாதிக்கான் தனக்கு அளித்திருந்த சன்னதுகளையும் பட்டயங்களையும் கொண்டுவந்து காட்டினான். தான் ஆர்க்காட்டு நவாபுக்குச் செய்திருக்கும் பழைய பணிகளையெல்லாம் எடுத்துரைத்தான். தான், தன் தந்தை ஜெகவீரபாண்டியன் காலத்திலிருந்தே தாங்கள் அனைவரும் நவாப் ஆட்சிக்கு விசுவாசமாய் நடப்பவர்களென்றும், நவாபின் பிரதிநிதிகளாகப் பக்கத்துப் பாளையங்களில் வரிவசூல் செய்வதற்கு உரிமை பெற்றவர்கள் என்றும் விளக்கிக் கூறி அன்வர்கானின் அடிமைக்கும் அடிமையாகக் கைகட்டி நின்றான் பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன். இவனைத்தான் "மாவீரன்!", "மாற்றானிடம் மண்டியிடாத வீரன்!" என்றெல்லாம் பாராட்டுகிறார் ம.பொ.சி.

முடிந்த அளவுக்குப் போரில் ஈடுபடாமல் பணத்தை வசூலிப்பதையே குறிக்கோளாகக் கொண்டிருந்த முகமதலி, பொல்லாப் பாண்டியன் முன்பு மராட்டியர்களுக்கு உதவியவன் என்பதை மறந்து விட்டு, இப்போது அவன் மண்டியிட்டதை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டான்.

தமிழரசுக் கழகத் தலைவர்களுள் ஒருவராயிருந்த புலவர் ந. சஞ்சீவி அவர்கள், தாம் "கலைமகள்" பத்திரிகையில் எழுதிய கட்டுரையொன்றில், "பொல்லாப் பாண்டியக் கட்டபொம்முவைச் சிறந்த வீரர் என்று கூறுவதற்கில்லை" எனக் குறிப்பிட்டுள்ளது இங்குக் கவனிக்கத் தக்கதாகும்.

### நேரடி மோதல் ஆரம்பம்

இதன் பிறகுதான், தமிழகத்தின் வரலாற்றில் பல மாபெரும் மாறுதல்கள் நிகழ்வுற்றன. சந்தா சாகிப் மராட்டியர்களிடமிருந்து விடுதலை பெற்று முசாபர்ஜங்குடன் சேர்ந்து படை திரட்டி வந்து அன்வாருதீனைக் கொன்று விட்டுத் தானே ஆர்க்காட்டு நவாபாக முடிசூட்டிக் கொண்டது. பினனர் நாசர்ஜங் படையெடுத்து வந்து முசாபர்ஜங்கைக் கைது செய்து முகமதலியை ஆர்க்காட்டு நவாப்பாக்கியது. பிற்பாடு அந்த நாசர்ஜங் தன் தளபதிகளால் கொலையுண்டு போகவே முசாபர்ஜங் விடுதலை பெற்றுச் சந்தாசாகிபை மீண்டும் ஆர்க்காட்டு நவாபாகவும் டூப்ளேயைத் தென்னகம் முழுவதற்கும் நிஜாமின் கவர்னராகவும் நியமித்தது. ஆகிய இவையே அந்த நிகழ்ச்சிகளாகும்.

செஞ்சிக் கோட்டைப் போர்க்களத்தில் நாசர்ஜங் கொலை செய்யப்பட்டு அவனுடைய படைகள் சிதறுண்டு போனதைக் கண்டதும், முகமதலி அங்கிருந்து உயிர் தப்பி யோடித் திருச்சிக் கோட்டையை வந்தடைந்தான்.

அவனுக்கு இப்போது யாருடைய துணையும் கிடையாதாகையால் அவன் சிந்தை கலங்கினான். இந்தச் சமயத்தில் ஆங்கிலேயருடைய உதவியைக்கூட அவனால் நாடிச் செல்ல இயலவில்லை. ஏனெனில் அவன் ஏற்கெனவே தன்னுடைய மடத்தனமான கர்வத்தால் அவர்களது அதிருப்திக்கு ஆளாகியிருந்தான். திருச்சிக் கோட்டை ஒன்றைத் தவிர ஆர்க்காட்டு நவாபின் மற்ற ஆட்சிப் பகுதிகள் அனைத்தும் சந்தாசாகிபின் வசமாகி விட்டிருந்தன. திருச்சிக் கோட்டையும் வேறு எதனோடும் தொடர்பில்லாமல் ஒரு தீவுபோல் தனித்து நின்றது. எவருமற்ற அனாதையாக, மிகவும் மனம் உடைந்து கிட்டத்தட்ட தற்கொலை செய்து கொள்ளும் அளவுக்கு வந்துவிட்டான் முகமதலி. இந்த நிலையில் பிரஞ்சுக்காரர்கட்குப் பணிந்து போவதைத் தவிர முகமதலிக்கு வேறு எந்த வழியும் தோன்றவில்லை.



அவன் டூப்ளேக்கு ஒரு கடிதம் எழுதினான்.

"நான் திருச்சிக் கோட்டையை உங்களிடம் ஒப்படைத்து விடுகிறேன். ஆர்க்காட்டு நவாபுப் பதவிக்கான உரிமையையும் துறந்து விடுகிறேன். எனக்கு வடக்குப் பகுதியில் ஏதேனும் ஓர் உத்தியோகமும், என் கைவசம் உள்ள என் தந்தையின் பொக்கிஷத்தை நானே எடுத்துக் கொள்வதற்கு அனுமதியும் கொடுப்பீர்களானால் எனக்கு அதுவே போதும்!" என்பதே அக்கடிதத்தின் சாரம். ஜானோஜி என்பவன் மூலம் டூப்ளேவுக்கு முகமதலி எழுதியனுப்பிய அந்தக் கடிதத்தை, இப்போது வேண்டுமானாலும் சென்னை எழும்பூரிலுள்ள ரிகார்டு ஆபீசில் நாம் பார்க்கலாம்.

கடிதத்தைக் கண்ட டூப்ளே மிகவும் மகிழ்ச்சியடைந்தான். அந்தச் சமயத்தில் முசாபர்ஜங்கும் அவனோடு பாண்டிச்சேரியில் இருந்தான். அவனை விரைவில் தன் தலைநகராகிய ஐதராபாத்துக்கு அனுப்பி வைத்துவிட்டு, முகமதலியின் விஷயத்தைக் கவனிப்பதாக முகமதலிக்கு எழுதியனுப்பினான் டூப்ளே.

1750ம் ஆண்டில் முசாபர்ஜங் தன் பரிவாரங்களுடன் வடக்கு நோக்கிப் புறப்பட்டான். அவனுக்குத் துணையாகப் புஸ்ஸியென்ற தன் படைத் தலைவனையும் டூப்ளே உடன் அனுப்பி வைத்தான். ஆனால் பாண்டிச்சேரியை விட்டுப் புறப்பட்ட முசாபர்ஜங், உயிரோடு ஐதராபாத் போய்ச் சேரவில்லை. வழியிலேயே அவன் கொலை செய்யப்பட்டான். அதற்குக் காரணமாயிருந்தவர்கள் வேறு யாருமல்ல; நாசர்

ஜங்குக்குத் துரோகமிழைத்த அதே கடப்பா, கர்நூல், சாவனூர் நவாபுகள்தாம்!

அவர்களால்தானே முசாபர்ஜங்குக்கு நிஜாம் பதவி கிடைத்தது. அந்த உதவிக்கு ஈடாக அவர்கள் சாத்தியமில்லாத கோரிக்கைகளை எழுப்பினார்கள். முசாபர்ஜங் அதற்கு ஒப்புக் கொள்ளாமல் போகவே, அவனுடைய பரிவாரங்களும் அவனும் தமது நவாபுகளின் எல்லைக்குள் வந்தவுடன், அம்மூவரும் ஒன்றுகூடி முசாபர் ஜங்கைத் தாக்கினார்கள். ஆனால் முசாபர் ஜங்குக்குத் துணையாகச் சென்ற பிரெஞ்சுத் தளபதி புஸ்ஸி அவர்களையும் அவர்களது படைகளையும் முறியடித்துத் துரத்தினான். நவாபுகள் மூவரும் புறமுதுகிட்டு ஓடினர்.

அவ்வாறு தோற்று ஓடியவர்களைச் சும்மா விட்டிருக்கக் கூடாதா? முசாபர்ஜங் தன் குதிரைமீது ஏறி அவர்களைத் துரத்திச் சென்றான். முதலில் அவன் சாவனூர் நவாபைக் கொன்றான். கடப்பா நவாப் குதிரையிலிருந்து வீழ்ந்து படுகாயமுற்றான். மிஞ்சிய கர்னூல் நவாப் வசமாக மாட்டிக் கொண்டான். முசாபர்ஜங் அவனை அருகில் நெருங்கி வெட்டினான். நாம் தன் சாகப் போகிறோமேயென்று துணிவில் கர்னூல் நவாப் முசாபர் ஜங்கைத் தன் ஈட்டியால் குத்தினான். முசாபர்ஜங் இறந்து வீழ்ந்தான். அந்த இடத்திலேயே கர்னூல் நவாபும் மடிந்து விட்டான்! புஸ்ஸி பெற்ற வெற்றி பயனில்லாது போயிற்று!

முசாபர்ஜங் இப்படித் திடீரென்று இறந்து போனதால், அடுத்த நிஜாம் யார் என்ற கேள்வி எழுந்தது.

முசாபர்ஜங்குக்கு ஒரு மகன் இருந்தான். ஆனால் அவன் வயது வராத சிறுவன். எனவே அவனைப் பட்டத்தில் ஏற்ற இயலவில்லை.

நிஜாம் உல்முல்கின் புதல்வர்களில், காலஞ்சென்ற நாசர் ஜங்குக்கு இளையவர்கள் மூவர் இருந்தனர். நாசர்ஜங்



தென்னாட்டுக்கு வந்தபோது, அவர்களையும் அவன் உடனழைத்து வந்திருந்தான். இப்போது அவர்கள் முசாபர் ஜங்கிடம் கைதிகளாக இருந்தனர். அந்த மூவரில் மூத்தவனான சலபட் ஜங் என்பவனை, படைத் தலைவர்களின் ஒப்புதலோடு, நிஜாமாகப் பிரகடனப் படுத்தினான் பிரெஞ்சுத் தளபதி புஸ்ஸி.

புதிதாகப் பட்டத்துக்கு வந்த சலபட் ஜங், பிரெஞ்சுக்காரர்களுக்கு முசாபர்ஜங் அளித்திருந்த அதிகாரங்கள், சலுகைகள் அனைத்தையும் அப்படியே அங்கீகரித்தான். அவன் மனம் மாறிவிடாமலிருப்பதற்காக, அவன் கூடவே ஐதராபாத்துக்குச் சென்று அங்கேயே தங்கியிருக்குமாறு புஸ்ஸியை அனுப்பி வைத்தான் டூப்ளே.

அதன்பிறகு, தென்னிந்தியா முழுவதுக்கும் நிஜாமின் பேரதிகாரி என்ற முறையில் டூப்ளே ஒரு புதிய பிரகடனத்தை வெளியிட்டான். தென்னகத்தில் வாழும் மன்னர்களாயினும், சரி, பாளையக்காரர்களாயினும் சரி, இனிமேல் எல்லோரும் தன்னிடமோ அல்லது தன் அதிகாரம் பெற்றவர்களிடமோதான் தமது கப்பத் தொகைகளைச் செலுத்த வேண்டும் என்பதே அந்தப் பிரகடனத்தின் சாரம். அது மட்டுமல்ல! முக்கியமான இடங்களில் விசேஷ காலங்களில் பிரஞ்சுக் கொடியையும் பறக்கவிட வேண்டுமென்று அவன் ஆணை பிறப்பித்தான். இந்தக் கட்டளையை அவன் தென்னிந்தியாவில் வியாபாரம் செய்து வந்த ஆங்கிலக் கும்பினிக்கும் டச்சு கும்பினிக்கும்கூட அனுப்பி வைத்தான். முகமதலியை உடனடியாகத் திருச்சிக் கோட்டையைவிட்டு வெளியேறுமாறு உத்தரவு பிறப்பித்தான். இது நடந்தது 1751ம் ஆண்டு.

பிரஞ்சுக்காரர்களை இனியும் வளரவிட்டால், ஆங்கிலேயர்கள் இந்நாட்டை விட்டே துரத்தப்பட்டு விடுவார்கள் என்று அஞ்சினான் கவர்னர் சாண்டர்ஸ். எனவே அவன் அடுத்தபடியாக என்ன செய்வது என்பதைத் தீர்மானிப்பதற்காக, சென்னையில் தனது ஆலோசனை சபையைக் கூட்டினான்.

கவர்னர் சாண்டர்ஸ் ஒரு சாதாரண ஆள் அல்ல: நல்ல புத்திசாலி. "பலம் பொருந்திய ஒருவனை நம் பக்கம் சேர்த்துக் கொள்வதைவிட, பலமிழந்தவனை நம் பக்கம் சேர்த்துக் கொண்டால்தான் நாம் எப்போதும் பலத்தோடு இருக்கலாம்" என்ற கொள்கையில் அவன் நம்பிக்கையுள்ளவன். அந்தச் சமயத்தில் முகமதலிதான் மிகவும் பலமிழந்தவனாய் இருந்தான். பிரஞ்சுக்காரர்கள் சந்தாசாகிபைத் தம் கைப்பாவையாக வைத்துக் கொண்டு காரியங்களைச் சாதித்துக் கொள்வதைப் போல, ஆங்கிலக் கும்பினியார் முகமதலிக்கு ஆதரவு கொடுத்து அவனைத் தாம் சொன்னபடி கேட்கும் ஒரு தலையாட்டி பொம்மையாய் ஆக்கிக் கொள்ள வேண்டும் என்று அவன் தீர்மானித்தான். அக்காலத்து ஆங்கிலக் கும்பினி ரிக்கார்டுகளில், சென்னைக் கவர்னர் சாண்டர்ஸ் எழுதியுள்ள ஒரு குறிப்பில் கீழ்க்கண்டவாறு இருக்கிறது.

"தென்னிந்தியாவில் நம் ஆங்கில ஆட்சி நிலைபெறுவதென்பது, முகமதலியின் அதிருஷ்டத்தைப் பொறுத்திருக்கிறது!

இந்த விதமான முடிவுக்கு வந்தவுடன், சாண்டர்ஸ் உடனே தீவிரமாகச் செயலில் இறங்கினான். முகமதலி பயந்து போய்ப் பிரெஞ்சுக்காரர்களிடம் சரணாகதியடைந்து விடாமலிருக்கும் பொருட்டு, அவனுக்கு உதவியாக ஓர் ஆங்கிலப் படையைத் திருச்சிக்கு அனுப்பி வைத்தான். தஞ்சை அரசனையும் மைசூர் அரசனையும் முகமதலிக்கு ஆதரவளிக்குமாறு சாண்டர்ஸ் கேட்டுக் கொண்டான்.

இதனால் முகமதலிக்குப் பிரெஞ்சுக்காரர்களிடமிருந்த பயம் சிறிது நீங்கியது. ஆங்கிலேயர்களைத் தன் கண் கண்ட தெய்வமாகக் கொண்டு, அவர்கள் காலால் இட்ட கட்டளையைத் தலையால் தாங்கி நடப்பதாக அவன் வாக்களித்தான்.



1751-ம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 15-ம் நாளன்று ஆங்கில கவர்னர் சாண்டர்ஸ் பிரஞ்சு கவர்னர் டூப்ளேக்கு ஒரு கடிதம் எழுதினான். அந்தக் கடிதத்தின் சாரம் வருமாறு:-

"முந்தைய ஆர்க்காட்டு நவாபான அன்வருதீனும், தற்போது நவாபாக இருக்கும் அவன் மகன் முகமதலியும் ஆங்கிலக் கும்பினிக்குத் தரவேண்டிய கடனுக்காகத் தங்கள் ஆட்சிப் பகுதியை ஆங்கிலக் கும்பினியிடம் அடமானம் வைத்திருக்கின்றனர். அந்தக் கடன் திரும்பவரையில், அடமான உரிமையை இழக்க ஆங்கிலக் கும்பினி தயாராக இல்லை. இதன் அறிகுறியாக, திருச்சிக்கோட்டையில் ஆங்கிலக் கொடி ஏற்றப்படும். ஐரோப்பாவில் ஆங்கில பிரெஞ்சு அரசாங்கங்கள் செய்து கொண்ருக்கிற ஒப்பந்தங்களின்படி, இந்தியாவில் ஆங்கிலேயரும் பிரஞ்சுக்காரர்களும், ஒருவருக்குக் கிடைத்துள்ள உரிமைகளில் மற்றவர் தலையிடக் கூடாது என்பது ஒரு நிபந்தனையாகும். இதன்படி டூப்ளே திருச்சியைத் தாக்கினால், அது ஆங்கிலக் கும்பினிக்குள்ள உரிமையில் தலையிடுவதாகிய குற்றமாகும்.

மேலும், தக்காணத்தில் நிஜாம் பதவிக்கு உண்மையில் உரிமை பெற்றவன், பழைய நிஜாம் உல்மூல்கின் மூத்த மகனும் தற்போது டில்லி மொகலாய அரசாங்கத்தில் உயர் பதவி வகிப்பவனுமான காசியா உத்தீன் என்பவன்தான் என்று ஆங்கிக் கும்பினி கருதுகிறது. ஆகவே, பிரஞ்சுக்காரர்களின் உதவியுடன் பதவிக்கு வந்த போலி நிஜாம்களான முசாபர்ஜங், சலபட்ஜங் போன்றவர்களை உரிமை பெற்றவர்களாகச் சட்டப்படி கொள்ள இயலாது. ஆகவே, அப்படிப்பட்டவர்களால் பிரஞ்சுக்காரர்களுக்கும், டூப்ளேக்கும் அளிக்கப்பட்டதாகச் சொல்லப்படும் உரிமைகளும் பதவிகளும் செல்லத்தக்கதல்ல.

"ஆனால், பழைய அதிகாரப் பூர்வமான ஆர்க்காட்டு நவாப் அன்வருதீனும் அவன் மகன் முகமதலியும் எங்கள் கம்பெனியுடன் செய்துகொண்ட ஒப்பந்தங்கள் சட்டபூர்வ

மானவைகள். எனவே, சட்டபூர்வமாக எங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள அடமான உரிமையைக் காப்பாற்றிக் கொள்ளுவதற்கு, நாங்கள் உறுதியுடன் போராடுவோம்."

"பிரஞ்சுக்காரர்கள் முகமதலியைத் தக்கினால், அது ஆங்கிலக் கும்பினியைத் தாக்கியதாகவே கருதப்படும்!"

கடுமை மிகுந்த இக்கடிதத்தைக் கண்டு டூப்ளே சீற்றமடைந்தான். இந்த வேளை பார்த்து, முகமதலியும் ஏறத்தாழ இதே தோரணையில் டூப்ளேக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பி வைத்தான்.

உடனே திருச்சிக் கோட்டையை முற்றுகையிட்டுக் கைப்பற்றுமாறு, டூப்ளே சந்தாசாகிப்புக்குக் கட்டளையிட்டான்.

அவ்வாறே திருச்சிக் கோட்டை முற்றுகையிடப்பட்டது. சந்தாசாகிபின் பெரும்படை முழுவதும் அந்த முற்றுகையில் ஈடுபட்டது.

அந்த முற்றுகையை முறியடிப்பதற்கு யாதொரு வழியும் தோன்றாமல் ஆங்கிலக் கும்பினியார் திகைத்துக் கொண்டிருந்த சமயத்தில் அவர்களுக்கு ஓர் அருமையான யோசனை கூறினான் ராபர்ட் கிளைவ் என்னும் அக்கும்பினியின் குமாஸ்தா ஒருவன். சந்தாசாகிபின் படைகள் திருச்சியில் இருக்கும் இந்த சமயத்தில் அவனது பாதுகாப்பற்ற தலை நகரான ஆர்க்காட்டைத் தாக்கிப் பிடிப்பது என்பதே அந்த அரிய யோசனை. அதன்படி, 1751 ஆகஸ்டு 26-ம் தேதியன்று, கிளைவின் தலைமையில் ஐந்நூறு வீரர்களைக் கொண்ட சிறிய படையொன்று, சென்னையிலிருந்து ஆர்க்காட்டை நோக்கிப் புறப்பட்டது.

கிளைவின் தனிப்பட்ட திறமையினாலும், அவனது வீரர்கள் காட்டிய துணிவாலும் ஆர்க்காட்டை ஆங்கிலேயர் கைப்பற்றினர்!



## கனகராயரும் கட்டபொம்ம நாயக்கனும்

தன் தலைநகர் பறிபோய்விட்டதைக் கேள்விப்பட்டதும் சந்தாசாகிப் அதை மீட்பதற்காக தன் மகன் ராஜா சாகிப் தலைமையில் ஒரு பெரும்படையை ஆர்க்காட்டுக்கு அனுப்பி வைத்தான்.

ஆனால் ராஜாசாகிபால் ஆர்க்காட்டை மீட்க முடியவில்லை. அவன் ராபர்ட் கிளைவிடம் படுதோல்வி அடைந்தான்.

கிளைவின் இந்த வெற்றியால் ஆங்கிலேயரின் மதிப்பு உயர்ந்தது. டூப்ளே இதைக் கண்டு கலக்கமடைந்தான்.

விரைவில் திருச்சிக் கோட்டையைப் பிடித்து முகமதலியைத் தீர்த்துக் கட்டாவிட்டால் தன் திட்டங்களெல்லாம் தலை குப்புறக் கவிழ்ந்துவிடும் என்று அவனுக்குத் திண்ணமாகத் தெரிந்தது. எனவே, லா என்னும் பெயருள்ள ஒரு பிரஞ்சுத் தளபதியைத் திருச்சியை நோக்கி அனுப்பி வைத்தான்.

ஆனால் லாவும் டூப்ளேயும் எதிர்பார்த்ததுபோல, திருச்சிக் கோட்டையைப் பிடிப்பது அவ்வளவு எளிதாயிருக்கவில்லை.

இதையெல்லாம் கண்டு சந்தாசாகிப் மிக ஆத்திரமடைந்தான். அந்த ஆத்திரத்தில் கண்மூடித்தனமான ஒரு காரியத்தைச் செய்தான். அதாவது, பிரஞ்சு வீரர்களின் துணையோடு, திருச்சியைச் சுற்றியுள்ள பகுதிகளையெல்லாம் அவன் வெறித்தனமாகக் கொள்ளையடித்தான்.

இந்தக் கொள்ளையால் தஞ்சைப்பகுதியும் புதுக்கோட்டைப் பகுதியும் மிகவும் பாதிக்கப்பட்டன.

அவ்விரண்டு அரசுகளும் ஆங்கிலேயருக்கு எதிராகத் தன்னோடு சேர்ந்து கொள்ளவில்லையென்ற காரணத்தால்

அவைகளுக்குப் பெருந்தீங்கு விளைவிக்க அவன் திட்டமிட்டான். அதாவது, காவிரியில் கட்டப்பட்டிருக்கும் அணையைப் பிரஞ்சுப்படையை விட்டு உடைக்கச் சொன்னான். அந்த அணை உடைந்தால் தஞ்சை அரசைச் சேர்ந்த பாசனப்பகுதிகள் எல்லாம் பாழாகிவிடும். முகமதலியின் படைகளுக்கு உணவுப் பொருள்கள் புதுக்கோட்டைப் பகுதியிலிருந்து வருகின்றன என்பதற்காக, புதுக்கோட்டைத் தொண்டைமானின் ஆள்களைக் கண்ட கண்ட இடத்தில் பிடித்துச் சித்திரவதை செய்யுமாறு உத்தரவிட்டான் சந்தாசாகிப்.

சந்தாசாகிப் தன் மடத்தனத்தால் பகைத்துக் கொண்ட அவ்விரு மன்னர்களின் ஆதரவையும் பெறுவதற்கு இதுவே தருணம் என்று தீர்மானித்தான் கவர்னர் சாண்டர்ஸ்.

"காவிரி அணையைக் காக்க நாங்கள் இருக்கிறோம். நீங்கள் அஞ்ச வேண்டியதில்லை. பிரெஞ்சுப் படையை நாங்கள் முறியடிக்கிறோம்!" என்று தஞ்சை மன்னனுக்கு அவன் தகவல் அனுப்பினான். அவ்வாறே புதுக்கோட்டைத் தொண்டைமானிடமும் அவன் வலியச் சென்று நேசக்கரம் நீட்டினான்.

இதுவே புதுக்கோட்டைக்கும் ஆங்கிலேயருக்கும் தொடர்பு ஏற்பட்ட வரலாறு. இந்தத் தொடர்பே நாளடைவில் நட்பாக மாறி உறுதிப்பட்டது. அதன் விளைவாக இந்த நாட்டில் ஆங்கிலேயர் ஆட்சி நடத்திய இருநூறு ஆண்டுக் காலத்திலும், வேறு எந்த சுதேச மன்னருக்கும் இல்லாத சலுகைகளை ஆங்கிலேயர் புதுக்கோட்டைத் தொண்டைமானுக்கு அளித்திருந்தனர்.

திருச்சி முற்றுகையை உடைத்தெறிய ஆங்கிலக் கும்பினியின் தலைமைத் தளபதியான லாரன்ஸ் துரையும் ஆர்க்காட்டு வீரனான ராபர்ட் கிளைவும் விரைந்து வந்தனர்.



இந்த திருச்சி முற்றுகையிலேயே நமக்கு அறிமுகமாவதற்குரியவர் இருவர் உண்டு. ஒருவன் பெயர் யூசுப்கான். மற்றவர் பெயர் ஹைதர்அலி.

இவர்களில் யூசுப்கான் தமிழன். இராமநாதபுரம் சீமையைச் சேர்ந்த சைவ வேளாள குடும்பத்தில் பிறந்தவன். இவனது இயற்பெயர் மருதநாயகம்பிள்ளை.

காலச் சூழ்நிலையில் இவன் தன் சொந்த மதத்தைத் துறந்து இஸ்லாம் மதத்தைத் தழுவினான். தன் குலத்தொழிலை விடுத்துப் போர்த் தொழிலில் புகுந்தான். ஆங்கிலக் கும்பினியின் படையில் ஒரு போர் வீரனாகச் சேர்ந்தான்.

திருச்சி முற்றுகையில் யூசுப்கான் காட்டிய தீரத்தைக் கண்டு, ஆங்கிலத் தளபதியான லாரன்ஸே பெரு வியப்படைந்தான். ராபர்ட் கிளைவுக்கு நிகரான ஒரு போர்க் கலைஞனென்று அவன் போற்றப்பட்டான். அவனைப் பற்றி லாரன்ஸ் மேலிடத்துக்கு எழுதியனுப்பிய சிபாரிசின் பேரில் சுதேசிப் படைகளின் கமாண்டராக அவன் விரைவில் நியமனம் பெற்றான்.

இந்தியாவில் ஆங்கில ஆட்சி நிலைபெறுவதற்கு, இவனுடைய சேவை பெரிதும் பயன்பட்டது.

இந்த யூசுப்கான்தான் பின்னர்த் தமிழ் மக்களிடையே கம்மந்தான் கான்சாகிப் என்ற பெயருடன் புகழ்பெற்று விளங்கினான். இவனது வரலாறு மிகுந்த சோகமும் வீரமும் கொண்டதாகும். அதை நாம் பின்னால் ஓரளவு காணப் போகிறோம்.

திருச்சி முற்றுகையில் ஆங்கிலேயருக்கு உதவியாக மைசூரிலிருந்து படைகளோடு வந்தான் நஞ்சராஜ் என்பான். இவனது உதவியாளனே ஹைதர் அலி.

ஹைதர், பெங்களூர்க் கோட்டைத் தலைவனாக இருந்த ஒரு போர் வீரனின் மகன். நஞ்சராஜின் உதவியால் இவன் மேலே வந்தான். தன் வீரத்தின் சிறப்பால் பட்டமும் பதவியும் பெற்றான்.

திருச்சி முற்றுகையின் போது ஐரோப்பியப் படைகள் எப்படிப் போர் புரிகின்றன, என்னென்ன போர்த் தந்திரங்களைக் கையாளுகின்றன என்பதையெல்லாம் இவன் ஊன்றிக் கவனித்து மிக நன்றாகத் தெரிந்து கொண்டான்.

கடைசியாக, தன்னை ஆதரித்து மேலாக்கி வைத்த நஞ்சராஜுவையே கொன்று தீர்த்துவிட்டு, அவன் தானே தளபதியாகவும் மந்திரியாகவும் ஆகிவிட்டான்.

பின்னர், மைசூர் மன்னர் குடும்பத்தைச் சேர்ந்த அத்தனை பேர்களையும் சிறையிலிட்டுவிட்டு, ஹைதர் அலி தானே மைசூர் அரசனாகவும் ஆகிவிட்டான்! இவனது வரலாற்றை விரித்து எழுதுவதென்றால், அதுவே ஒரு சுவைமிக்க தனிக்கதை ஆகிவிடும்! நிற்க.

நேரடியாகப் போரில் இறங்கிவிட்ட ஆங்கிலேயருக்கும் பிரஞ்சுக்காரர்களுக்கும் பெரும் அளவில் பணம் தேவைப்பட்டது.

போருக்காகப் பணம் செலவழிப்பதை இங்கிலாந்தும் விரும்பவில்லை. பிரான்சும் விரும்பவில்லை. ஆகையால், இந்தியாவிலிருந்த ஆங்கிலேயரும் பிரஞ்சுக்காரர்களும் நமக்கு வேண்டிய போர்ச்செலவை இந்தியாவிலேயே வசூலிக்கத் தொடங்கினார்கள். அவர்கள் கவனம் முதன் முதலில் பாண்டி நாட்டைச் சேர்ந்த பாளையக்காரர்கள் பால் திரும்பியது.

அந்தப் பாளையக்காரர்களைத் தன் பக்கம் சேர்த்துக் கொள்ளவும் அவர்களிடம் இயன்ற அளவு பணம் பறிக்கவும் எண்ணினான் டூப்ளே. அதற்காக கனகராய முதலியார் என்னும் தன்னுடைய துபாஷைத் தெற்கு நோக்கு அனுப்பி வைத்தான்.



கனகராய முதலியார் மிகமிகத் தந்திரக்காரர். கையில் துப்பாக்கியுடனும் வாயில் கற்கண்டு மொழியுடனும் அவர் முதலில் மதுரை வந்து சேர்ந்தார்.

மதுரையில் அப்போது ஆர்க்காட்டு நவாபின் பிரதிநிதியாக ஆட்சி புரிந்து வந்தவன் ஆலம்கான் என்பவன். அவன் சந்தாசாகிபுக்கு வேண்டியவன். "சந்தாசாகிபுக்காவும் டூப்ளேக்காகவும் நான் என் உயிரையே வேண்டுமானாலும் உவகையோடு தருகிறேன்!" என்று அவன் உறுதி கூறினான்.

மதுரை விஷயம் முடிந்ததும், முதலியார் திருநெல்வேலிக்குப் புறப்பட்டார். திருநெல்வேலியில் இவர் தங்கியிருந்த இடம் இன்றும் இவர் பெயராலேயே அழைக்கப்பட்டு வருகிறது.

திருநெல்வேலிக்கு வந்ததும் கனகராய முதலியார் தன் ராஜதந்திர வலையை விரித்தார். அந்தப் பகுதியிலுள்ள பாளையக்காரர்களைக் கூப்பிட்டு, அவர்கள் செலுத்த வேண்டிய பழைய வரிபாக்கிகள் முழுவதையும் தள்ளுபடி செய்து அதற்குச் சான்றாக முச்சலிக்கா வாக்களித்தார். இதை நம்பி, வீரமில்லாத கிழக்குப் பாளையக்காரர்களில் சிலர் அவர் காலில் வந்து வீழ்ந்தார்கள். ஆனால் மேற்குப் பாளையக் காரர்கள் அவரைச் சிறிதும் சட்டை செய்யவில்லை.

இந்தச் சமயத்தில் பாஞ்சைப் பதியான் பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன் என்ன செய்தான் தெரியுமா?

அவன் நேரே திருநெல்வேலிக்கு வந்து கனகராய முதலியார் காலில் வீழ்ந்தான். பிரஞ்சுக்காரர்களிடமும் சந்தாசாகிபிடமும் தனக்குள்ள நன்றி விசுவாசங்களை நயம்பட எடுத்துரைத்தான். தன் தந்தைக்கு சாதிக்கினால் அளிக்கப்பட்ட சின்ன நவாபுப் பட்டத்தின் சன்னதுகளைக் கொண்டு வந்து காட்டினான். பின்னர் அவரைப் பாஞ்சாலங்குறிச்சிக்கு அழைத்துச் சென்று பெரிய விருந்துகள் வைத்தான். அதைக் கண்டு மகிழ்ந்துவிட்டார் கனகராய முதலியார்.

கனகராய முதலியார் அங்கிருந்தபடியே டூப்ளேக்கு ஒரு கடிதம் எழுதினார். அக்கடிதத்தில்-

"தென்பாண்டி நாட்டில் பிரெஞ்சுப் பேரரசை வளர்த்து பிரஞ்சுக் கொடியைப் பறக்க விடுவதற்கு, பாஞ்சாலங்குறிச்சிப் பாளையம் பெரிதும் உதவி புரியும். பாஞ்சாலங்க குறிச்சிப் பாளையக்காரரான பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன் பிரஞ்சுக்காரர்கள் பக்கம் சாய்ந்து பல உதவிகளைச் செய்யக் காத்திருக்கிறார். ஆனால் அந்த உதவிகள், பிரஞ்சுக்காரர்கள் முகமதலியையும் ஆங்கிலேயரையும் வென்று திருச்சிக் கோட்டையைக் கைப்பற்றிய பிறகுதான் வெளிப்படையாக இருக்க முடியும். அதுவரையில் அவை மிகவும் இரகசியமாக இருக்கவேண்டும் என்று கட்டபொம்ம நாயக்கர் கேட்டுக் கொள்கிறார்" என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

கனகராய முதலியார் எழுதிய இந்தக் கடிதம் இன்றைக்கும் எழும்பூர் ரிகார்டு ஆபீசில் இருக்கிறது! "எல்லையில்லா வீரம்கொண்ட பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன்!" என்று புகழ்பாடும் ம.பொ.சி. அவர்கள் இதற்கு என்ன பதில் சொல்லுவார்?

### சந்தாசாகிபின் சோக முடிவு

கனகராய முதலியார் பிரஞ்சு அரசின் பிரதிநிதியாகத் திருநெல்வேலியில் வந்து உட்கார்ந்து கொண்டு பல பாளையக்காரர்களைத் துணை சேர்ப்பது, ஆங்கில கவர்னர் சாண்டர்ஸின் காதுக்கு எட்டியது. உடனே அவன் முகமதலியைக் கலந்து ஒரு திட்டமிட்டான். அதன்படி, காப்டன் கோப், லெப்டினண்ட் இன்னிஸ் என்னும் இரண்டு படைகளைத் தெற்கு நோக்கி அனுப்பி வைத்தான்.

இவர்களில் கேப்டன் கோப் தன் படையோடு நேரே மதுரைக்கு வந்து சேர்ந்தான்.



மதுரையை அப்போது சந்தாசாகிபின் பிரதிநிதியாகிய ஆலம்கான் என்பவன் ஆண்டுவந்தான். அவன் திருச்சி முற்றுகையிலீடுபட்டிருந்த சந்தாசாகிபுக்கும் பிரஞ்சுக் காரர்களுக்கும் நிறைந்த அளவில் உணவுப் பொருள்களை மதுரையிலிருந்து அனுப்பிக் கொண்டிருந்தான். அதைத் தடுத்து நிறுத்தவேண்டுமானால், ஆலம்கானிடமிருந்து மதுரையைக் கைப்பற்றியாக வேண்டும். அந்த நோக்கத்தோடு மதுரையை முற்றுகையிட்டான் காப்டன் கோப்.

இது இப்படியிருக்க, லெப்டினண்ட் இன்னிஸ் தன் படையோடு திருநெல்வேலியை வந்து அடைந்தான். அவனுக்கு உதவியாக, முகமதலி தன் ஒன்றுவிட்ட சகோதரனான அப்துர் ரஹீம் என்பவனை உடன் அனுப்பி யிருந்தான். இது நடந்தது 1751-ஆம் ஆண்டின் பிற்பகுதி.

1751 ஆகஸ்டு 15-இல்தான் முதன் முதலாகத் திருச்சிக் கோட்டையில் ஆங்கிலக் கொடி ஏற்றப்பட்டது. 196 ஆண்டுகள் கழித்து, 1947-இல் அதே ஆகஸ்டு 15-ஆம் நாளன்று தான் அந்தக் கொடி அங்கிருந்து இறக்கப்பட்டது.

அதேபோல் இந்திய மன்னர்களிடம் ஆங்கிலேயர்கள் முதன் முதலாகக் கப்பம் வசூலிக்கச் சென்றதும் அந்த 1751-ஆம் ஆண்டில்தான். அதிலும், தென்பாண்டி நாடாகிய திருநெல்வேலிச் சீமைதான் அவர்களது வரிவசூல் படையெடுப்புக்கு முதன் முதலில் இலக்காகியது.

"இன்னிஸ் துரைதான் திருநெல்வேலிக்கு வந்த இங்கிலீஷ்காரருள் முதலானவர். இவரது படையெழுச்சியே திருநெல்வேலி ஜில்லாவில் இங்கிலீஷ்காரர்களின் முதற்படையெழுச்சியுமாம்!" என்கிறது திருநெல்வேலிச் சீமைச் சரித்திரம் என்னும் வரலாற்று நூல். (பக்கம் 45)

வீரபாண்டிய கட்டபொம்மன் காலத்தில்தான் ஆங்கிலேயர்கள் முதன் முதலாகப் படையெடுத்தார்கள் என்கிறார் ம.பொ.சி. காரணம், அவனே முதல் முழக்கம்

செய்தவன் என்று தெரியாத்தனமாய்க் கூறிவிட்டதைச் சாதிப்பதற்காக. ஆனால் உண்மை அதுவல்ல. வீரபாண்டியனது பாட்டனாகிய பொல்லாப் பாண்டியன் காலத்திலேயே ஆங்கிலேயர்கள் படையெடுத்து விட்டார்கள். அப்போது அவனை எதிர்த்து முதல் முழக்கம் செய்தவன் பொல்லாப் பாண்டியனல்ல; புலித்தேவன்! வரலாறு கூறும் இந்த உண்மையை ம.பொ.சி.யின் தமிழரசுக் கழகத்தைச் சேர்ந்த புலவர் ந. சஞ்சீவி போன்றவர்களே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள் என்பது இங்கு ஊன்றிக் கவனிக்கத்தக்கது.

தென்பாண்டி நாட்டில் தங்கள் படையெடுப்பு நடந்த விவரத்தை, பிரிட்டிஷாரே தங்கள் கைப்பட எழுதி வைத்திருக்கிறார்கள். திருநெல்வேலி ஜில்லா மானுவல் 48-ஆம் பக்கத்தில், கீழ்க்கண்ட வரிகள் காணப்படுகின்றன!

"He therefore sent an expedition consisting of 2500 horses and 3090 peons, with a datachment of 90 Europeans under. Lieutenant innis (Probaply the first English man ever seen in Tinnevelly to settle the Government."

இதில் To settle the government என்ற சொற்றொடர் சற்றுக் கூர்ந்து நோக்கத்தக்கது. அதாவது இன்னிஸ் துரை படையெடுத்து வந்ததன் நோக்கம், அரசாங்க விஷயங்களை ஒழுங்குபடுத்துவதற்காகவாம்! ஆங்கிலக் கும்பினிக்கு அப்போது அரசாங்கம் ஏது என்று கேட்கிறீர்களா? பெயரளவுக்கு முகமதலியை ஒரு கைப்பாவையாக வைத்துக் கொண்டு, ஆர்க்காட்டு நவாபின் ஆட்சி உரிமைகளையும் அதிகார உரிமைகளையும் அப்போதே ஆங்கிலேயர்கள் மேற்கொண்டு விட்டார்கள் என்பதுதான் அதன் உண்மையான பொருள்!

திருநெல்வேலியில் இன்னிஸ் துரை தங்கியிருந்த இடத்துக்கு, இன்றும் சட்டைக்காரர் தெரு என்று பெயர் வழங்கிவருகிறது.



இன்னிஸ் துரை ஒரு பெரும் படையோடு வந்திருப்பதை அறிந்ததும், கனகராய முதலியார் இரவோடு இரவாக பாண்டிச்சேரிக்குக் கப்பலேறிப் போய்விட்டார்.

பிரஞ்சுக்காரர்களை நம்பிக்கொண்டிருந்த பொல்லாப் பாண்டிய கட்டபொம்மனுக்கு இது பேரிடியைத் தந்தது. இருந்தாலும் அவன் தன் வழக்கமான தந்திரத்தைக் கையாண்டு சமாளித்துக் கொண்டான். தன் படை பரிவாரங்களுடன் திருநெல்வேலிக்கு ஓடினான். இன்னிஸ் துரையின் காலில் தொழுது வணக்கம் செலுத்தினான். ஆனால் கூடிய வரையில் காசை இழக்காமல் துரையைத் தாஜா பண்ணியே அனுப்பி விடுவதென்று தீர்மானித்தான்.

இதே சமயத்தில் மேற்குப் பாளையக்காரர்கள் ஒரு மகா நாடு கூட்டினார்கள். அவர்கள் அனைவரும் வீர மறவர்கள். மானத்திற்காக உயிரையும் மகிழ்ச்சியோடு கொடுப்பவர்கள். மாற்றானுக்குத் தலைவணங்கி அறியாதவர்கள். அவர்களுக்கெல்லாம் தனிப்பெரும் தலைவராக விளங்கியவர் நெற்கட்டுஞ்செவ்வல் பாளையக்காரரான புலித்தேவர் என்பவர்.

அதேபோல் கிழக்குப் பாளையங்களெனப்படும் கம்பளத்துப் பாளையங்களுக்கெல்லாம் தலைவனாக விளங்கியவன் பொல்லாப்பாண்டிய கட்டபொம்மன். தலைவனே தலை வணங்கிவிட்ட பிறகு, மற்றவர்களைச் சொல்லிக் குற்றமென்ன? அவர்களில் யாருமே இன்னிஸை எதிர்க்கத் துணியவில்லை. காசு விஷயத்திலும் அவர்கள் தம் தலைவனின் வழியைப் பின்பற்றி சாக்குப் போக்குக் கூறி வந்தார்கள்.

ஆனால் புலித்தேவர் தலைமையில் கூடிய மேற்குப் பாளையக்காரர்கள் அப்படிச் செய்யவில்லை. இன்னிஸை எதிர்த்து அவர்கள் வீரமுரசு கொட்டினார்கள். இன்னும் சிறிது காலத்திற்கு இன்னிஸ் திருநெல்வேலியில் தங்குவானே

யானால், அவன்மீது படையெடுத்து வந்து சாடி, அவனைத் தென்பாண்டிய நாட்டை விட்டே துரத்திவிடுவதென்று அவர்கள் தீர்மானித்தார்கள்.

இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டதும், இன்னிஸ் கலக்கமடைந்தான். தன் படை வீரர்களுக்குச் சம்பளம் கொடுக்க அவன் கையில் பணமில்லை. கப்பத் தொகையும் காலணா வசூலாகவில்லை. இந்த நேரத்தில் மதுரையை முற்றுகையிட்டிருந்த காப்டன் கோப்பும் ஆலம்கானிடம் தோல்வியுற்றுத் திருச்சியை நோக்கி ஓடிவிட்டதாக அவன் கேள்வியுற்றான். இதைக் கேட்டதும், அதுவரையில் அவனது படைகளுக்கு உணவுப் பொருள்களை அனுப்பிக் கொண்டிருந்த பொல்லாப்பாண்டியன், அதையும் நிறுத்தி விட்டான். படை வீரர்களின் உணவுக்குக்கூட அவனுக்குத் தட்டுப்பாடு வந்து விட்டது. உண்ண உணவில்லாததால் படை வீரர்கள் குழப்பம் விளைவிக்கத் தொடங்கிவிட்டனர்.

இவற்றையெல்லாம் எப்படிச் சமாளிப்பது என்று அறியாமல் இன்னிஸ் தத்தளித்துக் கொண்டிருந்தபோது, அவனை உடனே திருச்சிக்குத் திரும்பி வருமாறு சாண்டர்ஸிடமிருந்து உத்தரவு வந்தது.

தான் வந்த விஷயங்கள் எதுவுமே நிறைவேறாமல் வெறுங்கையோடு திரும்பும்படி ஆயிற்றே என்று கொதிப்படைந்தான் இன்னிஸ். அதனால், தான் திருச்சிக்குத் திரும்பும் வழியில் எதிர்ப்பட்ட கிராமங்களைக் கொள்ளையடித்தான். குடிசைகளைத் தீயிட்டுக் கொளுத்தினான். ஆயுதமற்ற ஏழை விவசாயிகளைக் கொன்று தள்ளினான்.

இதனால் தமிழ் மக்கள் ஆத்திரமடைந்தார்கள். தமிழ் வீரர்கள் இன்னிஸையும் அவன் படை வீரர்களையும் ஆர்த்தெழுந்து தாக்கத் தொடங்கினர். அதனால் அவன் தன் நேர்வழியை விட்டுக் காடுகளிலும் கழனிகளிலும் புகுந்து மறைந்து மறைந்து ஒரு வழியாகத் திருச்சி வந்து சேர்ந்தான்.



தன் மேலதிகாரி லாரன்சுக்கு இன்னிஸ் அனுப்பிய ரிப்போர்ட்டில், "தமிழர்கள் பார்ப்பதற்குப் பசுபோல் இருக்கிறார்கள்; பாய்ந்தால் புலி போல பாய்கிறார்கள்!" என்று எழுதியிருக்கிறான். இன்னிஸின் இந்த ரிப்போர்ட்டு, அன்றும் தமிழர்கள் தங்கள் மானத்தைக் காத்து நின்றார்கள் என்பதை இன்றும் எடுத்துக் காட்டுகிறது.

திருச்சி முற்றுகையில் சந்தா சாகிபுக்கு உதவியாக லா என்னும் தளபதியின் தலைமையில் டூப்ளே ஒரு பிரெஞ்சுப் படையை அனுப்பி வைத்தானல்லவா? அந்த லா ஒரு தவறு செய்தான். அதாவது ஸ்ரீ ரங்கத்தில் அவன் தன் படை முகாமை அமைத்துக் கொண்டிருந்தான்.

ஸ்ரீ ரங்கம் ஒரு தீவு. காவிரி, கொள்ளிடம் ஆகிய இரண்டு நதிகளுக்கும் நடுவே அது அமைந்திருக்கிறது. ராபர்ட் கிளைவ் தன்னுடைய படையின் ஒரு பகுதியைக் கொள்ளிடத்தின் வடகரையிலும் மற்றொரு பகுதியைக் காவிரியின் தென்கரையிலுமாக நிறுத்தி, ஸ்ரீரங்கத்தை வளைத்துக் கொண்டான். இவ்விரண்டுக்கும் நடுவே சிக்கிக் கொண்ட லாவின் படைகளும் சந்தா சாகிபின் படைகளும் கடுமையான தாக்குதலுக்கு ஆளாயின. அதைத் தாக்குப்பிடிக்க முடியாமல் லா தளர்வுற்றுச் சரணடைந்தான்.

ஆனானப்பட்ட பிரெஞ்சுத் தளபதியே இப்படிச் சரணடைந்து விட்ட பிறகு, வெறும் சந்தாசாகிபால் மட்டும் என்ன செய்துவிட முடியும்? அவனுக்கு உயிர் தப்பினால் போதும் என்ற நிலை ஏற்பட்டு விட்டது.

ஆங்கிலப் படைக்கு உதவியாகத் தஞ்சையிலிருந்து மனோஜி அப்பா என்ற ஒரு தளபதி வந்திருந்தான். சந்தாசாகிப் அவனை இரகசியமாகக் கண்டு பேசி, தன்னை எப்படியாவது பாண்டிச்சேரிக்குக் கொண்டு போய்ச் சேர்த்துவிடுமாறு கேட்டுக் கொண்டான். அதற்கு கைம்மாறாக, மானோஜி அப்பாவுக்கு நிறையப் பணம் கொடுப்பதாக அவன்

வாக்களித்தான். உடனே மானோஜி அப்பா சந்தாசாகிபைக் கைது செய்து, அவனைத் தன் முகாமிலேயே வைத்துக் கொண்டான்.

இந்தச் செய்தியை முகமதலி அறிந்தான். சந்தாசாகிப்பைத் தன்னிடம் ஒப்படைத்துவிடும்படி அவன் மானோஜி அப்பாவுக்குத் தாக்கீது அனுப்பினான். அதே சமயத்தில், அவனைத் தன்னிடம் ஒப்படைக்குமாறு ஆங்கிலத் தளபதி லாரன்ஸ் ஒரு தாக்கீது அனுப்பினான். ஆனால் சந்தா சாகிபைத் தஞ்சைக்குக் கொண்டுவருமாறு தஞ்சை மன்னன் தன் தளபதி மானோஜி அப்பாவுக்கு கட்டளை அனுப்பினான். அது மட்டுமா? சந்தா சாகிபை எப்படியாவது பிரெஞ்சுப் பகுதிக்குக் கொண்டு போய்விடும் நோக்கத்துடன் பிரஞ்சு கவர்னர் டூப்ளே மானோஜி அப்பாவுக்குத் தூதுவர்களை அனுப்பினார். அவனைப் பாதுகாப்புடன் காரைக்காலிலே கொண்டு போய்ச் சேர்த்துவிடுவதற்கு மராட்டியக் குதிரை வீரர்களின் தலைவனாகிய முராரிராவ் முன்வந்தான்.

மானோஜி அப்பாவின் பாடு மிகவும் தர்ம சங்கடமாகி விட்டது. சந்தா சாகிபை இத்தனை பேர்கள் விரும்பி நிற்கும்போது, இவர்களில் யாரிடத்தில் அவனை ஒப்படைப்பது என்று அவன் திகைப்புற்றான். கடைசியாக இந்தச் சிக்கலுக்கு ஒரு எளிதான தீர்வும் அவன் கண்டுபிடித்தான்.

சந்தா சாகிப் அப்போது தளவாய் மண்டபம் என்ற இடத்தில் பக்கிரி வேடத்திலே கைதியாக உட்கார்ந்திருந்தான். இந்த இடத்தில்தான் அவன் ராணி மீனாட்சிக்குப் பொய்ச் சத்தியம் செய்து கொடுத்து ஏமாற்றி, பின்னர் அவளைச் சிறைப்படுத்திக் கொலை செய்தான். அதே இடத்தில், தன் எதிர்காலம் என்ன ஆகுமோ என்ற கிலேசத்தில் மூழ்கியவனாய், இன்று அவன் கண்ணீர் வடித்தவாறு உட்கார்ந்திருந்தான்.

அப்போது மானோஜி அப்பாவின் வீரர்கள் சிலர் அந்த மண்டபத்துக்குள் புகுந்தனர். சந்தா சாகிப் அமர்ந்திருக்கும் இடத்துக்கு வந்தனர். அவனை வாளால் வெட்டி வீழ்த்தினர்.



சந்தா சாகிபின் தலையும் முண்டமும் தனித்தனியாக விழ்ந்தன. முண்டத்தை ஓர் ஒட்டகத்தின் மீது ஏற்றி, அதை முகமதலிக்கு அனுப்பி வைத்தான் மானோஜி அப்பா. தன்னிடம் சந்தா சாகிபை ஒப்படைக்க வேண்டும் என்ற முகமதலியின் தாக்கீதை அவன் இப்படி நிறைவேற்றினான்!

சந்தா சாகிபின் முடிவை எண்ணிய போதெல்லாம் டூப்ளேயின் மனம் தாங்கொணாத் துக்கத்தில் ஆழ்ந்தது. அவனை வைத்துத் தான் ஆடிவந்த அரசியல் சதுரங்கத்தை இனி ஆட முடியாதேயென்று அவன் அகந்தளர்ந்தான். எனினும் அவன் தன் விடாமுயற்சியைக் கைவிடவில்லை. ஹைதராபாத்திலிருந்த புஸ்ஸியின் உதவியால், நிஜாமிடமிருந்து அவன் வடசர்க்கார்ப் பகுதிகளை ஜாகீராகப் பெற்றான். சந்தா சாகிபின் மகன் ராஜா சாகிபை ஆர்க்காட்டு நவாபாகப் பிரகடனம் செய்தான். ஆனால் அது பெயரளவிலேயே நின்று போயிற்று.

ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இதற்குப் பால் பல போர்கள் நடந்தன. இப்போர்களில் பிரஞ்சுப் படைகள் தோல்வி மேல் தோல்வியடைந்தன. இதனால் நாட்டில் பிரஞ்சுக்காரர்கள் கௌரவம் மிகமிகத் தாழ்ந்து போயிற்று.

தாழ்ந்த கௌரவத்தை மீண்டும் தலை நிமிரச் செய்ய, 1753-இல் டூப்ளே திருச்சியைத் தாக்கிப் பிடிக்குமாறு மெயிக்வில்லி என்ற பிரஞ்சுத் தளபதியின்கீழ் ஒரு பெரும் படையை அனுப்பி வைத்தான். அந்தப் படையையும் லாரன்ஸ் முறியடித்து விட்டான்!

இத்தகைய தொடர்ந்த தோல்விகளால் பிரஞ்சுக் கம்பெனியின் பொருளாதாரத்தில் பெருத்த நஷ்டமேற்பட்டது; எனவே, அதற்குக் காரணமாயிருந்த டூப்ளேயை பிரஞ்சு அரசாங்கம் வேலையைவிட்டு நீக்கியது. அவனுக்கு பதிலாகக் கோடியு என்ற புதிய கவர்னர்

பாண்டிச்சேரிக்கு வந்து சேர்ந்தான். இவன் போரை விரும்பாத புது நோக்குக் கொண்டவன். ஆகையால் ஆங்கிலேயரோடு சமாதானமாய்ப் போவதென்று அவன் தீர்மானித்தான். அதை ஆங்கிலேயரின் நல்ல காலமென்றே சொல்ல வேண்டும்.

வேலையிலிருந்து தள்ளப்பட்ட டுப்ளே, பிரஞ்சுக் கம்பெனியின் மீது வழக்குத் தொடர்ந்தான். இந்த வழக்கினால், அவன் கையில் கொஞ்ச நஞ்சம் மிஞ்சியிருந்த பொருளும் போய்விட்டது. அதனால் அவன் நிலை ஒரு பிச்சைக்காரனைப் போல் ஆகிவிட்டது. அவன் பெரிதும் மனமுடைந்தவனாய், பாரிஸின் பரந்த தெருக்களிலே பித்தனாக அலைந்தான்.

வெற்றியும் சோகமும் கலந்த அவனது வரலாறு, 1764ல் அவனுடைய மரணத்தோடு முடிந்தது.

### ஹெறான் படையெடுப்பு

மதுரையில் சந்தா சாகிபின் பிரதிநிதியாக ஆலம்கான் என்பவன் ஆண்டு வந்தானல்லவா? அவன் திருச்சி முற்றுகையின்போது சந்தாசாகிபுக்கு உதவி புரிவதற்காகத் தன் படைகளோடு மதுரையிலிருந்து புறப்பட்டு வந்தான். வந்த இடத்தில் அவன் குண்டடிபட்டுப் போர்க்களத்தே மாண்டு போய்விட்டான்.

மதுரையில் ஆலம்கானுக்கு உதவியாக மூன்று பட்டாணியத் தம்பதிகள் இருந்து வந்தனர். நபிகான் கட்டாக், முகமது பர்க்கி, முகமது மெய்நாக் என்பன அவர்களது பெயர்கள். அவர்களில் முகமது பர்க்கியை வர்க்கத்துல்லா என்றும், முகமது மெய்நார்கை முடேமியா என்றும் பாண்டி நாட்டு மக்கள் அழைத்து வந்தனர்.

ஆலம்கான் இறந்ததும், மதுரைச் சீமையின் ஆட்சியை அந்த மூன்று பட்டாணியர்களும் மேற்கொண்டு விட்டார்கள். இருந்தாலும் சந்தா சாகிபும் பிரஞ்சு கௌரவமும்



வீழ்ச்சியடைந்த பிறகு, முகமதலியையும் ஆங்கிலேயரையும் எதிர்த்து நிற்க தங்களால் இயலாதென்பதை அவர்கள் உணர்ந்தனர். ஆகையால், தங்கள் பதவி போய்விடாதிருக்கும் பொருட்டு முகமதலிக்கு விசுவாசம் தெரிவித்து அவன் பால் தூதுவர்களை அனுப்பி வைத்தனர். ஆனால், அவர்களது உண்மையான நோக்கம் வேறு விதமாயிருந்தது. காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்ள வேண்டும் என்ற கருத்தில், அவர்கள் தம் கையில் கிடைத்ததையெல்லாம் சுருட்டத் தொடங்கினார்கள். மக்களிடம் கிட்டி போட்டு வரி வசூலித்தார்கள். கைமேல் பணம் கிடைக்கும் போலிருந்தால், கோட்டைகளையும் நிலப்பரப்புகளையும்கூட விற்றுவிட முன் வந்தார்கள்.

அந்தச் சமயத்தில், திருவாங்கூரில் மார்த்தண்ட வர்மன் என்பவன் மன்னனாக இருந்தான். தமிழகத்தில் நிலவிய இந்தக் குழப்பமான நிலையைப் பயன்படுத்திக் கொண்டு, தென்பாண்டி நாட்டின் ஒரு பகுதியைத் தன் நாட்டோடு சேர்த்துக் கொண்டுவிட அவன் திட்டமிட்டான். இதற்காகப் பெரும்படையொன்றைத் தயாரித்து, அதை டிலெனாய் என்னும் பெல்ஜிய நாட்டுத் தளபதியைக் கொண்டு ஐரோப்பிய முறையில் பயிற்றுவித்தான்.

மதுரையை ஆண்ட பட்டாணியர்கள் மூவரும் பணப் பேய் பிடித்து அலைகிறார்கள் என்னும் செய்தி, மார்த்தாண்டவர்மன் காதுக்கு எட்டியது. உடனே ஒரு நல்ல தொகையை விலையாகக் கொடுத்து களக்காட்டுக்கும், கன்னியாகுமரிக்கும் இடையிலுள்ள முப்பது மைல் நிலப்பகுதியை, அவன் அவர்களிடமிருந்து எழுதி வாங்கிக் கொண்டு விட்டான்!

1755-ல் ஆங்கிலேயர்க்கும், பிரெஞ்சுக்காரர்களுக்குமிடையே ஓர் ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. அதன்படி, பிரஞ்சுக்காரர்கள், ஆங்கியேலர்களின் அரசியல் நடவடிக்கைகளில் தலையிடுவதில்லையென்று உறுதியளித்

தனர். எனவே, பிரஞ்சுக்காரர்களின் குறுக்கீடு இல்லாமல் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை இந்தியா முழுவதிலும் பரவச் செய்து நிலைநாட்டிவிடுவதென்று ஆங்கிலேயர்கள் தீர்மானித்தனர். அதைச் செயலில் நிறைவேற்றும் நோக்கத்தோடு, ராபர்ட் கிளைவை ஒரு பெரும் படையோடு கல்கத்தாவுக்கு அனுப்பி வைத்தனர்.

இந்த நேரத்தில் நமக்கு ஏற்கெனவே அறிமுகமான ஒருவனைப் பற்றிய சில புதிய செய்திகளை நாம் இங்கு அறிந்து கொள்ள வேண்டியதிருக்கிறது. அவன் வேறு யாருமல்லர் முகமதலியின் அண்ணன் மகபூஸ்கான்.

ஆம்பூர் போரிலே அன்வாருதீன் கொல்லப்பட்ட பொழுது, அவனது மூத்த மகன் மகபூஸ்கான் முசாபர் ஜங்கால் சிறைபிடிக்கப்பட்டுப் பாண்டிச்சேரிக்குக் கொண்டு செல்லப்பட்ட செய்தியை நாம் ஏற்கெனவே அறிந்துள்ளோம். அங்கு அவன் டூப்ளே முன்னிலையில் தன் ஆர்க்காட்டுப் பட்டத்து உரிமையை இழந்து விடுவதாக அறிவித்தான். இந்த அறிவிப்பைப் பயன்படுத்திக் கொண்டுதான் இளையவனான முகமதலியைத் தம் கைக்குப் போட்டுக் கொண்டு பின்னால் அவனை ஆர்க்காட்டு நவாபாக ஆக்கினார்கள் ஆங்கிலேயர்கள்.

முசாபர்ஜங் பாண்டிச்சேரியை விட்டு ஹைதராபாத்துக்குப் போகும்போது, அவன் தன் கூடவே மகபூஸ்கானையும் அழைத்துச் சென்றான். முசாபர் ஜங்கிடமிருந்து தனக்கு ஏதேனும் ஒரு ஜாகிர் கிடைக்கும் என்று மகபூஸ்கான் எண்ணியிருந்தான். ஆனால் மகபூஸ்கானின் போதாத காலம், முசாபர்ஜங் பாதி வழியிலேயே கொலையுண்டு போனான். அவனுக்குப்பின் நிஜாமாகப் பட்டத்துக்கு வந்த சலபட்ஜங், மகபூஸ்கானுக்கு ஜாகிர் எதுவும் வழங்கவில்லை. அதற்குப் பதிலாக, கடப்பா ஜில்லாவில் அவனுக்கு ஒரு சிறு உத்தியோகம் அளித்தான். மகபூஸ்கான் பெருத்த ஏமாற்றத்துக்கு ஆளானான்.



அதன் பிறகு சில ஆண்டுகளுக்கெல்லாம், கர்னாடகத்தில் சந்தா சாகிபும் பிரஞ்சுக்காரர்களும், வீழ்ச்சியடைந்து ஆங்கிலேயரின் கௌரவம் உயர்ந்து விட்டதையும், தன் தம்பி முகமதலி ஆர்க்காட்டு நவாபாகி விட்டதையும் மகபூஸ்கான் கேள்விப்பட்டான். உடனே கடப்பா உத்தியோகத்தை விட்டு விட்டு, திருச்சிராப்பள்ளிக்கு வந்து சேர்ந்தான். இது நடந்தது *1954-ம் ஆண்டு.*

திருச்சியிலிருந்த தன் அன்னையின் காலடியில் வீழ்ந்து கண்ணீர் வடித்தான் மகபூஸ்கான். என்ன இருந்தாலும் பெற்ற தாய் அல்லவா? அவளும் அவனது நிலை கண்டு உருகினாள். அவனை ஆதரிக்கும்படி, தன் சின்ன மகனைக் கேட்டுக் கொண்டாள். தாயின் சொல்லைத் தட்டாமல் முகமதலி அவனை ஒரு படைத்தலைவனாக நியமித்தான்.

இந்த நேரத்தில் ஆங்கிலேயர்கள் மிகவும் பணத்தேவை யுடையவர்களாக இருந்தார்கள். பிரஞ்சுக்காரர்களோடு நடத்திய போர்களினால், அவர்களுக்குள் ஏராளமான பணச் செலவு ஏற்பட்டிருந்தது. அந்தச் செலவை ஈடுகட்டுவதற்காக, ஆர்க்காட்டு நவாபைச் சேர்ந்த பாளையங்களுக்குச் சென்று, பல வருஷங்களாக வசூலிக்கப்படாமலிருந்த கப்பப் பாக்கிகளை வசூலித்து வருவதென்று தீர்மானித்தார்கள். அந்த நோக்கத்தோடு கர்னல் ஹெரான் என்பவன் தலைமையில், மதுரை, திருநெல்வேலிச் சீமைகளை நோக்கி ஒரு பெரும்படை புறப்பட்டுச் சென்றது.

அந்தப் படையில் *500* ஐரோப்பிய வீரர்களும், *20,000* சுதேசி வீரர்களும் இருந்தனர். சுதேசிப்படைகளின் தலைவனான, ம்மந்தான் கான்சாகிபும் கர்னல் ஹெரானோடு அனுப்பி வைக்கப்பட்டான். அதைத் தவிர முகமதலியின் சார்பாக, அவன் அண்ணன் மகபூஸ்கானும் ஒரு பெரிய படையோடு புறப்பட்டான். எல்லாப் படைகளுக்கும் சேர்த்து, கர்னல் ஹெரானே பிரதம தளபதியாக நியமிக்கப்பட்டான்.

இந்தப் படையெடுப்பின் முக்கிய நோக்கங்கள் இவை தான்: 1) தென்பாண்டி நாட்டுப் பாளையக்காரர்களிடம் வரி வசூல் செய்வது, 2) கும்பினியின் அதிகாரத்தைத் தென்பாண்டி நாட்டில் நிலை நிறுத்துவது.

1755 பிப்ரவரி மாதத் தொடக்கத்தில் இப்படை திருச்சியைவிட்டுப் புறப்பட்டு, தெற்கே முப்பது கல் தொலைவிலுள்ள மணப்பாறைக்கு வந்து சேர்ந்தது. ஆர்க்காட்டு நவாப் முகமதலியும் ஹெரானை வழியனு ப்புவதற்காக மணப்பாறை வரையில் வந்தான்.

திண்டுக்கல்லுக்கு அருகே இலட்சுமண நாயக்கன் என்பவன் ஒரு பாளையத்தை ஆண்டு வந்தான். ஹெரானு டைய பெரும்படையைக் கண்டதும், இலட்சுமண நாயக்கனு டைய மக்கள் பக்கத்துக் காடுகளில் ஒளிந்து கொண்டு ஹெரானைத் தாக்குவதென்று முடிவு செய்தனர். ஆனால் இலட்சுமண நாயக்கன் அதை விரும்பவில்லை. ஹெரானை எதிர்த்துத் தன்னால் எதுவும் செய்யமுடியாது என்று அவன் மனம் தளர்ந்தான். எனவே அவன் கேட்ட கப்பத் தொகையைக் கட்டிவிட்டுச் சலாம்போட்டு நின்றான்.

ஆர்க்காட்டு நவாபு பதவி வகித்த தோஸ்த் அலி, சப்தர் அலி, அன்வாருதீன் ஆகிய எல்லோருமே ஐதராபாத் நிஜாமின் அடிமைகள். முகமதலியும் சந்தாசாகிபும் முறையே ஆங்கிலேயருக்கும் பிரஞ்சுக்காரருக்கும் அடிமைகள். மதுரையை ஆண்டு மாண்டு போன ஆலம்கான் சந்தா சாகிபின் அடிமை. எனவே, ஆலம்கானும் சந்தா சாகிபும் ஆங்கிலேயரை எதிர்த்ததும், அதே போல் முகமதலி பிரஞ்சுக்காரரை எதிர்த்ததும், ஓர் அடிமையானவன் தன் எஜமானனுடைய மாற்றானை அந்த எஜமான் சார்பாக எதிர்த்து நடத்திய போராட்டங்களேயாகும். அவ்வடிமைகளின் பெயராலேயே அப்போர்கள் நடைபெற்ற போதிலும், அந்த அடிமைகளின் சுயநலமும் அதில் கலந்திருந்த போதிலும், அவை உண்மையான சுதந்திரப் போர்கள் அல்ல. காரணம், அடிமைகளின் பின்னாலிருந்து மறைமுகமாக மட்டுமல்ல, வெளிப்படை யாகவே அப்போர்களை நடத்தியவர்கள் அவர்களின் எஜமானர்களாகிய ஆங்கிலேயர்களும் பிரஞ்சுக்காரர்களுமே யாவர். இருதரப்பு அடிமைகளும் சுயமாக ஒருவரோடொருவர் போரிட்டவர்களல்ல. அல்லது தம் மாற்றானின் எஜமானர்களைச் சுதந்திரமாக எதிர்த்தவர்களுமல்ல, அது அவர்கள் பேரில் குற்றமுமல்ல; தம் எஜமானர்களிடமிருந்து விடுதலை பெற்ற பிறகல்லவா அவர்கள் மாற்றானோடு சுதந்திரப் போர் புரிய முடியும்? அத்தகைய வாய்ப்பு அவர்களுக்குக் கடைசி வரையில் கிட்டாமலே போய் விட்டது. ஏனெனில் சந்தா சாகிப் தன் இறுதிக்காலம் வரையில் டூப்ளேயின் அடிமையாக இருந்தான். அதே போல் முகமதலியும் தன் கடைசி மூச்சுள்ள வரையில் ஆங்கிலேயரின் மீளாத அடிமையாகவே வாழ்வு நடத்தி வந்தான்.



ஆனால் தென்னகத்துப் பாளையக்காரர்களின் நிலை அதுவல்ல. ஆதியில் அவர்கள் மதுரை நாயக்க மன்னர்களுக்குக் கப்பம் கட்டிவரக் கடமைப்பட்டவர்களாயிருந்தது உண்மையே. அப்போதுகூட, சில மறவர் பாளையங்கள் கப்பம் கட்டாமலே இருந்திருக்கின்றன. அவர்கள் பணிவு காட்ட வேண்டாம், பகைமை காட்டாதிருந்தாலே போதுமானது என்ற எண்ணத்தில் அவர்களிடமிருந்து கப்பம் வசூலிக்க முற்படவில்லை, அப்போதிருந்த நாயக்க மன்னர்கள். ஆனால் கம்பளப் பாளையங்கள் மட்டும் தன் இன விசுவாசத்தோடு ஒழுங்காய்க் கப்பம் செலுத்தி வந்தன. அப்படிச் செலுத்திவந்த பாளையங்கள்கூட, ராணி மீனாட்சிக்குப் பிறகு தம் பக்கத் தொகைகளை யாரிடம் செலுத்துவதென்பதறியாமல் நிறுத்தி வைத்துக் கொண்டன. சில சமயங்களில், சந்தா சாகிபின் பிரதிநிதியாகவிருந்த ஆலம்கான் மதுரையை அடுத்த சில பகுதியில் புகுந்து கப்பம் வசூலிக்க முயன்றது உண்டு. ஆனால் அவனும் மறவர் பாளையங்களின் பக்கம் திரும்பிப் பார்க்கத் துணியவில்லை.

இப்போது ஆலம்கானும் போய்விட்டான். சந்தாசாகிபும் போய்விட்டான். முகமதலியைத் தம் கைப்பாவையாக வைத்துக் . கொண்டு, இந்த நாட்டுக்கே முற்றிலும் அன்னியரான ஆங்கிலேயர்கள் தாம் இங்கே வர்த்தகம் செய்ய வந்தவர்கள் என்பதை மறந்து கப்பம் வசூலிக்க வருகிறார்கள். அவர்களை எதிர்த்து முதல் முழக்கம் செய்வதற்குரிய ஓர் அரிய வாய்ப்பு இலட்சுமண நாயக்கன் என்ற பாளையக்காரனுக்குக் கிடைத்தது. ஆனால் அந்தக் கோழை அதைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. ம.பொ.சி.யால் மட்டின்றிப் புகழப்படுகிற பாஞ்சைப் பதியான் பொல்லாப் பாண்டியனாவது அதைப் பயன்படுத்திக் கொண்டானா? இலட்சுமண நாயக்கனைக் காட்டிலும் இன்னும் இழிவான முறையில் அவன் மாற்றானிடம் மண்டியிட்டு நின்றான். ஆங்கிலேயரை எதிர்த்து முதல் முழக்கம் செய்யும் அந்தப் பெறற்கரிய பேறு வீரத்தமிழ் மறவராகிய புலித்தேவருக்கே கிடைத்தது. அது எப்படியென்பதை நாம் பின்னால் பார்க்கப் போகிறோம்.

## பெற்ற பிள்ளையைப் பிணையாக வைத்தவன்

இலட்சுமண நாயக்கனைப் பணிய வைத்துவிட்ட வெற்றிப் பெருமிதத்தோடு, ஹெரான் மதுரையை நோக்கிப் புறப்பட்டான்.

மதுரையில் அப்போது ஆட்சி புரிந்து கொண்டிருந்த பட்டாணியர்கள் மூவரையும் பற்றி நாம் ஏற்கெனவே அறிந்துள்ளோம். நவாபின் ஆட்சிக்குட்பட்ட களக்காட்டுப் பகுதியை அவர்கள் திருவாங்கூர் மன்னனிடம் விற்றவர் களல்லவா? அதற்காக அவர்களைக் கடுமையாகத் தண்டிக்க வேண்டும் என்பது ஹெரானுடைய கருத்து. அதையறிந்த அம்மூன்று பட்டாணியர்களும், ஹெரான் வருகிறான் என்று கேள்விப்பட்டதுமே மதுரையைவிட்டு ஓடிப்போய், கோயில்குடி என்ற இடத்தில் ஒளிந்து கொண்டார்கள்.



பட்டாணியர்கள் பயந்தோடிவிட்ட செய்தி ஹெரானுக்கு மகிழ்ச்சியை அளித்தது. அவன் மதுரைக்கு வந்ததும் முதலில் அந்நகரைக் கைப்பற்றித் தன் நிலையை அங்கு வலுப்படுத்திக் கொண்டான். பிறகு, ஒரு பெரும்படையுடன் கோயில் குடியை நோக்கிப் புறப்பட்டான். கோயில் குடிக்கு இரண்டு மைல் தொலைவிலேயே தன் முகாமை அமைத்துக் கொண்டான்.

கோயில்குடியில் திரும்பூர்க்கோயில் என்று ஒரு கோயில் உண்டு. கோட்டையைப் போன்றே அமைந்திருந்த அந்தக் கோயிலுக்குள்தான் அம்மூன்று பட்டாணியர்களும் ஒளிந்திருந்தார்கள். அந்தக் கோயிலைத் தாக்குவதற்கு ஹெரான் வருகிறான் என்பதை அறிந்ததும், அவர்கள் இரவோடிரவாக அங்கிருந்து ஓடிப்போய் விட்டார்கள்.

ஆனால் அவர்களுடைய படைகள் அங்கேயே தங்கியிருந்தன. ஹெரான் அக்கோயிலின் கதவைத் தீ வைத்துக் கொளுத்தி உள்ளே புகுந்தான். உள்ளேயிருந்த வீரர்களையெல்லாம் ஹெரானுடைய படைகள் கொன்று குவித்தன. அக்கோயிலையும் கொள்ளையடித்தன. இந்தச் செயலால் ஹெரான் அப்பகுதி மக்களின் மாறாவெறுப்புக்கு ஆளானான். அவனை அவர்கள் எப்படிப் பழிவாங்கினர் என்பதை நாம் பிற்பாடு காணப்போகிறோம்.

கோயில்குடியைக் கொள்ளையடித்து முடித்த பிறகு ஹெரான் மதுரைக்குத் திரும்பிவந்தான். அந்நகரின் பாதுகாப்புக்காகச் சில படைகளை அங்கே நிறுத்தி வைத்துவிட்டு, 1755, மார்ச் மாத நடுவில் அவன் திருநெல்வேலியை நோக்கிப் புறப்பட்டான்.

திருநெல்வேலிச் சீமையில் பல பாளையங்கள் இருந்தன. அப்பாளையங்கள் எல்லாம் கீழப்படாகைப் பாளையங்கள் மேலப்படாகைப் பாளையங்கள் என இருபெரும் பிரிவுகளாக நின்றன. கீழப்படாகைப் பாளையங்கள் தெலுங்குப்

பாளையங்கள்; அவற்றுக்குத் தலைமை தாங்கியது பாஞ்சாலங் குறிச்சிப் பாளையம். மேலப்படாகைப் பாளையங்கள் தமிழ் மறவர் பாளையங்கள்; அவற்றிக்குத் தலைமை தாங்கி நின்றது நெற்கட்டுஞ் செவ்வல் பாளையம். பாஞ்சாலங்குறிச்சியில் அப்போது ஆட்சி புரிந்து வந்தவன் பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன். நெற்கட்டுஞ் செவ்வலில் அப்போது ஆட்சி புரிந்து வந்தவர் புலித்தேவர். இந்த விவரங்களையெல்லாம் நாம் ஏற்கெனவே அறிந்துள்ளோம்.

அந்தப் பகுதியிலுள்ள அத்தனை பாளையங்களோடும் தனித்தனியே போர் தொடுத்துத் தன் ஆற்றலையும் நேரத்தையும் வீணாக்குவதைவிட, அவற்றிற்கெல்லாம் தலைமை வகித்த அவ்விரண்டு பாளையங்களை மட்டும் அடக்கி விட்டால், அப்புறம் மற்றப் பாளையங்கள் அத்தனையும் தாமாகவே தன் காலடிக் கீழ் வந்து வீழ்ந்து விடும் என்று கருதினான் ஹெரான். அதன்படி, மகபூஸ்கான் தலைமையில் ஒரு படையை நெற்கட்டுஞ் செவ்வலுக்கு அனுப்பிவிட்டு, மீதிப் படைகளுடனும் கான்சாகிபுடனும் அவன் பாஞ்சாலங்குறிச்சியை நோக்கித் தன் கவனத்தைத் திருப்பினான்.

இதைக் கேள்விப்பட்டனர் கீழப்படாகைப் பாளையக் காரர்களும் அவர்களது தலைவனான பொல்லாப் பாண்டிய கட்டபொம்மனும். அவர்கள் நெஞ்சம் அச்சத்தால் கலங்கியது. அதே சமயத்தில் மேலப்படாகைப் பாளையக்காரர்கள், அவர்களது தலைவர் புலித்தேவர் ஆகியோரது உள்ளம் ஆத்திரத்தால் கொதித்தது. வாழ்வோ மரணமோ, இறுதி வரை போராடியே தீர்வது என்று அவர்கள் முடிவெடுத்தனர்.

கர்னல் ஹெரானும் கம்மந்தான் கான்சாகிபும் தமது படைகளுடன் எல்லை நாயக்கன்பட்டி என்னும் இடத்தில் வந்து முகாமிட்டிருந்தனர். அவர்கள் அதற்கு மேலும் முன்னேறி வந்து விடாதபடி தடுக்க வேண்டுமென்று பொல்லாப் பாண்டியன் தீர்மானித்தான். அதற்காகத் தன் படைகளைத் திரட்டிக்கொண்டு வந்து எதிர்த்துப் போரிட்டானா? அப்படி அவன் செய்திருந்தால், ஆங்கிலேயரை எதிர்த்து முதல் முழக்கம் செய்த பெருமை அவனையே சார்ந்திருக்கும்! அவன் அத்தகைய ஒரு வீரச்செயலைச் செய்யவில்லை. அதற்குப் பதிலாக ஒரு கோழைத்தனமான காரியத்தைச் செய்தான். அதாவது, தம் தம்பியையும் தன்னுடைய இரண்டாவது மகன் சின்ன பொம்மு என்பவனையும் உடனழைத்துக் கொண்டு, ஏராளமான சீர்வரிசைகளோடு அவன் எல்லை நாயக்கன் பட்டிக்கு வந்து சேர்ந்தான். தான் கொண்டுவந்த காணிக்கைகளையெல்லாம் ஹெரானின் காலடியில் வைத்து வணங்கினான். "கர்னல் துரையவர்களே! நான் நவாப் முகமதலியிடம் மிகவும் விசுவாசமுள்ள ஒரு பாளையக்காரன். அப்படியிருக்க, அந்த நவாபுக்கே எஜமானர்களாய் விளங்கும் ஆங்கிலக் கும்பினியாரிடம் நான் ஏதேனும் மறுத்துப் பேச முடியுமா? மற்றப் பாளையக்காரர்களிடமிருந்து நீங்கள் வரி வசூல் செய்வதற்கு, என்னாலான எல்லா உதவிகளையும் நான் மகிழ்ச்சியோடு புரிவேன்" என்று அவன் பணிவாகக் கூறினான்.



'இப்படிக் கூறினால் கர்னல் ஹெரான் நம்மிடம் கப்பம் கேட்க மாட்டான். அது மட்டுமல்ல, நம்மை வரி வசூல் செய்யும் தலைவனாகவும் நியமித்து விடுவான். அந்த அதிகாரத்தைக் கொண்டு, நாம் முடிந்த அளவுக்குக் கொள்ளையடித்துப் பொருள் சேர்த்துக் கொள்ளலாம்!' என்பது பொல்லானின் தந்திரம். ஆனால் கர்னல் ஹெரான் இத்தந்திரத்துக்கு மசியவில்லை. "இந்தக் கதையெல்லாம் என்னிடம் வேண்டாம்; முதலில் உன் கப்பத் தொகையைக் கொண்டு வந்து மரியாதையாய்க் கட்டிவிடு!" என்று அவன் கண்டிப்பாகக் கூறிவிட்டான்.

இதைக் கேட்டதும் பொல்லாப் பாண்டியன் பெருத்த ஏமாற்றமும் திகிலும் அடைந்தான். பிறகு ஒரு வழியாகச் சமாளித்துக் கொண்டு, "என்னுடைய பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்தில் பருவ மழை பெய்யவில்லை. அதனால் பஞ்சம்

ஏற்பட்டு, கையில் பணமில்லாதவனாயிருக்கிறேன். தயவு செய்து ஒரு தவணை கொடுங்கள். அந்தத் தவணைப்படி என் கப்பத் தொகையைக் கொண்டு வந்து கட்டிவிடுகிறேன்!" என்று பணிவாக வேண்டினான்.

ஆனால் இதற்கும் ஹெரான் மனம் இரங்கவில்லை.

கடைசியாக வேறு வழியில்லாமல், பொல்லான் தன் கப்பத் தொகையில் ஒரு சிறு பகுதியைச் செலுத்திவிட்டு, மீதிக்குத் தவணை கேட்டான்.

இரும்பு மனிதன் ஹெரான் இதற்கும் இணங்கவில்லை! "பாக்கித் தொகையை நீ கட்டும் வரையில், உன் இரண்டாவது மகன் சின்னபொம்முவும் உன் தம்பியும் என்னிடம் பிணையாள்களாக இருக்கட்டும்!" என்று அவ்விருவரையும் அவன் பிடித்து வைத்துக் கொண்டான்! பெற்ற பிள்ளையையும் உடன்பிறந்த தம்பியையும் வெள்ளையனிடம் அடமானம் வைத்த இந்தப் பொல்லாப் பாண்டியனைத் தான், "நாட்டுப் பற்றுக்காக ஆங்கிலேயரை எதிர்த்து நின்றவன்!" என்று பொய்யுரை கூறிப் புகழாளனாக்குகிறார் தலைவர் ம.பொ.சி.

பொல்லாப் பாண்டியன் வகுத்த வழியைப் பின்பற்றி, எட்டயாபுரம் பாளையக்காரனும் தன் கப்பத் தொகையில் ஒரு பகுதியைக் கட்டிவிட்டு, மீதிக்கு ஹெரானிடம் பிணையாள்களை விட்டுச் சென்றான்!

இங்கு இப்படியிருக்க, மேற்குப் பாளையங்களின் தலைவராகிய புலித்தேவரை அடக்கப் புறப்பட்டுப் போனானே, மகபூஸ்கான், அவன் என்ன கதியானான் என்பதைக் கவனிப்போம்.

மகபூஸ்கானுக்கு உதவியாக, லீ என்பவனைத் தளபதியாகக் கொண்ட ஒரு வெள்ளைக்காரப் படையையும் ஹெரான் அனுப்பியிருந்தான். மகபூஸ்கானும் லீயும் எல்லை



நாயக்கன் பட்டியிலிருந்து புறப்பட்டு வந்து, திருநெல்வேலியில் முகாமிட்டார்கள்.

இந்த நேரத்தில் காப்டன் பீவர் என்பவன் தலைமையில் வெள்ளையர் படையொன்று நட்டுக்கோட்டைப் பாளையத்தைத் தாக்கியது. களக்காட்டுப் பகுதியைச் சேர்ந்த ஒரு சிறிய பாளையம் அது. அப்பாளையத்தின் தலைவன் ஒரு வீரத்தமிழ் மறவன். புலித்தேவர் வழி நிற்பவன். எனவே அவன் வெள்ளையரின் படையெடுப்புக்குப் பணிய மறுத்தான். அதனால் ஆத்திரம் அடைந்தான் காப்டன் பீவர். ஆங்கிலக் கும்பினியை எதிர்க்கத் துணிபவர்கட்கு எத்தகைய கதி நேரும் என்பதை மற்றப் பாளையக்காரர்களுக்கு எடுத்துக் காட்ட வேண்டும் என்ற எண்ணத்துடன், அவன் அந்த ஊரையே தீயிட்டுக் கொளுத்தினான். எதிர்ப்பட்ட ஆண்கள், பெண்கள், குழந்தைகள் அத்தனை பேரையும் வெட்டித் தள்ளினான். அங்குள்ள ஊருணிகளிலெல்லாம் நஞ்சைக் கலக்கினான். அதனால் ஆடுமாடுகள், நாய், பூனைகளெல்லாம் இறந்தொழிந்தன. சோலைவனம்போல் விளங்கிய நட்டுக்கோட்டை ஒரு சுடுகாடாக மாறிவிட்டது! இந்த நாசச் செயலைக் கண்டு களக்காட்டுப் பகுதியில் தங்கியிருந்த திருவாங்கூர்ப் படைகள் ஆரம்பொழிக் கணவாய் வழியாகத் தப்பினோம் பிழைத்தோம் என்று தம் தாயகத்தை நோக்கி ஓடிவிட்டன.

தான் எடுத்த காரியத்தை முடிப்பதற்கு இதுவே தகுந்த தருணம் என்று எண்ணிய மகபூஸ்கான், தன் முழு பலத்தையும் திரட்டிக் கொண்டு நெற்கட்டுஞ் செவ்வலை நோக்கிப் புறப்பட்டான்.

அச்சம் என்பதையே தன் வாழ்வில் அறிந்திராத புலித்தேவர் இதைக் கேள்விப்பட்டார். உடனே தன் மறத் தமிழ் வீரர்களோடு நெற்கட்டுஞ் செவ்வலை விட்டுப் புறப்பட்டு, மகபூஸ்கானை எதிர்நோக்கி வந்தார். அவனையும் அவனது படைகளையும் வழியிலேயே மடக்கி,

அடியடியென்று அடித்தார். மகபூஸ்கான் தன்னுடைய பீரங்கிகளையும் துப்பாக்கிகளையும் வெடி மருந்துகளையும் அப்படியே போட்டுவிட்டு, தலை தப்பினால் போதுமென்று புறமுதுகிட்டோடினான். புலித்தேவர் பெற்ற இந்த வெற்றியைக் கண்டு மறவர் பாளையங்கள் மகிழ்ந்து நின்றன.

இதற்கிடையில், எல்லைநாயக்கன் பட்டியில் முகாமிட்டிருந்த கர்னல் ஹெறானுக்குத் திருச்சியிலுள்ள தன் மேலதிகாரிகளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. "இதுவரையில் வசூலான தொகையோடு உடனே வந்து சேரவும்!" என்ற கட்டளையே அக்கடிதத்தின் சாரம். அதைக் கண்டதும் ஹெறான் எல்லைநாயக்கன் பட்டியை விட்டுக் கிளம்பி, திருச்சி செல்லும் வழியில் திருநெல்வேலிக்கு வந்து சேர்ந்தான்.

அதே நமயத்தில் புலித்தேவனிடம் தோல்வியுற்ற மகபூஸ்கானும் அங்கு வந்து சேர்ந்தான். ஆர்க்காட்டு நவாபின் கௌரவத்தையும் ஆங்கிலக் குமிபினியின் மானத்தையும் காப்பாற்ற வேண்டுமானால், புலித்தேவரை அடக்காமல் ஹெறான் திருச்சிக்குத் திரும்பிச் செல்லக்கூடாது என்று அவன் வற்புறுத்தினான். புலித்தேவரை இப்போது சும்மா விட்டுவிட்டால், ஏற்கெனவே ஆங்கிலேயருக்குப் பணிந்து கப்பம் கட்டி வரும் பிற பாளையக்காரர்கள்கூட ஆங்கிலேயருக்கு எதிராகப் புரட்சி செய்யத் துணிந்து விடுவார்கள் என்று அவன் ஹெறானுக்கு எடுத்துச் சொன்னான். ஹெறானுக்கும் அவன் கூறுவது உண்மையென்றேபட்டது. எனவே மகபூஸ்கானின் வேண்டுகோளுக்கிணங்கத் தன் திருச்சிப் பயணத்தை ஒத்திப் போட்டு விட்டு, புலித்தேவர்மீது படையெடுக்க முடிவு செய்தான் கர்னல் அலெக்ஸாண்டர் ஹெறான்!

### முதல் முழக்கம்

ஐரோப்பிய வீரர்கள், ஐரோப்பியத் தளபதிகள், கும்பினியின் சுதேசிப் படைகள் அவற்றின் தலைமைத் தளபதியான கம்மந்தான் கான்சாகிப், நவாப் முகமதலியின் படைகள், அவற்றின் தலைவனான மகபூஸ்கான், ஆக இத்தனை பலத்தோடு, புலித்தேவரின் பாளையத் தலைநகரான நெற்கட்டுஞ் செவ்வலை நோக்கிப் புறப்பட்டான் கர்னல் ஹெறான்!

இதற்குச் சில ஆண்டுகட்கு முன்னர் இன்னிஸ் துரைகூடத்தான் தென்பாண்டிச் சீமைக்குப் படை திரட்டி வந்தான். ஆனால் அவன் யாருடனும், போர் தொடுக்கவில்லை. ஆனால் இப்போது வந்த கர்னல் ஹெறான் அப்படியல்ல. இவன் ஆங்கிலக் கும்பினியாரிடமிருந்து வரையரையற்ற அதிகாரங்களைப் பெற்று வந்தவன். மேலப்பாளகை, கீழப்பாளகை ஆகிய எல்லாப் பாளையங்களையும் அடக்குவதற்கு வேண்டிய படை பலத்தோடு வந்தவன். இவனும் இவனது தளபதிகளும் எவ்வளவு கொடியவர்கள் என்பதை நாம் ஏற்கெனவே கண்டுள்ளோம். அவர்களது பேரைக் கேட்டாலே மக்கள் பயந்து நடுங்கும் அளவுக்கு அவர்கள் நடந்து கொண்டனர். அவர்களுடைய தைரியத்தில் தான் மகபூஸ்கான் புலித்தேவர் மீது படையெடுத்துப் போனான். அதன் பலன், புலித்தேவரிடம் அவன் உதைபட்டு ஓடி வந்தான். மகபூஸ்கானின் தோல்வி உண்மையில் ஆங்கிலக் கும்பினியின் தோல்வியே அல்லவா? அதனால் ஆத்திரமடைந்த ஹெறான், புலித்தேவரை எப்படியும் நசுக்கித் தீர்த்து விடுவது என்று முடிவு கொண்டவனாய் வெகுண்டெழுந்து சென்றான்.

ஆனால் புலித்தேவர் எப்படிப்பட்டவர்? புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களிலே வியந்து பேசப்படுகிற வீரமறவர் பரம்பரையில் பிறந்த விறல்மேவு தமிழ் மகன் அவர். தம் பெயருக்கேற்ப அஞ்சாத நெஞ்சம் படைத்த ஆண்மையாளர். சாம தான பேத தண்டம் என்று சொல்லப்படுகிற நால்வகை உபாயங்களையும் சமயமறிந்து கையாளுவதில் சாணக்கியனையும் வெல்லக் கூடியவர். போர்க்கலையின் நுணுக்கங்களைக் கரைகண்ட ஐரோப்பியத் தளபதிகளே அவர் தமது மாற்றார் என்பதையும் மறந்து

அவரைப் போற்றிப் புகழ்ந்துள்ளனர். அந்தக் காலத்து இந்தியப் போர்க்களங்களிலே இணையற்ற இளஞ்சிங்கங்களாய் உலவித் திரிந்தவர் இருவர். அவர்களில் ஒருவன் ராபர்ட் கிளைவ்; மற்றவன் கம்மந்தான் கான்சாகிப். இவ்விருவரினும் வயதில் முதியவராயிருந்தாலும் ஆற்றலில் மிகப் பெரியவராய் விளங்கினார் புலித்தேவர். அவரிடம் பெரிய பீரங்கிகள் இல்லை. அதுபோன்ற நவீன ஆயுத சாதனங்களும் கிடையாது. இருந்தாலும் அவற்றிற்கெல்லாம் ஈடுசெய்யும் அளவுக்கு அவரிடமும் அவரது மறத் தமிழப்படைகளிடமும் இறைவன் கொடுத்த உடலாற்றலும் உள்ளத் திண்மையும் இயல்பிலேயே அமைந்திருந்தன. மாற்றானுடைய பீரங்கிக் குண்டுகள் மழைபோல் பொழிந்த போதிலும், அவற்றைத் தம் மார்பகத்தே ஏந்தி அவர்கள் மகிழ்வார்களே தவிர, முதுகில் பட அனுமதிக்க மாட்டார்கள். ஊரில் திருவிழா வருகிறதென்றால் சிறுவர்கள் எப்படி உள்ளக் கிளர்ச்சி கொள்வார்களோ, அப்படியே போர் வருகிறதென்றால் தோள்கள் பூரித்து எக்களிப்படைவார்கள், புலித்தேவரின் இணையற்ற வீரர்கள். தத்துவ ஞானத்தில் பழுத்த உத்தம யோகிகளைப் போல, அந்த மறக்குலத்தில் பிறந்த காளையர் மட்டுமன்று, கன்னியரும் கூட, மரணம் என்பதனை ஓர் அற்பத்திலும் அற்பமான அன்றாட நிகழ்ச்சியாகவே கருதுவர். காலன் உயிர்களைக் கொள்ளை கொள்ளுகின்ற போர்க்களங்களை அவர்கள் விளையாட்டு மைதானங்களெனக் கருதிக் களியாட்டமாடுவர். வீர மரணத்தை ஒரு பெறற்கரிய பேறாகக் கருதும் வெற்றி படைத்த அச்சுட்டிளங்காளைகளை, கேவலம் ஆயுத பலத்தைக் காட்டி அச்சுறுத்துவதற்கு யாவரே வல்லவராவார்?

புலித்தேவரது படை வீரர்களின் பண்பே இப்படியென்றால், அவர்களது தலைவரைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? அவர் ஆறடிக்கு மேற்பட்ட உயரமும், வைரச் சிலை போன்ற உடற்கட்டும் வாய்ந்தவராம். அவரது வலிமைமிக்க கைகள் முழங்கால் வரையில் நீண்டிருக்குமாம். மற்றவர்களால் சுமக்க முடியாத பல ஆயுதங்களைச் சுமந்து



கொண்டு, நாளொன்றுக்கு முப்பது மைல் தூரம் அவர் எளிதாக நடந்து செல்வாராம். குதிரை ஏறிப் போர் புரிவதில் அவர் அபூர்வமான திறமை படைத்தவராம். வீரமும் வலிமையும் மட்டுமன்றி அவர் நேர்மையும் பண்பும் நிறைந்திருந்தவராகையால், அவரது சொந்தப் பாளையத்தில் மட்டுமல்ல, மேலப்படாகையைச் சேர்ந்த மற்ற எல்லாப் பாளையங்களிலும் அவர் நிகரற்ற செல்வாக்கோடு விளங்கினார். அவரது நாவசைந்தால் நாடு அசைந்தது. மறவர் பாளையங்களின் தலைவர்கள் அனைவரும் அவரைத் தம் தனிப்பெரும் தலைவராக மகிழ்வோடு ஏற்றுக் கொண்டிருந்தார்கள். இத்தகைய சுத்த வீரனுக்கு சொந்தமான நெற்கட்டுஞ் செவ்வல் கோட்டையைச் சூழ்ந்து முற்றுகையிட்டன ஹெரானின் கும்பினிப் படைகள்.

கும்பினிப் படை பெரும்படை. கோட்டைக்குள்ளிருந்த புலித்தேவரின் படை சிறிய படை. எனினும், அந்தக் கோட்டையானது ஓர் இணையற்ற பலம் வாய்ந்த கோட்டையாக விளங்கியது. ஹெரான் கொண்டு வந்த பீரங்கிகள் இடியிடிப்பதுபோல் குண்டுகளைக் கக்கின. ஆனால், அக்கோட்டையின் மாபெரும் மதில்களிலே அவற்றால் ஒரு சிறு ஓட்டையைக் கூட உண்டுபண்ண முடியவில்லை. அந்த மதில்களின் திண்மையைக் கண்டு ஹெரான் வியப்படைந்தான்.

தன் வசத்திலுள்ள பீரங்கிகளைக் காட்டிலும் இன்னும் பெரிய பீரங்கிகளைத் திருச்சியிலிருந்து கொண்டு வந்தாலொழிய, அக்கோட்டையைத் தன்னால் ஒன்றும் செய்ய இயலாது என்பதை அவன் தெளிவாகக் கண்டான். எனவே, தன் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு, போரை விரும்பாமல் சமாதானத்தில் நாட்டம் கொண்டவன் போல் நடிக்கத் தொடங்கினான். தன்னிடம் துபாஷாக வேலை பார்த்த முதலியார் ஒருவரைப் புலித்தேவரிடம் தூதனுப்பி வைத்தான்.

துபாஷ் முதலியார் புலித்தேவரிடம் சென்று மிக நயமாகப் பேசினார். "பெயரளவுக்கு ஒரு சிறு தொகையைக் கப்பமாகக் கட்டினால் போதும், ஹெரான் துரை திருப்தியோடு திரும்பிப் போய்விடுவார்!" என்று அவர் கெஞ்சாத குறையாகக் கேட்டுக் கொண்டார். ஆனால் புலித்தேவர் அதற்குக் கொஞ்சமும் மசியவில்லை. "நாங்கள் இந்த மண்ணில் பிறந்தவர்கள். இந்த மண்ணுக்கு உரியவர்கள். எங்கிருந்தோ வந்த அன்னிய வெள்ளையருக்கும் அவர்களின் அடிமையான ஆர்க்காட்டு நவாபுக்கும் நாங்கள் எதற்காகக் கப்பம் கட்ட வேண்டும்? கப்பம் என்ற முறையில் நாங்கள் கால் காசு கூடச் செலுத்த மாட்டோம்!" என்று முழக்கம் செய்தார் புலித்தேவர். அதுவே ஆங்கிலேயரை எதிர்த்து இந்த இந்திய மண்ணில் ஓர் இந்தியன் செய்த வீரம் செறிந்த முதல் முழக்கம்!

புலித்தேவரின் வீர முழக்கத்தைக் கேட்டு வியப்படைந்தார் துபாஷ் முதலியார். என்ன இருந்தாலும், அவரும் ஒரு தமிழ்மகன்தானே? ஒரு மாபெரும் படைக்கு எதிராகச் சின்னஞ்சிறு பாளையக்காரன் ஒருவன் காட்டும் அஞ்சாமையைக் கண்டு அவர் நெஞ்சம் உருகியது. புலித்தேவரிடம் அவருக்கு உள்ளன்பு பெருகியது. அதன் விளைவாக, ஹெரான் படையினது இராணுவ இரகசியங்களை அவர் புலித்தேவருக்கு அறிவித்தார். "படைபலத்தில் பெரியவனாயிருக்கலாம் அந்தப் பரங்கித்துரை. ஆனால் சுதந்திர உணர்ச்சியும் தூய வீரமும் உங்களுக்குத் துணை நிற்கின்றன. அவற்றிற்கெதிராக, எத்தகைய பகைவர்களாலும் உங்களை வெற்றி கொள்ள முடியாது!" என்று புலித்தேவரை அவர் மனம்விட்டுப் பாராட்டினார். தம்மைத் தூதனுப்பிய ஹெரானிடத்தும் அவர் அதே கருத்தைத் தெரிவித்தார்.

புலித்தேவர் விடுத்த பதிலைக் கேட்டுக் கர்னல் ஹெரான் கலக்கமடைந்தான். தான் இப்படியே இன்னும் எத்தனை நாள்களுக்கு முற்றுகையிட்டாலும், அவரது கோட்டையைப் பிடிக்க முடியாது என்று அவன் உறுதியாக அறிந்தான். அந்தக் கோட்டையைப் போல் ஆயிரம் கோட்டைகள் அழிந்தாலும்



அவருடைய உளத்திண்மை ஒருநாளும் அழியமாட்டாது என்று அவன் தெளிவாக உணர்ந்தான். "மரியாதையாக நாம் இப்போதே இவ்விடத்தைவிட்டுப் போய்விட வேண்டும். அப்படியின்றி இந்த முற்றுகையை நாம் இன்னமும் நீடிப்போமானால், தமது படைகள் தளர்ச்சியடைவதோடு, நம் கையிலுள்ள வெடிமருந்தும் காலியாகி விடும். அப்புறம், கோட்டைக்குள்ளிருக்கும் வீர மறவர்கள் வெளிப்பட்டு வந்து நம்மை வளைத்து மடக்கி அழித்துவிடுவார்கள்!" என்று அஞ்சினான் அந்த ஆங்கிலேயன். மேலும், தன் மேலதிகாரிகளின் ஆணைக்கிணங்க, அவன் திருச்சிக்குத் திரும்பிச் செல்ல வேண்டிய அவசர நிலையிலே அப்போது இருந்தான். ஆகவே, வேறு வழியில்லாமல், தன் முற்றுகையைக் கலைத்துக் கொண்டு, கர்னல் ஹெரான் நெற்கட்டுச் செவ்வலை விட்டு வெட்கத்தோடு பின்வாங்கி வெளியேறிச் சென்றான்!

ஹெரான் அடைந்த இந்த மாபெரும் தோல்வி, மறவர் பாளையங்களிலெல்லாம் ஊக்கத்தையும் உவகையையும் ஒருங்கே விளைவித்தது.

### வீர சகாப்தத்தின் முடிவு

நெற்கட்டுஞ் செவ்வல் முற்றுகை முறியடிக்கப்பட்டது 1755-ம் ஆண்டு மே மாதத்தில். அந்த முற்றுகையில் தோல்வியுற்ற கர்னல் ஹெரான், தன் படைகளோடு மதுரை வந்து சேர்ந்தான். மகபூஸ்கானும் கான்சாகிபும் அவன் கூடவே வந்தார்கள்.

நவாபின் பிரதிநிதியாகத் தென்பாண்டி நாடு முழுவதையும் தன் ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்து விடலாம் என்று மனப்பால் குடித்துக் கொண்டிருந்த மகபூஸ்கானுக்கு, ஹெரானது தோல்வி பெருத்த ஏமாற்றத்தை அளித்தது. எனினும் பதவி ஆசையும் பணத்தாசையும் அவனை விடவில்லை. அந்த இரண்டு ஆசைகளையும் நிறைவேற்றிக் கொள்வதற்கு அவன் ஒரு சூழ்ச்சி செய்தான். அதாவது,

"தென்பாண்டி நாட்டை என்னிடம் நீங்கள் குத்தகைக்கு விட்டு விடுங்கள். அதற்குப் பரிசாக, உங்களுக்கு நான் ஒரு பெருந்தொகையை இரகசியமாகத் தருகிறேன். அது மட்டுமல்ல; பொல்லாப் பாண்டியன் போன்ற பாளையக்காரர் களிடம் நீங்கள் கும்பினியின் சார்பாகப் பெற்ற பரிசுப் பொருள்களையெல்லாம் நீங்களே உங்கள் சொந்தத்திற்கு வைத்துக் கொள்ளலாம். அதைப் பற்றி நான் யாரிடமும் ஒரு வார்த்தையும் கூற மாட்டேன்! என்று ஹெரானுக்கு ஆசை காட்டினான் மகபூஸ்கான்.

மகபூஸ்கான் விரித்த இந்த வலையில் ஹெரான் எளிதில் வீழ்ந்து விட்டான். தென்பாண்டி நாட்டை ஆண்டு ஒன்றுக்குப் பதினைந்து லட்ச ரூபாய்க்கு அவன் மகபூஸ்கானு க்குக் குத்தகை எழுதிக் கொடுத்து விட்டான்!

ஆங்கிலக் கும்பினியின் நலத்தைக் கருதிக் கும்பினிக்கு ஒழுங்காகப் பணம் வந்து சேர வேண்டும் என்பதற்காக, தென்பாண்டிச் சீமையை மகபூஸ்கானுக்குக் குத்தகைக்கு விட்டுவிட்டதாக, ஹெரான் பிரகடனம் செய்தான். அந்தப் பிரகடனம் வெளி வந்ததும், தென்பாண்டி நாட்டிற்கே தான் நவாபாகி விட்டாற் போல் மகிழ்ச்சியால் பொங்கினான் மகபூஸ்கான்!

பிறகு ஹெரான் மதுரையை விட்டுப் புறப்பட்டான். புறப்படுவதற்கு முன்னர், மதுரைக் கோட்டையின் பாதுகாப்புக்காக, கும்பினிப்படை வீரர்களில் ஓர் ஆயிரம் பேரை அவன் அங்கு நிறுத்தி வைத்தான். அவர்கட்குத் தலைவனாக ஜாமுல் சாகிப் என்பவனை நியமித்தான்.

1755 மே 28'ம் தேதி மதுரையை விட்டுப் புறப்பட்ட ஹெரான், தான் கொள்ளையடித்த பொருள்களையும், பல பாளையக்காரர்களிடம் இலஞ்சமாகப் பெற்ற பொருள் களையும் பல வண்டிகளில் ஏற்றி, அவற்றுக்குப் பாதுகாப்பாக ஒரு படையை ஏற்பாடு செய்து, அப்படையின் தலைவனாகக் காப்டன் ஜோசப் ஸ்மித் என்பவனை நியமித்து அனுப்பி வைத்தான்.



அதைத் தவிர, காப்டன் லின் என்பவன் தலைமையில் ஒரு படையை அனுப்பி, எதிரிகள் யாரும் இடையே புகுந்து தாக்காமலிருக்க ஓர் ஏற்பாடு செய்தான்.

ஹெரானின் இந்தப் படைகள் நத்தம் கணவாய் வழியாகத்தான் போகவேண்டும்; அதைத் தவிர வேறு வழியே இல்லை. அந்தக் கணவாயின் இரு பக்கங்களிலும் அடர்த்தியான பெரிய காடுகள் இருந்தன. படை சென்ற நேரம் இரவு நேரம்.

இவ்வழியாக முதலில் காப்டன் லின் தன் படைகளோடு போனான். அவனுக்கு எவ்வித இடைஞ்சலும் ஏற்படவில்லை. எனவே வழி சரியாக இருக்கிறது என்று தனக்குப் பின்னால் வரும் ஹெரானுக்கு அவன் செய்தி அனுப்பினான்.

அதன்பின் கான்சாகிபும் அவனது வீரர்களும் வந்தனர். அவர்களும் எவ்வித எதிர்ப்பும், இல்லாமல் கணவாயைக் கடந்து சென்றனர்.

அவ்வாறே ஹெரானும் அவனோடு வந்த வீரர்களும் போய்விட்டனர்.

ஹெரானுக்குப் பின்னால், அவனது கொள்ளைப் பொருள்களும் பரிசுப் பொருள்களும் அடங்கிய வண்டிகள் காப்டன் ஜோசப் ஸ்மித்தின் தலைமையில் வந்தன.

அந்த வண்டிகள் கணவாயைக் கடந்து கொண்டிருந்த அக்காரிருள் நேரத்தில், அதன் இருமருங்கிலுமிருந்த மரக்கிளைகள் அசைந்தன. சின்னஞ்சிறு செடிகள் எல்லாம் இடம் விட்டு இடம் நகர்ந்தன. அவ்வளவுதான்-

நூற்றுக்கணக்கான மறவர்கள் தம் மறைவிடத்திலிருந்து திடீரென்று வெளிப்பட்டு வந்தனர். கும்பினிச் சிப்பாய்களின் மீது பாய்ந்து, அவர்களை வெட்டி வீழ்த்தினர்!

வண்டிகளுக்குள்ளேயிருந்த பொருள்கள் யாவும் காட்டுக்குள்ளே எடுத்துச் செல்லப்பட்டன.

கோயில்குடிக் கோயிலில் ஹெரான் கொள்ளையடித்த பொருள்கள் அனைத்தும் மாயமாய் மறைந்தன.

இவ்வளவும் மின்வெட்டு நேரத்திலே நடந்து முடிந்து விட்டன. இந்தச் செய்தியை முன்னே செல்லும் ஹெரானுக்கோ, அல்லது பின்னே வந்துகொண்டிருந்த அவனது கடைசி அணிக்கோ சொல்லியனுப்புவதற்குள்ளே, வண்டிகள் அனைத்தும் காலியாகிவிட்டன. அவற்றில் பூட்டப் பட்டிருந்த காளைகளும் குதிரைகளும்கூடக் காட்டுக்குள்ளே கொண்டு செல்லப்பட்டுவிட்டன!

ஹெரான், வந்தான். பார்த்தான். தன் வீரர்கள் மடிந்து கிடந்ததைப் பற்றிக் கூட அவன் அவ்வளவு கவலைப்பட வில்லை. தான் கொள்ளையடித்த பொருள்கள் கொள்ளை போய் விட்டனவேயென்றுதான் அவன் ஆறாத் துயரடைந்தான்.

கோயில்குடியில் களவுபோன விக்கிரகங்களும் மற்றப் பொருள்களும் திரும்பக் கிடைத்துவிட்ட செய்தி மறவர் சீமை எங்கும் மகிழ்ச்சியைப் பரப்பியது.

ஹெரான் நத்தம் கணவாயைத் தாண்டி, தோல்வி, இழப்பு, அவமானம் ஆகியவற்றைச் சுமந்தவண்ணம் திருச்சிக்குச் சென்றான். மகபூஸ்கான் மதுரைக்கே திரும்பிச் சென்றுவிட்டான்.

1755 ஜூன் 5ம் தேதியன்று, ஹெரானும் அவனது படை வீரர்களும் திருச்சியை வந்து அடைந்தார்கள்.



ஹெரான் படையெடுப்புக்குப் பிறகு, தென்பாண்டி நாட்டில் ஆங்கிலக் கும்பினியின் செல்வாக்கும் ஆர்க்காட்டு நவாபின் அதிகாரமும் அதற்கு முன்பிருந்ததைவிட மோசமாகிவிட்டன. தன் சிப்பாய்களுக்குரிய சம்பளத்தைக் கூடக் கொடுக்க வழியில்லாமல் வெறுங்கையோடு திரும்பிவந்த ஹெரானைக் கும்பினியும் முகமதலியும் ஒருங்கே வெறுத்தனர்.

அவனது நடவடிக்கைகளைப் பற்றிக் கும்பினி அதிகாரிகள் அனைவரும் தமது அதிருப்தியைத் தெரிவித்தனர்.

நவாப் முகமதலியோ, தன் அண்ணன் மகபூஸ்கான் தென்பாண்டி நாட்டில் குத்தகைதாரனாய் அதிகாரத்தோடு உட்கார்ந்திருப்பதையெண்ணி அமைதியை இழந்தான். அந்தக் குத்தகையினால் கும்பினிக்கு எந்த முறையிலும் இலாபம் இல்லையென்று சென்னையிலிருந்த தலைமை அதிகாரிகள் எண்ணினர். எனவே, மகபூஸ்கானுடைய குத்தகை உரிமையை ரத்து செய்து, அதை வேறொருவருக்கு விட்டுப் பெரும் பணம் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும் என்று அவர்கள் தீர்மானித்தனர். அந்த உரிமையை விலைக்கு வாங்குவதற்குத் திருநெல்வேலியைச் சேர்ந்த தீத்தாரப்ப முதலியார் என்பவர் முன் வந்தார்.

இதற்குப் பின்னால் வரும் பன்னிரண்டு ஆண்டு நிகழ்ச்சிகள் மிகவும் சுவையானவை; தமிழகத்தின் வரலாற்றில் மிகமிக முக்கியமானவை; தமிழ் மக்களின் உள்ளங்களை உருக்க வல்லவை. தமிழ்நாட்டு விடுதலைப் போரின் - அல்ல, பாரத நாட்டு வீர சுதந்திரப் போரின், - முதல் பெருந் தலைவனாக நெற்கட்டுஞ் செவ்வல் பாளையக்காரராம் புலித்தேவரின் இணையற்ற தீரச் செயல்களையும் சீரிய சூழ்ச்சித்திறனையும் அஞ்சா நெஞ்சையும் ஆண்டகைமையையும் மேற்குறித்த அந்நிகழ்ச்சிகளில் நமக்குக் காணக் கிடைக்கின்றன. நியாயப்படி அவை புலித்தேவரின் வரலாற்றை விளக்கும் ஒரு நூலிலே இடம்பெற வேண்டியவை. அத்தகைய நூல் ஒன்றை நான் நெடுங்கால

ஆராய்ச்சிக்குப் பிறகு இப்போது எழுதித் தயாரித்துக் கொண்டிருக்கிறேன். ஆகையால் 1755-ல் ஹெறான் துரையினது திருநெல்வேலிச் சீமைப் படையெடுப்பின் இறுதியில் அவன் தோல்விகளுக்கும் இழப்புகளுக்கும் அவமானங்களுக்கும் ஆளாகிக் கும்பினியின் உத்திரவுப்படி திருச்சி போய்ச் சேர்ந்தது முதற்கொண்டு, 1767-ல் வாசுதேவ நல்லூர் முற்றுகையின் போது புலித்தேவர் வீரமரணம் எய்தியது வரையுள்ள விவரமான வரலாற்றுச் செய்திகள் அனைத்தையும் நான் அந்த நூலுக்கு ஒதுக்கி வைக்க வேண்டியவனாயிருக்கிறேன். எனினும், இந்த இடைக்கால நிகழ்ச்சிகளுள், நமது காவியத்தலைவனாகிய வீரபாண்டிய கட்டபொம்மன் எனப்படும் கொள்ளைக்கார கெட்டிபொம்முவின் வரலாற்று ஆராய்ச்சிக்கு இன்றியமையாத சிலவற்றை மாத்திரம் நாம் இங்குச் சுருக்கமாகக் கவனிப்போம்.

முதலாவதாக, தமிழகத்துக்கும் அதன் சுதந்திரத்தைக் காப்பதற்காக அனைத்தையும் அர்ப்பணித்து நின்ற புலித்தேவர் போன்ற மறத்தமிழ்த் தலைவர்கட்கும் தன்னால் இயன்ற மட்டும் துரோகங்களை இழைத்து விட்டு, அக்கம் பக்கத்திலுள்ள பாளையத்து மக்களைத் தன்னால் முடிந்த மட்டும் கொள்ளையடித்துவிட்டு, வெள்ளைக்காரர்களுக்கும், அவர்களின் தனிப் பெருந் தளபதியான கம்மந்தான் கான்சாகிபுக்கும் தனது முழங்கால்கள் தேய்ந்து மரத்துப் போகும்வரை மண்டியிட்டுவிட்டு, கடைசியாக 1760-ம் ஆண்டில் இவ்வுலகை விட்டு ஒழிந்தான் பொல்லாப் பாண்டிய கட்டபொம்மன்.

உடனே அதே ஆண்டில், பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரனாகப் பட்டம் ஏற்றான் அவன் மகன் ஜெகவீரபாண்டியன்.

அதே 1760-ம் ஆண்டில், அந்த ஜெகவீரபாண்டியனுக்கு ஒரு மகன் பிறந்தான். அவன்தான் நமது ம.பொ.சி. கட்டபொம்மன் எனப்படும் வீரபாண்டிய கட்டபொம்மன்.



இரண்டாவதாக, மருதநாயகம் பிள்ளையாகப் பிறந்து முகமதியனாக மதம் மாறிய மாவீரன் கம்மந்தான் கான்சாகிப், மதுரைக் கவர்னராக ஆங்கிலேயர்களால் நியமிக்கப்பட்டான். மதுரை, திருநெல்வேலிச் சீமைகளும் அவனிடம் ஒரு சொற்பத் தொகைக்குக் குத்தகைக்கு விடப் பட்டன. கான்சாகிபின் புகழும் செல்வமும் செல்வாக்கும் அவன் கனவில் கூடக் கண்டிராத அளவுக்கு உச்ச நிலையை எய்தியிருந்தன. இதைக் கண்டு அச்சமும் பொறாமையும் கொண்டான் ஆர்க்காட்டு நவாப் முகமதலி. அதன் விளைவாக, ஆங்கிலேயருக்கும் கான்சாகிபுக்குமிடையே மனக்கசப்பு ஏற்பட்டு, பின்னர், அது பகைமையாகவும் வடிவெடுக்குமாறு அவன் சூழ்ச்சி பல புரிந்தான். அதன் பயன், ஆங்கிலக் கும்பினியின் பெரும்படையும் ஆர்க்காட்டு நவாபின் பெரும்படையும் ஒன்றுகூடி வந்து மதுரையைத் தாக்கி முற்றுகையிட்டன. முற்றுகை ஓராண்டு காலம் நீடித்தது. அப்போதும் மதுரை விழவில்லை. கடைசியாக, 1764 அக்டோபர் 13-ம் நாள் மாலை 5 மணியளவில், கம்மந்தான் கான்சாகிப் கையில் ஆயுதங்கள் ஏதுமின்றித் தன்னந்தனியனாக மண்டியிட்டுத் தொழுகை செய்து கொண்டிருக்கும் போது, அவனிடம் பணிபுரிந்து கொண்டிருந்த பிரஞ்சுத் தளபதி மார்ச்செண்ட் என்பவனும், அவனது சுதேசித் தளபதி பாபாசாகிப் என்பவனும், அவனுடைய மந்திரி சீனிவாசராவ் என்பவனும் ஒன்று கூடி வந்து அவனைப் பிடித்துக் கைது செய்தனர். அவனது நண்பர்களாயிருந்து திடீரென்று துரோகிகளாக மாறிவிட்ட அந்தக் கயவர்கள் அவனை ஒரு பந்து போல் சுருட்டிக் கட்டிக் கும்பினியாரிடம் ஒப்படைத்தனர். எந்தக் கும்பினியாருக்காகக் கான்சாகிப் தன் தாய்நாட்டைக் காட்டிக் கொடுத்து வாழ்நாள் முழுவதையும் வீணாக்கி வந்தானோ, அதே கும்பினியார் அவனை அக்டோபர் 15'ம் தேதி திங்கட்கிழமை மாலை, மதுரையிலிருந்து திண்டுக்கல் செல்லும் சாலையிலிருந்த ஒரு பெரிய மாமரத்தில் தூக்கிலிட்டார்கள். அவனது உடலைக் கண்ட துண்டமாக வெட்டிப் பல்வேறு இடங்களில் தொங்கவிட்டார்கள். அதில் ஒரு பகுதி

மதுரையை அடுத்த சம்மட்டியாபுரத்தில் அடக்கம் செய்யப்பட்டது. கான்சா பள்ளிவாசல் என்ற பெயரால் அது இப்போது வழங்கப்பட்டு வருகிறது.

மூன்றாவதாக, கான்சாகிப் இறந்த பிறகு திருநெல்வேலிச் சீமையைக் கட்டிக்காப்பது கும்பினிக்குத் தொல்லையாயிருந்தது. அதனால் கும்பினியார் திருநெல்வேலிச் சீமையைத் தளவாய் அழகப்ப முதலியார் என்பவருக்குச் சிறிது காலம் குத்தகைக்கு விட்டிருந்தார்கள். இவருக்குப் பிறகு, 1765ல் ராஜாஹுகுமத்ராம் என்பவர் திருநெல்வேலிச் சீமைக்குக் குத்தகைக்காரர் ஆனார்.

அந்தக் காலத்தில் தெற்குச் சீமையிலே சண்டைகள் மூண்டன. சச்சரவுகள் எழுந்தன. பாளையக்காரர்கள் ஒருவருக்கொருவர் சிறு சிறு காரணங்களுக்காக மோதிக் கொள்வது அன்றாட நிகழ்ச்சியாக இருந்தது. குடிமக்கள் பயிர்த்தொழில் செய்வதில் போதிய கருத்துக்கொள்ளாமல் சண்டை செய்வதையே தொழிலாகக் கொண்டனர். அதனால் நிலம் வறண்டது. நாடு பாழாகத் தொடங்கியது. வரிப் பணங்களும் வசூலாகவில்லை. கும்பினியாருக்கு வருமானக் குறைவு ஏற்பட்டது.

பாளையக்காரர்களை வழிக்குக் கொண்டு வருவதற்கு அவர்கள் நயத்திலும் பயத்திலும் எவ்வளவோ முயன்று பார்த்தனர். ஆனால் ஒன்றும் நடக்கவில்லை. எனவே, மேலப் படாகைத் தலைவன் புலித்தேவன் கீழப்படாகைத்தலைவன் ஜெகவீரப்பாண்டியன் இவ்விருவரையும் பொறுக்கியெடுத்து நசுக்கிவிடுவது என்று அவர்கள் சதித்திட்டம் தீட்டினார்கள். அவ்விருவரையும் ஒழித்துவிட்டால், மற்றப் பாளையக்காரர்கள் அத்தனை பேரும் தாமாகவே அடங்கி விடுவார்கள் என்பது அவர்களுடைய கணக்கு. அதன் விளைவாக மேஜர் பிளிண்ட் என்பவன் ஒரு பெரும் படையோடு புறப்பட்டு வந்தான் பாஞ்சாலங்குறிச்சியை நோக்கி!



ஜெகவீர பாண்டியன் அவனோடு சமாதனம் பேச முயன்றான். ஆனால், மேஜர் பிளிண்ட் அதற்கு உடன்படவில்லை. "உன்னோடு எனக்கு என்ன சமாதானம் வேண்டியதிருக்கிறது? உன்னைக் கைது செய்து கொண்டு போகவே நான் வந்திருக்கிறேன்!" என்று உறுதியாகக் கூறி அனுப்பிவிட்டான்!

கும்பினிப் படைகள் பாஞ்சாலங்குறிச்சியை வளைத்துக் கொண்டன. பீரங்கிகள் கோட்டையைத் தாக்கின. ஜெகவீர பாண்டியன் இரவோடு இரவாகக் கோட்டையை விட்டுத் தப்பியோடினான்!

அவ்வாறு ஓடியவன் நேரே தூத்துக்குடி போய் அங்கிருந்த டச்சுக்காரர்களிடம் அடைக்கலம் புகுந்தான். அவர்களும் அவனைத் தங்களோடு வைத்துக் கொண்டால் பிற்பாடு ஆங்கிலேயருக்கு எதிரான சில சூழ்ச்சிகளுக்கு அவன் பயன்படுவான் என்ற எண்ணத்தில் அவனுக்குத் தஞ்சம் அளித்தனர். ஆங்கிலேயருக்குப் பயந்து கோட்டையைவிட்டு ஓடி டச்சுக்காரர்களின் காலடியில் வீழ்ந்த இந்தக் கோழையைத்தான், மாவீரர்களின் பட்டியலிலே ஏற்றி வைத்துப் பேசுகிறார் தலைவர் ம.பொ.சி.!

பாஞ்சாலங்குறிச்சியான் ஓடியொளிந்தபின், கீழப்படாகையைச் சேர்ந்த இதர பாளையங்களைப் பற்றிக் கவலையற்றவர்களாய், கும்பினியார் தம் கவனத்தை மேலப்படாகைப் பக்கம் திரும்பினார்கள். மேலப்படாகையில் புலித்தேவர் ஒருவரை மட்டும் வென்று மடக்கி விட்டால், மற்றப் பாளையக்காரர்கள் தாமாகவே அடங்கி விடுவார்களென்று அவர்கள் உறுதியாய் நம்பினார்கள். எனவே, கர்னல் டொனுல்டு காம்பெல் என்ற தளபதியின் தலைமையில், 1767 மே 13-ம் நாளன்று, புலித்தேவருக்கு சொந்தமான வாசுதேவ நல்லூர்க் கோட்டையை ஒரு மாபெரும் பீரங்கிப்படை வந்து முற்றுகையிட்டது.

வாசுதேவநல்லூரைப் பற்றிப் பிரிட்டிஷ் படைத் தளபதிகள் வருணிக்கும் போது, மேற்கு மலைத் தொடரின் அடிவாரத்தில் அமைந்திருக்கும் ஓர் அழகான வள நகரம் என்று அதைக் குறிப்பிட்டிக்கிறார்கள்.

கர்னல் காம்பெல் மிகப்பெரிய பீரங்கிகளைக் கொண்டு கோட்டையைத் தாக்கினான். கோட்டைச் சுவர்களில் ஓட்டைகள் விழுந்தன. ஆனாலும் உள்ளிருந்தோர் உறுதி பிசைந்த காரையினால் அவ்வோட்டைகளை அவர்கள் உடனுக்குடன் அடைத்தனர். அடைத்த இடங்களை மறுபடியும் மறுபடியும் கும்பினிப் பீரங்கிகள் துளைத்தன! துளைத்தன!! துளைத்தன!!!

வாசுதேவ நல்லூர்ப் போரின் வரலாறு, தமிழ் மக்கள் உண்மையில் பெருமைப்படக் கூடிய ஒரு வீர காவியமாகும். அதை முழுமையும் விவரித்தெழுத இச்சிறு நூலில் இடங் காணாது. அப்போரில் ஈடுபட்ட தமிழ் மறவர்களின் வீரத்தைக் கண்டு, வெள்ளைத் தளபதியாகிய காம்பெல்லே வியப்பில் ஆழ்ந்தான். 28.5.1767-ல் அவன் சென்னையிலுள்ள கும்பினி கவர்னருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் கூறுகிறான்.

"........... வாசுதேவ நல்லூர் என்ற புலித்தேவன் கோட்டையைத் தாக்குமாறு இன்று நம் படைக்கு உத்திர விட்டேன். பீரங்கிக் குண்டுகளாலேயே கோட்டையைத் தகர்க்க முடியவில்லை! குண்டுபட்ட இடங்களில் ஓட்டைகள் மட்டுமே விழுந்தன! ஓட்டைகளைப் புலித்தேவன் வீரர்கள் பச்சை மண்ணும் பனைநாரும்கொண்டு அப்போதைக் கப்போது அடைத்துவிட்டார்கள். விடாது சுட்டுத்தள்ளச் சொன்னேன். ஓட்டைகளைத் தமிழ் மறவர்கள் தங்கள் உடல்களாலேயே அடைத்து நின்றார்கள்! சுட்ட இடங்களிலெல்லாம் மண்ணும் நாரும் எப்படிச் சிதறுமோ, அப்படியே புலித்தேவன் வீரர்களின் உடல்களும் சிதறின. அதன் பின்னரும் அந்த வீரர்கள் அஞ்சாமல் தங்கள் பணியைச் செய்வதைக் கண்டு, என்னால் வியக்காமல் இருக்கமுடியவில்லை! நாகரிகம் குறைந்தவர்கள் என்று நம்மால் கருதப்படுகிற தமிழ் மறவர்களின் வீரம், நம் ஐரோப்பியர்களின் வீரத்திற்கு எந்த வகையிலும் குறைந்ததல்ல!..."



இந்த மதிப்பிற்குரிய கடிதம் இன்றைக்கும் எழும்பூர் ரிகார்டு ஆபீசில் இருக்கிறது!

மாற்றாரும் இவ்வாறு வியந்து போற்றும் வண்ணம் வீரப்போர் புரிந்து விட்டு, அந்தப் போர்க்களத்திலேயே வீரமரணம் எய்தினான் தமிழன்னையின் தலைமகனாக விளங்கிய புலித்தேவன். அவனது வீர சகாப்தமும் அன்றோடு முடிவெய்தியது!

**"ஆங்கிலக் கும்பினியின் விசுவாசமுள்ள ஊழியன்!"**

இந்தியாவிலேயே வெள்ளையரை எதிர்த்து முதல் முழக்கம் செய்த புலித்தேவரும் அவரது வீரத் தமிழ் மறவர்களும் வீரவீடு புகுந்தபின், அவருடைய வாசுதேவ நல்லூர்க் கோட்டையையும் நெற்கட்டுச் செவ்வல் கோட்டையினையும் வெள்ளைக்காரர்கள் இடித்துத் தள்ளித் தரைமட்டமாக்கினர்.

தூத்துக்குடியிலே டச்சுக்காரர்களின் தயவில் மானத்தை யிழந்து மறைந்து வாழ்ந்து வந்த ஜெகவீரபாண்டிய கட்டபொம்மனுக்கு ஒரு திடுக்கிடும் செய்தி கிடைத்தது. ஆங்கிலேயர்களும் டச்சுக்காரர்களும் தங்கள் பகை உணர்ச்சிகளை மறந்து ஒன்றுசேரப் போகிறார்கள் என்பதே அந்தச் செய்தி!

இதனால், ஜெகவீரன் தூத்துக்குடியைவிட்டு இராமநாத புரம் சென்று, சேதுபதியிடம் தஞ்சம் புகுந்தான்.

ஜெகவீரன் எங்கிருந்தாலும் சரி, அவன் திருநெல்வேலிக்கு வந்தால் அவனை உடனே பிடித்து வந்து தன்னிடம்

ஒப்படைக்குமாறு, திருநெல்வேலிச் சீமையைக் கும்பினியாரிடமிருந்து குத்தகைக்கு எடுத்திருந்த ராஜா ஹகுமத்ராவ் கட்டளை பிறப்பித்தான்.

இதனால் அச்சம் மிக்க கொண்ட ஜெகவீரன், தான் அகப்பட்டுக் கொண்டால் தன்னைக் கைது செய்து விடுவார்கள் என்று அஞ்சி, இராமநாதபுரத்திலேயே தங்கிவிட்டான்.

இதையறிந்த ராஜா ஹகுமத்ராவ், ஜெகவீரனின் உறவினன் ஒருவனைப் பிடித்து, அவனைப் பாஞ்சாலங்குறிச்சி பாளையத்தின் தலைவனாக்கினான்.

சிறிது காலத்திற்கெல்லாம், ராஜா ஹகுமத்ராவைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டு, ஆங்கிலக் கும்பினி சையது முகமதுகான் என்பவனைக் குத்தகைதாரனாக நியமித்தது.

இதைக் கேள்விப்பட்டதும், ஜெகவீரனுக்கு ஒரு புதிய தெம்பு பிறந்தது.

மேலும், இந்தச் சமயத்தில் ஆங்கிலக் கும்பினியாரின் கவனம் மைசூரை நோக்கியும் வடநாட்டின் பக்கமும் திரும்பியிருந்தது.

இன்னும் சிறிது நாள்களுக்கு அவர்கள் திருநெல்வேலிப் பக்கமே திரும்பிப் பார்க்கமாட்டார்கள் என்ற தைரியத்தில், ஜெகவீரபாண்டியன் தன்னிடம் மிஞ்சியிருந்த தெலுங்குப் படைகளுடன் இரவோடிரவாகப் பாஞ்சாலங்குறிச்சியை நோக்கிப் புறப்பட்டுச் சென்றான். அங்குப் பதவியிலிருந்த புதுப் பாளையக்காரனைப் படுகொலை செய்து விட்டு, தானே மீண்டும் பாஞ்சாலங்குறிச்சியின் பாளையக்காரன் எனப் பிரகடனம் செய்து கொண்டான்.

தன்னுடைய இந்தச் செய்கையால் கும்பினியின் பகையை வளராமல் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும் பொருட்டு, அவன் ஒரு காரியம் செய்தான். அதாவது, கையில் கப்பப் பணத்துடன் திருநெல்வேலிக்குச் சென்று, அங்குள்ள புதிய குத்தகைக்காரனாகிய சையது முகமது கான் காலிலே சாஷ்டாங்கமாக வீழ்ந்தான். அவனுக்கு வேண்டிய கையுறைகளையும் வழங்கினான். இனிமேல் தான் என்றென்றைக்கும் கும்பினியாரிடம் விசுவாசமாக நடந்து கொள்வதாய்ப் பிரமாணம் செய்து கொடுத்தான்! அந்தப் பிரமாணத்தை உண்மையென்று நம்பிய கும்பினியாரும், அவ்வாறே நடந்து கொள்ளுமாறு அவனுக்குக் கட்டளையிட்டார்கள்.



ஆனால் கட்டபொம்மன் தன் பரம்பரைப் புத்தியை விடவில்லை. மேஜர் பிளிண்டிடம் தன் கோட்டையை விட்டு விட்டுத் தூத்துக்குடிக்கு ஓடிப்போன அந்த அவமான நிகழ்ச்சி அவன் மனத்தை விட்டு அகலவில்லை. இனியொரு முறை ஆங்கிலேயர்கள் அவ்வாறு படையெடுத்து வருவார்களே யானால், அவர்களுக்கு ஈடுகொடுக்கும் அளவுக்குத் தன் கோட்டையை வலுப்படுத்திக் கொள்ள வேண்டும், ஆயுத பலத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டும் என்று அவன் ஆசைப்பட்டான்.

அதே சமயத்தில், ஜெகவீரனுக்குக் கைக்கூலி கொடுத்து, ஆங்கிலக் கும்பினிக்கு எதிராகச் சதிவேலை செய்யத் திட்டமிட்டார்கள் தூத்துக்குடியில் இருந்த டச்சுக்காரர்கள். அத்திட்டத்துக்கு உடன்பட்டான் ஜெகவீரபாண்டியன். அவன் டச்சுக்காரர்களோடு இரகசியமாகத் தொடர்பு கொண்டு, அவர்களது பணத்தைக் கொண்டு தன்னுடைய பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை மிக வலுவாகக் கட்டிக் கொண்டான். அந்த மமதையில், தன்னைவிட சிற்றூர்களை யுடைய பாளையக்காரர்களிடம் காவல் பணம் கேட்கத் தொடங்கினான். அதைக் கொடுக்க மறுத்தவர்களின் ஊர்களைக் கொள்ளையடித்தான்.

ஜெகவீரபாண்டியனுக்கும் டச்சுக்காரர்களுக்கும் வரவர மிகவும் நெருக்கமான தொடர்பு வளர்ந்து வருவதைக் கண்டு, ஆங்கிலக் கும்பினியார் அச்சமுற்றார்கள். ஆகவே, ஜெகவீர பாண்டியனை இனியும் வளர விடக்கூடாதென்று தீர்மானித்தார்கள்.

இதற்கிடையில், ஆர்க்காட்டு நவாபுக்கும் கும்பினிக்கும் இடையே ஓர் உடன் படிக்கை கையெழுத்தாயிற்று. அவ்வுடன்படிக்கையின்படி, திருநெல்வேலிச் சீமையில் வரி வசூல் செய்யும் அதிகாரங்கள் அனைத்தும் ஆங்கிலேயர் கைக்கு வந்தன. உடனே அவர்கள், இப்போது நாம் கலெக்டர் என்று அழைக்கிறோமே, அது போன்ற அதிகாரமுள்ள ஓர் ஐரோப்பிய அதிகாரியின் வசத்தில் திருநெல்வேலிச் சீமையை ஒப்படைத்தார்கள்.

அந்த அதிகாரியின் பெயர் ஜார்ஜ் புராக்டர். இவருக்குச் சிவில் கிரிமினல் அதிகாரங்கள் யாவும் வழங்கப்பட்டன.

இவருக்கு அடுத்தபடியாகக் கலெக்டராக வந்தவர் எயில்ஸ் இர்வின் என்பவர். இவர் வந்த நேரம், கருவூலம் காலியாகக் கிடந்தது. பாளையக்காரர்களிடமிருந்து கப்பத் தொகைகள் வந்து சேரவில்லை. கும்பினிச் சிப்பாய்களும் அதிகாரிகளும்கூட, அரை வயிறு உணவையுண்டு கிழிந்து போன கந்தல் உடுப்புக்களை மாட்டிக் கொண்டு திரிந்தனர்.

இந்த நிலையில் என்ன செய்வது என்று தடுமாற்றம் கொண்ட இர்வின், இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தான். அதமாவது, நன்கு பயிற்றுவிக்க பட்ட பெரியதொரு ராணுவத்தை உடனே திருநெல்வேலிச் சீமைக்கு அனுப்பி வைக்குமாறு, சென்னையிலுள்ள கும்பினியின் தலைமைக் காரியாலயத்துக்கு ஒரு கடிதம் எழுதியனுப்பினான்.

இர்வினின் இந்த வேண்டுகோளுக்கிணங்க, கர்னல் புல்லாட்டன் என்பவன் தலைமையில் ஒரு பெரிய ராணுவம் திருநெல்வேலிச் சீமைக்கு அனுப்பி வைக்கப்பட்டது.



தென்னகத்தில் உள்ள பாளையங்கள் அனைத்தையும் தரைமட்டமாக்கி அழித்துவிடுவது என்ற முடிவோடு புறப்பட்ட புல்லர்ட்டன் பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்து சேர்ந்தான். அங்கு வந்ததும், அவ்வூருக்குப் பக்கத்தில் முகாம் அமைத்துக் கொண்டு, பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக் குள்ளிருப்பவர்களுக்குச் செய்தி சொல்லியனுப்பினான். அந்தச் சமயம்-

ஜெகவீரபாண்டிய கட்டபொம்மனும் அவனது டச்சுத் தோழர்கள் சிலரும் சொக்கம்பட்டியென்னும் மறத் தமிழர் பாளையத்தைக் கொள்ளையடிப்பதற்காகப் புறப்பட்டுப் போயிருந்தனர். தலைவன் ஊரிலில்லாததால், கோட்டைக் குள்ளிருந்த கோழைகள் புல்லர்ட்டனை நேரில் வந்து கண்டு பேச அஞ்சியவர்களாய், கோட்டைக் கதவுகளை அடைத்துக் கொண்டார்கள்! உடனே புல்லர்ட்டன் அக்கோட்டையைத் தாக்கிப் பிடிக்கத் தீர்மானித்தான்.

பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை மண் கோட்டைதான் என்றாலும், டச்சுக்காரர்களின் உதவியால் கட்டப் பட்டதல்லவா? அதனால் அது ஓர் ஆற்றலுள்ள கோட்டையாக இருந்தது. கோட்டை சமவெளியிலேதான் கட்டப் பட்டிருந்தது. கோட்டையைச் சுற்றி அகழி ஏதும் கிடையாது. அதன் பாதுகாப்பிற்காக வெறும் இலந்தை முள் வேலிதான் போடப்பட்டிருந்தது.

இந்தக் கோட்டைக்குள்ளேதான் ஜெகவீரபாண்டிய கட்டபொம்மனின் அரண்மனை இருந்தது. அவனைச் சார்ந்தவர்கள் வாழ்வதற்காக, அந்த அரண்மனையைச் சுற்றிச் சிறு சிறு வீடுகள் கட்டப்பட்டிருந்தன. இந்த வீடுகளுக்கு நடுவேதான் கம்பளத்தார்களின் குலதெய்வமாகிய ஜக்கம்மா கோயில் இருந்தது. குதிரைக் குளம்பு வடிவத்தில் கட்டப்பட்டிருந்த இக்கோவிலையடுத்து நெற்களஞ்சியம் இருந்தது.

கோட்டைக்கு வெளியே ஊரும், ஊரைச் சுற்றிப் பல குளங்களும் இருந்தன. கோட்டையையடுத்து வெளியே ஒரு சிவன் கோயில் இருந்தது.

கர்னல் புல்லர்ட்டன் கோட்டையைத் தாக்கக் கட்டளை பிறப்பித்தான். உடனே பீரங்கிகளிலிருந்து குண்டுகள் பறந்தன.

தொடக்கத்தில் வடக்கு மூலையிலிருந்த கொத்தளத்தைப் பீரங்கி கொண்டு தாக்கினான். பிறகு, பின்பக்கத்திலுள்ள சுரங்கத்தைத் தாக்கினான். இப்படி கொத்தளத்தையும் சுரங்கத்தையும் தாக்கிக் கொண்டிருக்கும்போது இரவு வந்தது.

இரவு வந்ததும் கோட்டையைச் சுற்றிலுமுள்ள இலந்தை முள்வேலியைத் தன் ஆட்களின் துணைகொண்டு அவன் அப்புறப்படுத்தினான். பிறகு கோட்டையை இன்னும் நெருங்கித் தாக்கினான்.

கடுமையான பீரங்கித் தாக்குதல் தொடர்ந்து நடந்து கொண்டேயிருந்தது. அதற்கு ஆற்றாமல் ஒரு பக்கத்துக் கோட்டைச் சுவர் இடிந்து விழுந்தது. சற்று நேரத்தில் மற்றொரு பக்கத்துச் சுவரும் வீழ்ந்தது. உடனே கும்பினி வீரர்கள் கோட்டைக்குள் புகுந்தனர்.

அதைக் கண்ட கிலியடைந்த பாஞ்சாலங்குறிச்சி "வீரர்கள்", கோட்டையின் கிழக்கு வாசல் வழியாக வெளியே ஓடினார்கள்.

கோட்டையைக் கைப்பற்றியதும், கர்னல் புல்லர்ட்டன் அதைச் சோதனை போட்டான்.

கோட்டைக்குள்ளே டச்சுக்காரர்களிடமிருந்து பெறப் பட்ட ஆயுதங்களும் பீரங்கிகளும் ஏராளமாக இருந்தன. கோட்டைக் கஜானாவில் நாற்பதினாயிரம் டச்சு வராகன்கள் இருந்தன. இதைத் தமக்குள் பங்கு போட்டுக் கொள்ளுமாறு கும்பினி வீரர்களிடம் தூக்கியெறிந்தான் கர்னல் புல்லர்ட்டன்!



கோட்டைக்குள் அகப்பட்டுக் கொண்ட பாஞ்சாலங் குறிச்சிக்காரர்கள் அத்தனை பேரும் கைது செய்யப்பட்டனர். அவர்களில் ஜெகவீரபாண்டிய கட்டபொம்மனின் மகள் ஒருத்தி!

எல்லாவற்றிற்கும் மேலாக, கும்பினியாருக்குப் பெரும் சொத்து ஒன்று கிடைத்தது. அதுதான் டச்சுக்காரர்களும் ஜெகவீரபாண்டிய கட்டபொம்மனும் செய்து கொண்ட உடன்படிக்கையின் மூல பத்திரம்!

இந்தப் பிரதி இன்றும் சென்னை ரிக்கார்டு ஆபீசில் இருக்கிறது.

தன்னுடைய பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையைத் தளபதி புல்லர்டன் பிடித்துக் கொண்டு விட்டான் என்பதைக் கேள்விப்பட்டதும், ஜெகவீரபாண்டியனும் அவனது டச்சு நண்பர்களும் சொக்கம்பட்டியைவிட்டுப் புறப்பட்டு வந்தனர். ஆனால் அவர்கள் நேரே பாஞ்சாலங்குறிச்சிக்கு வரவில்லை. காரணம், ஜெகவீரனது படை வீரர்கள் சொக்கம்பட்டியைக் கொள்ளையடிக்கப் போனதில் காட்டிய உற்சாகத்தை, ஆங்கிலேயரிடமிருந்து பாஞ்சாலங்குறிச்சியை மீட்பதில் காட்டவில்லை. அவர்களில் பலர் கும்பினிப் பட்டாளத்தை எதிர்க்க அஞ்சி மெல்ல நழுவினார்கள். டச்சுப்படை வீரர்களும் வரும் வழியிலேயே தூத்துக்குடிக்குத் திரும்பி விட்டார்கள். சொக்கம்பட்டியைக் கொள்ளையடிப்பதில் அவர்களுக்கு லாபம் உண்டு. ஆனால் பாஞ்சாலங்குறிச்சியை மீட்பதிலே அவர்களுக்கு என்ன லாபம்?

இயல்பாகவே ஜெகவீரபாண்டிய கட்டபொம்மன் ஒரு கோழை. அதிலு ் தன் படை பலம் குறைந்த பின் அவன் எப்படி வருவான் பாஞ்சாலங்குறிச்சியை மீட்க! எனவே, அவன் அப்போதைக்கு ஓரளவு பலம் பெற்றிருந்த சிவகிரிப் பாளையத்துக்குச் சென்று, அப்பாளையக்காரரிடம் தஞ்சம் புகுந்து ஒளிந்து கொண்டான்.

சிவகிரிப் பாளையத்துக்குக் காப்டன் கிரஹாம்பெல் என்பவன் ஏற்கெனவே கும்பினி அதிகாரியாக வந்திருந்தான். அவன் அப்பாளையத்தில் படுகொலை செய்யப்பட்டான். அதனால் சிவகிரிப் பாளையத்தின் மீது கும்பினியார் முன்னமேயே பகைமை பாராட்டி வந்தார்கள். தன் பகைவனுக்கும் பகைவன் தனக்கு நண்பன் என்ற கொள்கையை அனுசரித்து, டச்சுக்காரர்கள் சிவகிரியானிடத்து நட்புரிமை கொண்டாடி, நிறைந்த அளவில் ஆயுதங்கள் வெடிமருந்து முதலிய உதவியளித்து வந்தார்கள். இதையெல்லாம் காரணமாகக் கொண்டு, புல்லர்ட்டன் சிவகிரிப் பாளையத்தின் மீது படையெடுத்தான்.

புல்லர்ட்டனது கும்பினிப் படைகள் சிவகிரிப் பாளையத்தை முற்றுகையிட்டன. உடனே சிவகிரியிலிருந்த பாளையக்காரர்கள் சிவகிரியைக் கைவிட்டுக் கோம்பைக்கு வந்தார்கள்.

கோம்பையைச் சுற்றி ஒரு மிகப் பெரிய முள் வேலி. முள் வேலியைச் சூழ்ந்து ஒரு காடு. முதலில் அந்தக் காட்டை முற்றுகையிட்டான் புல்லர்ட்டன். பின்னர் அவனுக்கும் பாளையக்காரர்களுக்குமிடையே சிறிது சமாதான முயற்சிகள் நடைபெற்றன. ஆனால், அவை கைகூடாமல் போய்விடவே, காட்டைத் தாக்கிக் கைப்பற்றுமாறு புல்லர்ட்டன் தன் படை வீரர்களுக்குக் கட்டளையிட்டான்.

கடுமையான தாக்குதலுக்குப் பிறகு, காட்டின் பெரும்பகுதி கும்பினிப் படைகளின் வசமாகியது. அந்தச் சமயத்தில், சற்றும் எதிர்பாராத விதமாக, திண்டுக்கல் பகுதியில் நிகழ்ந்த மைசூர் மன்னனின் படையெடுப்பைச் சமாளிப்பதற்காக, புல்லர்ட்டன் உடனே திரும்பி வரவேண்டுமென்று கும்பினி அதிகாரிகள் உத்தரவு அனுப்பினர்.

இந்த இரண்டும் கெட்டான் நிலையில் திரும்பிச் சென்றால் பெற்ற வெற்றி வீணாகிவிடுமேயென்று



புல்லர்ட்டன் கவலைப்பட்டான். இருந்தாலும் மேலிடத்துக் கட்டளையை அவனால் மீற முடியாதல்லவா? எனவே அவன் சிவகிரியானையும் பாஞ்சாலங்குறிச்சியானையும் நேரில் அழைத்து, "நீங்கள் இருவரும் உடனே பணிந்து உங்கள் பாக்கிக் கப்பத் தொகை முழுவதையும் கொண்டு வந்து கட்ட வேண்டும். அப்படிக் கட்டாவிட்டால், உங்கள் சிவபெருமான்மீது ஆணையாக உங்களை நிர்மூலம் செய்து விட்டுத்தான் போவேன்!" என்று சத்தியம் செய்தான்.

ஐரோப்பியக் கிறிஸ்தவன் ஒருவன் இவ்வாறு சிவபெருமான்மீது ஆணையிட்டுப் பேசுவதைக் கண்டதும், சிவகிரியானும் பாஞ்சாலங்குறிச்சியானும் உண்மையிலேயே பயமடைந்து விட்டார்கள். எனவே, ஒவ்வொருவரும் தத்தம் பழைய கப்பப் பாக்கிக்காக முப்பதினாயிரம் சக்கரமும், தமது பழைய கோட்டைகளைத் திரும்பப் பெறுவதற்காகப் பதினையாயிரம் வராகனும் கொடுப்பதாக ஒப்புக் கொண்டார்கள். இந்த ஏற்பாடு புல்லர்ட்டனுக்கும் பிடித்திருந்ததால், அவன் அந்தத் தொகைகளைப் பெற்றுக் கொண்டு கோட்டைகளைத் திருப்பிக் கொடுத்தான். ஜெகவீரபாண்டிய கட்டபொம்மனும் அவமானத்தால் விழுங்கப் பெற்றவனாய் மறுபடியும் பாஞ்சாலங்குறிச்சிக்குத் திரும்பி வந்தான். புல்லர்ட்டனால் பாளையங்கோட்டையில் கைது செய்து வைக்கப்பட்டிருந்த அவனது மகளும் மற்ற உறவினர்களும் விடுதலை செய்யப்பட்டார்கள்.

அன்று முதற் கொண்டு பெட்டிப் பாம்பாக அடங்கிப் போய் விட்டான் ஜெகவீரபாண்டியன். இனிமேல் இத்தகைய ஆபத்துகள் தனக்கு வந்து விடக் கூடாதேயென்பதற்காக, கும்பினியார்களிடம் அவன் மிகவும் பணிவோடும் பரிவோடும் நடந்து கொண்டான். கும்பினியாருடைய பிரியத்தை எப்படியெல்லாம் சம்பாதித்துக் கொள்ளலாம் என்பதிலேயே அவன் இடைவிடாது கண்ணும் கருத்துமாயிருந்து வந்தான்.

அப்படிப்பட்ட வேளையில் கும்பினியாரிடம் தனக்கு விசுவாசத்தைக் காட்டிக் கொள்வதற்கு, ஜெகவீரபாண்டியனுக்கு ஒரு வாய்ப்பு வந்தது. அதாவது-

கும்பினிக்கும் சிவகிரிப் பாளையத்துக்குமிடையே ஒரு தகராறு ஏற்பட்டது. அந்தப் பாளையத்தின்மீது கும்பினியார் படையெடுக்கத் தீர்மானித்தார்கள். சிவகிரிப் பாளையத்தான் ஜெகவீரனுக்கு எத்தகைய உதவிகள் செய்திருக்கிறான் என்பதை நாம் ஏற்கெனவே பார்த்திருக்கிறோம். அந்த நன்றியை முன்னிட்டாவது, கும்பினியாரின் அந்தப் படையெடுப்பைத் தடுக்க அவன் முயன்றிருக்கலாம். அது முடியாது போனால், அவன் சும்மாவாவது இருந்திருக்கலாம். இப்படியெல்லாம் செய்யாமல், கும்பினியாரோடு தானும் சிவகிரியான்மீது படையெடுத்துச் சென்றான் ஜெகவீரபாண்டியன்! இத்தகைய நன்றி கொன்ற ஒருவனை வரலாறு கண்டதில்லை! வரலாறு கண்டதில்லை!

அது மட்டுமா? கும்பினியாரை எதிர்ப்பவர்கள் யாராயிருந்தாலும் அவர்களைத் தானே முன்னின்று அடக்குவதாகச் சொல்லிக் கொண்டு, வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் பிற பாளையத்து மக்களைக் கொள்ளையடித்தும் கொலை புரிந்தும் வந்தான் ஜெகவீரபாண்டிய கட்டபொம்மன். இத்தகைய அவனது அக்கிரமங்களுக்கும், அட்டூழியங்களுக்கும் ஆளானவர்களில், அருங்குளம், சுப்பலாபுரம் என்னும் இரண்டு கிராத்து மக்களும் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவர்களாவர்!

இந்த இரண்டு கிராமங்களும் எட்டயாபுரம் பாளையத்தைச் சேர்ந்தவை. தன் பொறுப்பிலிருக்கும் கிராமங்களை ஜெகவீரன் இவ்வாறு சூறையாடித் தன் வசப்படுத்திக் கொண்டதைக் கண்டு, அளவறிந்த ஆத்திரம் அடைந்தான் எட்டயாபுரம் பாளையக்காரன். ஆனால் அந்தச் சமயத்தில் ஜெகவீரன் ஆங்கிலேயருக்கு மிகவும் வேண்டியவனாகவும் நல்ல பிள்ளையாகவும் நடந்து



கொண்டிருந்தபடியால், எட்டயாபுரத்தானது புகாரை அவர்கள் பொருட்படுத்தவில்லை. பாஞ்சாலங்குறிச்சிக்கும் எட்டயாபுரத்துக்கும் பரம்பரையாக இருந்த பகைமை உணர்ச்சி வளர்ந்து முற்றுவதற்கு இதுவும் ஒரு காரணமாய் அமைந்தது. இந்தப் பகைமையின் தொடர்ச்சிதான் பிற்பாடு வீரபாண்டிய கட்டபொம்மன் காலத்திலும் வந்து நின்றது.

தென்னகத்தில் இத்தகு சூழ்நிலை இருந்து வந்த நேரத்தில், வட இந்தியாவிலும் ஆங்கிலக் கும்பினியின் ஆதிக்கம் எங்கும் பரவலாக வேரூன்றி வந்தது. வங்கத்தில் ஆங்கிலேயர் தமது வலுவான ஆட்சியை நிலை நிறுத்தினார்கள். அவர்களுக்குப் பகைவர்களாயிருந்த சுதேச மன்னர்கள் மட்டுமின்றி, பிரஞ்சுக்காரர்கள் டச்சுக்காரர்களும் கூட ஒடுக்கப்பட்டனர் அல்லது ஒழிக்கப்பட்டனர்.

ஆர்க்காட்டு நவாபுக்கு ஏற்பட்ட பணத்தேவை அடங்கவேயில்லை. காரணம், அவன் பகல் இரவு என்ற பாகுபாடு இல்லாமல் மதுவிலும் மங்கையிலும் மயங்கிக் கிடந்தான். ஒழுங்கான வரவு இல்லை, செலவு இல்லை, கணக்கில்லை. அவனை ஒழிக்க வேண்டுமென்ற எண்ணத்தோடேயே அவன் கேட்கும்போதெல்லாம் பணம் கொடுத்துக் கொண்டிருந்தனர் கும்பினியார். கடைசியாக, அவர்கள் அவனது அதிகாரங்களையெல்லாம் அறவே பறித்துக் கொண்டு, அவனை ஆர்க்காட்டிலிருந்து கிளப்பிச் சென்னையில் கொண்டு போய் வைத்துவிட்டார்கள்!

பின்னர் 1790-ம் ஆண்டில், அவர்கள் துணிவோடு ஒரு பிரகடனத்தை வெளியிட்டார்கள். "அரசாட்சியின் சகல அதிகாரங்களும் இனிக் கும்பினியார் வசமே இருந்து வரும். பாளையக்காரர்களும் மற்ற குறுநில கிழார்களும், ஆங்கில கொடிக்கும் ஆங்கில கம்பெனிக்கும் கும்பினிக்கும், விசுவாசம் தெரிவித்து மரியாதை காட்ட வேண்டும்!" என்பதே அந்தப் பிரகடனத்தின் சாரம். முற்றிலும் சர்வாதிகாரம் வாய்ந்த இந்தப்

பிரகடனத்தைத் தலைவணங்கி ஏற்றுக் கொண்டான் ஜெகவீரபாண்டியன்.

1790 பிப்ரவரி 2-ம் நாளன்று ஜெகவீரபாண்டிய கட்டபொம்மன் இவ்வுலக வாழ்வை நீத்தான். அப்போது ஆங்கிலக் கும்பினி ஓர் அனுதாபச் செய்தியை அறிவித்தது. அந்தச் செய்தியின் வாசகம் என்ன தெரியுமா!

"ஆங்கில ஆட்சி ஒரு விசுவாசமுள்ள ஊழியரை இழந்து நிற்கிறது!"

இதுவே அந்த அனுதாபச் செய்தி!

இதற்குப் பிறகும் அவனை யாரேனும் ஒரு விடுதலை வீரன் என்று பாராட்டத் துணிந்தால் அத்தகைய புத்திசாலிகளைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்!

### வந்துவிட்டான் கொள்ளைக்காரன்

ஜெகவீர பாண்டிய கட்டபொம்மன் காலமான பிறகு, அவன் மகன் வீரபாண்டிய கட்டபொம்மன் பாஞ்சாலங் குறிச்சிப் பாளையக்காரனானான். இவன்தான் ம.பொ.சி. கட்டபொம்மன்! இவன்தான் இக் "காவியத் தலைவனா"கிய கொள்ளைக்கார கெட்டிபொம்மு! பாஞ்சாலங்குறிச்சிப் பரம்பரையிலே நாம் காணப் போகிற கடைசிக் கட்டபொம்மனும் இவனேதான்!

இவனது தந்தை ஜெகவீரபாண்டியனுக்கு மனைவியர் ஒருவர் இருவரல்லர்; பலர் இருந்தனர். அவர்களில் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கவர்கள் நான்கு பேர். அந்நால்வருக்குள் மூத்தவள் பெயர் சடாணனி. இவளை ஆறு முகத்தம்மாள் என்றும் அழைப்பதுண்டு. மற்ற மூன்று மனைவியரின் பெயர்கள் முறையே பொம்மு அம்மாள், போடம்மாள், காந்திமதியம்மாள் என்பனவாம்.



மூத்த மனைவி சடாணனியம்மாளுக்கு மொத்தம் ஐந்து குழந்தைகள். அவர்களில் ஆண்கள் மூவர்; பெண்கள் இருவர். இவரில் மூத்தவனாய்ப் பிறந்தவன்தான் வீரபாண்டிய கட்டபொம்மன்.

வீரபாண்டிய கட்டபொம்மனுக்கு அடுத்தபடியாக, அவனுடைய தம்பியாகிய ஊமைத்துரை என்பவனைப் பற்றி வரலாற்று ஆசிரியர்களும் நாடோடிக் கவிகளும் வியந்து பேசக் கேட்டிருக்கிறோம். ஆனால், இந்த ஊமைத்துரை யார், அவன் வீரபாண்டியனின் முதல் தம்பியா அல்லது இரண்டாவது தம்பியா என்பதைப் பற்றி ஒரு குழப்பம் இருந்து வருகிறது.

வீரபாண்டிய கட்டபொம்மன் கறுத்தையா என்ற பெயரால் அழைக்கப்பட்டான். அடுத்தவன் செவத்தையா என்றும் குமாரசாமியென்றும் அழைக்கப்பட்டான். மூன்றாமவன் துரைசிங்கம் என்றும் சுப்பையா என்றும் அழைக்கப்பட்டான். இது பொதுவாக வழக்கில் இருந்து வரும் செய்தி.

"வீரபாண்டியன் 1760-ம் ஆண்டு ஜனவரி மாதம் மூன்றாம் நாள் ஜெகவீர கட்டபொம்மன் என்ற தந்தைக்கும், ஆறுமுகத்தம்மாள் என்ற தாய்க்கும் மகனாகப் பிறந்தான். இவனுக்குப் பின்னர் குமாரசாமி, துரைசிங்கம் என்ற தம்பியர் இருவர் பிறந்தனர். வீரபாண்டியனைக் கறுத்தையா என்றும், துரை சிங்கத்தைச் சுப்பையா என்றும் மக்கள் அழைப்பதுண்டு. குமாரசாமி செவ்வையாகப் பேசும் திறனற்றிருந்ததால், அவனை ஊமைத்துரை யென்றும் அழைக்கலாயினர்."

தலைவர் ம.பொ.சி. அவர்கள் தமது "வீரபாண்டிய கட்டபொம்மன்" என்னும் நூலின் பன்னிரண்டாம் பக்கத்தில் தந்திருக்கும் கருத்து இது.

குமாரசாமியே ஊமைத்துரை யென்னும் இக்கருத்தை முதலில் வெளியிட்டவர் கவிராஜ பண்டிதர் ஜெகவீர

பாண்டியனார் ஆவர். (அவரது "வீரபாண்டியம்" என்னும் நூலைப் பார்க்க) அவரைப் பின்பற்றி, ம.பொ.சி.யைப் போலவே வேறு சில ஆசிரியர்களும் அக்கருத்தை வழிமொழிந்திருக்கிறார்கள்.

ஆனால் வரலாற்று ஆசிரியர் தி. நா. சுப்பிரமணியம் அவர்கள் இதை ஏற்றுக் கொள்ளவில்லை. அவர் தமது 'கட்ட பொம்மு' என்று நூலில், 92-ம் பக்கத்தில் கூறுகிறார்:

"அவருக்கு மூன்று பிள்ளைகளும் இரண்டு பெண்களும் பிறந்திருந்தனர். மூத்த மகனுக்கு வீரபாண்டியன் என்று பெயர். அவர் கருத்தையா என்றே பொதுவாக அழைக்கப் படுவார். அவருக்கு அடுத்த தம்பிக்குக் குமாரசாமியென்று பெயர். அவர் சிறந்த போர் வீரராதலால் தளவாய் குமாரசாமியென்றும், சிவத்தையா என்றும் குறிக்கப்படுவார். மூன்றாமவர் துரைசிங்கம் என்ற பெயருடைய பிள்ளை. அவரை ஊமைத்துரை யென்றே அழைப்பார்கள்"

இனி எம்.எஸ். சுப்பிரமணிய ஐயர் என்ற சரித்திர ஆசிரியர் இதைப் பற்றி என்ன சொல்கிறார் என்பதைக் கவனிப்போம்:

"மூத்த மைந்தனுக்கு வீரபாண்டியன் என்று பெயரிட்டனர். அப்புதல்வர் சிவத்த மேனி படைத்தவர். ஆதலின் சிவத்தையா என்றும் அவரை வழங்குவதுண்டு. அப்பிள்ளைகளில் இரண்டாமவர் குமாரசாமியெனப் படுவார். அக் குமாரசாமி மெல்லிய சரீரம் வாய்ந்தவர். வாய் சிறிது கோணல். அதனால் யாரோடும் அதிகம் பேசார். பெரிதும் மௌனமாய் இருப்பார். ஆதலின் ஊமைத்துரை யென்றும் பெயர் பெற்றார். பேராற்றலும் போராற்றலும் வாய்ந்தவர். ஆதலால் தளவாய் குமாரசாமி என்னும் பெயரும் வழங்கியது. மூன்றாம் மைந்தர் துரைசிங்கம் என்னும் பெயரினர். இவர் கறுத்த மேனி படைத்தவர். ஆதலின் கறுத்தையா என்று வழங்கப் பெற்றார்"



"வீர கட்டபொம்மு" என்ற நூலின் 11-ம் பக்கத்தில் எம்.எஸ். சுப்பிரமணிய ஐயர் சொல்லியிருப்பது இது.

"திருநெல்வேலிச் சீமை சரித்திரம்" எழுதிய குருகுகதாசப் பிள்ளை என்ன சொல்கிறார் என்றால்,-

"வீரபாண்டிய கட்டபொம்மனுக்கு இரண்டு சகோதரிகள், இரண்டு சகோதரர்கள். சகோதரர்களின் மூத்தவர் பெயர் குமாரசாமி நாயக்கர். அடுத்தவர் பெயர் சுப்பா நாயக்கர் என்ற குமாரசாமி நாயக்கர். இவர் ஊமையாயிருந்தார்."

இதுவே குருகுகதாசப் பிள்ளையின் கருத்து.

இதன்படி, வீரபாண்டியனின் கடைசி சகோதரன்தான் ஊமையென்பது தெளிவாகிறது. ஆனால், அதே நேரத்தில், அவனது இரண்டு சகோதரர்களும் குமாரசாமியென்ற பெயரால் அழைக்கப்பட்டதாகக் கூடவே ஒரு குழப்பத்தையும் குருகுகதாசப் பிள்ளை உண்டு பண்ணிவிடுகிறார்!

நாட்டுப் பாடல்கள், கும்மி, ஓலைச் சுவடிகள் ஆகியவைகளில் வீரபாண்டியனின் சகோதரர்கள் பற்றி, ஊமைத்துரை, தளவாய் குமாரசாமி, துரைசிங்கம் என்ற பெயர்கள் அடிபடுகின்றன. அதே நேரத்தில் பெரிய நாயக்கர், காளை பொம்முதுரை, செல்ல பொம்முதுரை போன்ற பெயர்களாலும் இந்தச் சகோதரர்கள் அழைக்கப்படுகிறார்கள்.

பிஷப் கால்டுவெல் ஊமைத்துரையை "டம் பிரதர்" (Dumb Brother) அதாவது, ஊமைச் சகோதரன் என்று அழைக்கிறார். அவன் வீரபாண்டியனின் கடைசிச் சகோதரன் என்பது அவர் கருத்து.

வீரபாண்டிய கட்டபொம்மன் தூக்கிலிடப்பட்ட பிறகு, அவனது சகோதரர்களும் மற்றுமுள்ள அவனது குடும்பத்தைச்

சார்ந்தவர்களும், பாளையங்கோட்டைச் சிறையில் வைக்கப்பட்டிருந்தார்கள். அப்போது அந்தச் சிறை அதிகாரிகள் எழுதிவைத்த சில ரிக்கார்டுகளிலிருந்து, ஊமைத்துரை யார் என்பதை நாம் மிகவும் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியும்.

"The late Poligar of Panjalankurichi, who had been executed at Kaitar in September 1799, left two brothers both kept in confinement in the Palamcottah Jail. The elder is described as a feeble person, but was regarded by his sympathising adherents and the natives generally as the true heir to the confiscated estate and called by the family little Kattaboma Nayaka the younger. though dumb and a mere boy, was a person of great energy and full of resources."

இதைக் கீழே மொழி பெயர்த்துத் தருகிறேன்.

*"1799-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் கயத்தாற்றில் தூக்கிலிடப்பட்ட காலஞ்சென்ற பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரனின் இரண்டு சகோதரர்களும் பாளையங் கோட்டைச் சிறையில் காவலில் வைக்கப்பட்டிருந்தனர். அதில் மூத்தவன் மிகவும் பலவீனமானவன். ஆனாலும் அவனே பறிமுதல் செய்யப்பட்ட பாஞ்சாலங்குறிச்சி பாளையத்தின் உண்மையான வாரிசு என்று அப்பகுதி மக்களும் ஆதரவாளர்களும் கருதினார்கள். அவனைப் பாஞ்சாலங் குறிச்சிப் பாளையக்காரர்களின் பரம்பரைப் பட்டமான கட்டபொம்மன் என்ற பெயரால் அழைக்கலாயினர். இளையவன் வயதில் மிகச் சிறியவனாக இருந்தாலும், ஊமையாக இருந்த போதிலும், மிகவும் ஊக்கமும் மதி வலியும் பெற்றவனாக இருந்தான்."*

இது அந்தச் சிறை ரிக்கார்டுகளில் காணப்படுகிற குறிப்பு.

இது போன்ற பிற குறிப்புகளையும், பின்னால் நடந்த பல நிகழ்ச்சிகளையும் நன்றாக ஆராய்ந்த பிறகு, நான் கீழ்க்கண்ட முடிவுக்கு வருகிறேன்;



அதாவது -

1) வீரபாண்டிய கட்டபொம்மனுக்கு இரண்டு சகோதரர்கள், 2) அதில் கடைசிச் சகோதரன்தான் ஊமையாக இருந்தவன், 3) அதனால், அவனே ஊமைத்துரையென்று அழைக்கப்பட்டான்.

வீரபாண்டிய கட்டபொம்மனுக்கு இரண்டு சகோதரிகள். அவர்களில் மூத்தவள் பெயர் ஈசுவர வடிவு, இளையவள் பெயர் துரைக்கண்ணம்மாள்.

வீரபாண்டியனின் தாத்தாவான பொல்லாப் பாண்டிய கட்டபொம்மனுக்கு, பூஞ்சனம்மாள் என்றொரு சகோதரியிருந்தாள். அவளுக்குச் சுப்பிரமணிய நாயக்கன் என ஒரு மகனிருந்தான். அவனுக்கு நான்கு பையன்களும் ஒரு பெண்ணும் இருந்தனர்.

வீரபாண்டியனின் தந்தையான ஜெகவீரபாண்டியனுக்கு சின்ன பொம்மு என்று ஒரு தம்பியிருந்தான். இந்தச் சின்ன பொம்மு நாயக்கன் கடைசி வரையில் கல்யாணம் செய்து கொள்ளவில்லை. தன் அண்ணன் ஜெகவீரன் ஆட்சியிலிருந்தபோது, இவன் அவனுக்கு அமைச்சனாக இருந்து வந்தான்.

வீரபாண்டிய கட்டபொம்மன் பட்டத்துக்கு வந்தவுடன் இந்தச் சின்ன பொம்முவைப் பதவியிலிருந்து நீக்கி விட்டான். இதற்குக் காரணம் சுப்பிரமணிய நாயக்கன்தான். சுப்பிரமணிய நாயக்கன் வீரபாண்டியனிடம் சின்ன பொம்முவைப் பற்றிக் குறை கூறிக்கூறி, அவனைப் பதவியிலிருந்து தூக்கியெறியச் செய்து விட்டான். அவ்வாறு சுப்பிரமணிய நாயக்கன் சொன்னபடியெல்லாம் வீரபாண்டியன் ஏன் கேட்டு நடந்தான் என்றால், வீரபாண்டியனின் மனைவியான வீர ஜக்கம்மாள், சுப்பிரமணிய நாயக்கனின் மகளாயிருந்ததே காரணமாகும்.

சின்ன பொம்முவைப் பதவியிலிருந்து நீக்கிய பிறகு, சுப்பிரமணிய நாயக்கனின் மூத்த மகனாகிய தன் மூத்த மைத்துனனைத் தனக்கு அமைச்சனாக்கிக் கொண்டான் வீர பாண்டியன். அவனுடைய இளைய மகனாகிய தன் இளைய மைத்துனனுக்குக் கட்டபொம்மன் தனது தங்கையான ஈசுவர வடிவைக் கல்யாணம் செய்து வைத்தான். அவனது சகோதரியான துரைக்கண்ணம்மாளை, சுப்பிரமணிய நாயக்கனின் மைத்துனன் ஒருவனுக்கு மணம் செய்து வைக்கப்பட்டது.

வீரபாண்டிய கட்ட பொம்மனிடம் வேலை பார்த்தவர் களில் தலையாயவர் சிவசுப்பிரமணியப்பிள்ளை எனப்படு பவர். இவர் "தானாதிபதி"யென்னும் பதவி வகித்ததால் தானாதிபதிப்பிள்ளை அல்லது தானாபதிப்பிள்ளை என்று அழைக்கப்பட்டு வந்தார். இவருக்கு வீரபத்திர பிள்ளை, பாண்டியம் பிள்ளையென இரண்டு சகோதரர்களிருந்தனர். இவர்களெல்லாம் திருநெல்வேலி மாவட்டத்தில் நல்லவைச வேளாள குடும்பத்தில் பிறந்தவர்கள்; வளமான நிலையில் வளர்ந்தவர்கள்.

சிவசுப்பிரமணிய பிள்ளைக்கு அடுத்தபடியாக நம் நினைவிற்கு வரவேண்டியவன் வெள்ளையத்தேவனே. அவன் மறவர் குலத்தில் பிறந்த ஒரு மாணிக்கம். வீரபாண்டியனின் தளபதியாக வாழ்ந்து வீர மரணம் எய்தியவன்.

வெள்ளையம்மாள் என்ற வீர வனிதையை இவன் தன் துணைவியாகக் கொண்டான். இவனைப்பற்றியும் இவனது அத்துணைவியைப் பற்றியும் புனையப்பட்ட நாட்டுப் பாடல்கள் ஏராளம்! ஏராளம்!!

**"போகாதே, போகாதே, என் கணவா!**
**பொல்லாத சொப்பனம் நானும் கண்டேன்!"**

இது எல்லோரும் நன்கறிந்த ஒரு நாடோடிப் பாடல். இதில் காணப்படுகிற வாக்குவாதம், வெள்ளையத்தேவன் போருக்குப் புறப்படும்போது அவனுக்கும் அவன் மனைவிக்கும் நடந்தது என்று சொல்லப்படுகிறது.



வீர தீர சூர பராக்ரமனாக உருவாக்கப்பட்டிருக்கிற வீரபாண்டிய கட்டபொம்மனது வரலாறு மிகச் சுருக்கமானது. பொல்லாப்பாண்டியன், ஜெகவீர பாண்டியன் இவ்விருவரது வரலாறுகளும் முடிந்துவிட்டபடியால், இனிமேல் நாம் கட்டபொம்மன் என்று குறிப்பிடும் இடங்களிலெல்லாம் வீரபாண்டிய கட்டபொம்மன் என்றே அன்பர்கள் பொருள் கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

கட்டபொம்மன் பிறந்தது 1760-ம் ஆண்டு. அவன் பட்டத்துக்கு வந்தது 1790-ம் ஆண்டு. இறந்தது 1799-ம் ஆண்டு.

மொத்தம் 39 ஆண்டுகள்தான் கட்டபொம்மன் இந்த உலகத்தில் இருந்திருக்கிறான்! அதில் 9½ ஆண்டுகளே அவன் பாளையக்காரனாகப் பதவி வகித்திருக்கிறான். இந்த மிகக் குறுகிய 9 ஆண்டு சரித்திரம்தான் இன்று அவன் பக்தர்களால் உண்மையைச் சுருக்கிப் பொய்ம்மையைப் பெருக்கி உருவாக்கப்பட்டிருக்கிறது!

## எட்டயாபுரத்தானோடு தகராறு

1781 முதல் 1790 வரை கிழக்கிந்தியக் கும்பினியார் ஆர்க்காட்டு நவாபின் பகுதிகளை "அசைன்மெண்டு ஆப் ரெவின்யூ" என்ற முறையின்படி மேல்பார்த்து வந்தார்கள். அதன்படி, தென்னாட்டில் நவாபுக்காகவும் தஞ்சை அரசனுக் காகவும் வரிவசூல் காரியங்களைக் கும்பினி தன் அதிகாரிகளைக் கொண்டு நடத்தி வந்தது. அதைக் கவனிப்பதற்காக, "போர்டு ஆப் அசைன்மெண்டு ஆப் ரெவின்யூ" என்ற சபையொன்று சென்னையில் நிறுவப் பட்டது. பின்னர் 1790-ல் கும்பினி தானே இனி எல்லா நடவடிக்கைகளையும் நேரடியாய் மேற்கொள்ளப் போவதாக ஒரு பிரகடனம் செய்தது. இதற்கு அசம்ப்ஷன் என்று பெயர்.

இதனால் "போர்டு ஆப் அசைன்மெண்டு ஆப் ரெவின்யூ" சபையானது, "போர்டு ஆப் அஸ்யூம்டு ரெவின்யூ" எனப் பெயர் மாற்றமடைந்தது. இதுவே இன்று "போர்டு ஆப் ரெவின்யூ" என்று அழைக்கப்படுகிற நிலவரி இலாகா.

இந்த ரெவின்யூ இலாகாவானது ஒவ்வொரு மாவட்டத்திலும் கலெக்டர் என்ற ஒரு வரிவசூல் அதிகாரியை நியமனம் செய்தது. அதன்படி, திருநெல்வேலி மாவட்டத்தின் முதல் கலெக்டராக நியமனம் பெற்றவன் டோரின் என்னும் ஓர் ஆங்கிலேயன் ஆவான்.

இந்த டோரின் திருநெல்வேலியில் முன்னைய திட்டப்படி பேமாஸ்டர் என்ற பதவியிலிருந்தவன். அந்தப் பதவிக்கு இப்போது மார்ட்டின் என்பவன் நியமனம் செய்யப்பட்டான்.

கலெக்டர் என்பவன் ஒரு சிவில் அதிகாரியாக இருந்த போதிலும், அவனது வரி வசூல் பணிக்குக் கும்பினியின் படைத்தளபதிகள் உதவியாயிருக்க வேண்டுமென்று மேலதிகாரிகள் கட்டளையிட்டிருந்தனர்.

இந்தக் காலத்தில் மைசூர் அரசனான திப்பு சுல்தான் செல்வத்திலும் படைபலத்திலும் சிறந்து விளங்கினான். அவன் தன் படை வீரர்களுக்குப் பிரஞ்சுக்காரர்களைக் கொண்டு நவீன முறையில் ராணுவப் பயிற்சி அளித்தான். துப்பாக்கிகள், பீரங்கிகள், வெடி மருந்து ஆகியவற்றை நிறைந்த அளவில் சேகரித்து வைத்திருந்தான்.

ஆள்பலம், ஆயுதபலம், பணபலம் இம்மூன்றையும் நிரம்பத் திரட்டிக் கொண்டு விட்ட செருக்கிலே, திப்புசுல்தான் திக்கு விசயம் செய்யப் புறப்பட்டுவிட்டான்.

திப்புவின் நோக்கமெல்லாம், விந்தியமலைக்குத் தெற்கே குமரி முனைவரையில் ஒரு பெரும் சாம்ராஜ்யத்தை உருவாக்க வேண்டும் என்பதேயாகும். அதற்கு முக்கியத் தடையாக விளங்கியது, பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கும்பினியே. அந்தக் கும்பினியை ஒழிப்பது; பலம் இழந்து கிடந்த ஐதராபாத் நிஜாமை அழிப்பது; பதவிப் பூசலில் ஈடுபட்டிருந்த மராட்டியரை வடக்கே விரட்டுவது; தென்னகத்திலுள்ள தஞ்சாவூர், திருவாங்கூர் போன்ற சிற்றரசுகளைக் கவர்ந்து கொள்வது; ஆர்க்காட்டு நவாபின் ஆட்சிப் பகுதியைக் கைப்பற்றிக் கொள்வது - இவை தாம் திப்பு சுல்தானது சாம்ராஜ்யத் திட்டத்தின் சிறப்பான அம்சங்கள்.



இந்தத் திட்டத்தின் முதல் படியாக, அவன் தெற்கே திருவாங்கூரைத் தாக்கினான். திருவாங்கூர்ச் சீமையைக் கலங்க அடித்தபின், கர்நாடகத்திற்குள் அவன் படைகள் மடை திறந்த வெள்ளம் போல் புகுந்து முன்னேறின. அவன் திருச்சி வரை வந்து விட்டான். சீரங்கத்தைக் கொள்ளை கொண்டான். தஞ்சையைக் கலங்க வைத்தான். திண்டுக்கல்லை வசப்படுத்திக் கொண்டான்.

மராட்டியப் படைகள் அவன் முன்னே மண்டியிட்டு நின்றன. நிஜாம் பயந்து போய் அவனோடு சமாதானம் பேசினான். இதையெல்லாம் கண்டு, ஆங்கிலக் கும்பினியார் கலக்கமடைந்தனர். திப்புவின் படையெடுப்பைச் சமாளிப்பதற்காக, படைகளையும் படையெடுப்புக்கான பொருள்களையும் திரட்டுவதென்று அவர்கள் தீர்மானித்தார்கள். இதன் பொருட்டு, கர்னல் மஸ்குரோவ் என்பவன் ஒரு ஸ்பெஷல் அதிகாரியாக நியமிக்கப்பட்டான். கொள்ளிடத்திற்குத் தெற்கேயுள்ள எல்லா கும்பினி அதிகாரிகளும் இந்த மஸ்குரோவ் கேட்கும் எந்த உதவியையும் மிகவும் இரகசியமாகவும் தவறாமலும் அளிக்க வேண்டுமென்று உத்தரவிடப்பட்டது.

அத்துடன், நவாபோடு தொடர்பற்றுப் போய் ஆங்காங்கே நிறுத்தி வைக்கப்பட்டிருந்த அவனது படைகள் அனைத்தும், கும்பினிப் படைகளோடு ஐக்கியப்படுத்தப் பட்டன. அதன் அதிகாரிகளாக வெள்ளைக்காரர்கள் நியமனம்

செய்யப்பட்டனர். திருநெல்வேலியில் கர்னல் டைட்டன், கர்னல் எவரெட் என்ற இரண்டு பிரிட்டிஷ் அதிகாரிகள், நவாபின் பழைய படைகள் பூராவையும் தங்கள் அதிகாரத்தின்கீழ்க் கொண்டு வந்தனர்.

இந்த நிலையில் தென்னாட்டில் வேறு எந்தவிதச் சச்சரவையும் பாளையக்காரர்களுடன் வைத்துக் கொள்ள வேண்டாமென்று, திருநெல்வேலிக் கலெக்டர் டோரினுக்குக் கும்பினிக் கவர்னர் உத்தரவை அனுப்பி வைத்தான்.

அப்போது வரிவசூல் செய்வதில் டோரினுக்கு உதவியாக ஒரு ராணுவத் தளபதியிருந்தான். அவன் பெயர் கர்னல் மாக்ஸ்வெல்.

திப்பு சுல்தான் படையெடுப்பின் முடிவு தெளிவாகும் வரை, வெறும் மிரட்டல் மூலம் எவ்வளவு முடியுமோ அவ்வளவையும் வசூலிக்க அவ்விருவரும் முனைந்தனர். பணம் செலுத்த மறுத்தவர்கள்மீது ராணுவ நடவடிக்கையெடுப்பதை அவர்கள் தள்ளிப்போட்டு வந்தனர். ஆனால் அவ்வப்போது தங்கள் அதிகாரத்தை நிலைநிறுத்தும் முறையில் சிறுசிறு நடவடிக்கைகளை மட்டும் கர்னல் மாக்ஸ்வெல் மேற்கொண்டு வந்தான்.

நாட்டில் குழப்பம் ஏற்பட்டால் பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரர்கள் அதைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வதில் எப்போதுமே கெட்டிக்காரர்கள் ஆயிற்றே! அந்தப் பரம்பரைப் பழக்கத்திற்கு வீரபாண்டியன் மட்டும் விதிவிலக்காகிவிடுவானா?

எரிகிற வீட்டில் பிடுங்கினது லாபம் என்ற கொள்கையைப் பின்பற்றி, அவன் தன் குலத்தொழிலைத் தீவிரப்படுத்தினான்.

அதாவது, பக்கத்துப் பாளையங்களில் புகுந்து கொள்ளையடிப்பதிலும், அதை எதிர்க்கத் துணிந்த பாமர



மக்களைப் படுகொலை செய்வதிலும் ஈடுபட்டான். அவன் தந்தையால் கைப்பற்றப்பட்ட அருங்குளம், சுப்பலாபுரம் ஆகியவற்றை தவிர, எட்டயபுரத்தைச் சேர்ந்த வேறு பல கிராமங்களையும் அவன் ஆக்கிரமிக்கத் தொடங்கினான்.

கட்டபொம்மன் செய்த இந்தக் கொடுமைகளைப் பற்றி, அக் கிராம வாசிகள் திருநெல்வேலியில் இருந்த கலெக்டர் டோரினிடம் சென்று முறையிட்டனர். அவர்கள் உள்ளம் வெதும்பி அழுத அந்தப் பரிதாபக்குரலை, ஒரு கும்மிப் பாட்டாக வடித்தெடுத்துக் கொடுத்திருக்கிறார் அக்காலத்திய நாடோடிப் புலவர் ஒருவர். கட்டபொம்மன் பக்தர்கள் அவசியம் படிக்க வேண்டிய பாட்டு இது:

**எட்டயாபுரத்தானோடு தகராறு**

“...........................................................

கட்டபொம்மேந்திரன் துட்ட நடத்தையைக்
காட்டி விபரமாய்ச் சொல்லுவராம்!

தருமதுரைகளே கேளுமென்று வெகு
சாதுரியமாகச் சொல்லுவராம்!

அருங்குளத்திலே கம்பஞ்சாலைக் கதிர்
ஆயிரங்கட்டையும் கொள்ளை கொண்டான்!

வருமாங்குளகத் தட்டைப் படைப்பிலே
வளர்நெருப்பைக் கொளுத்திவிட்டான்!

விருதாய்ப் பொல்லாங்கு செய்குகிறானெங்கள்
வீடுகளில் வந்து கொள்ளையிட்டான்!

எப்போதும்போல் காட்டு நாயக்கன்பட்டியின்
எல்லைச்சதுரிலே மேய்ந்த மாட்டை

முப்பது நாற்பது பால்பசுவை யோட்டி
முன்னூறெருதையும் கொள்ளைகொண்டான்!

.................................................................

பார்த்திபரே எங்கள் சீமையெல்லாம் ஆடிக்
காற்றிலே தீயைப் பரப்புகிறான்!

பட்டிக்காடெங்கும் குடிபோச்சே! தட்டைப்
படைப்புக்காடெங்கும் வெந்து போச்சே!

கட்டபொம்மு வலுத்துட்டன் ஐயா! அவன்
கன்னங் களவிலே மிச்சமய்யா!

இப்படிக் கொள்ளை யடித்தக்கால் நாங்கள்
என்னமாய்க் காலங்கள் தள்ளுவது?

இப்போதவனை வரவழைத்துத் துரை
இந்தச்சணம் ஞாயம் கேளாவிட்டால்,

படியிலே ஒரு நொடியிலே சென்னப்
பட்டணம்போறோம் பிராதுக்கென்றார்!''

[கட்டபொம்மன் கும்மி : ஏட்டுப் பிரதி : R 2440 – 2443]

துன்புறத்தப்பட்ட இந்த மக்களின் சார்பில் கட்டபொம்மன் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுப்பதற்கு டோரின் உள்ளம் துடிதுடித்தது. ஆனால் அது ஒரு ராணுவ நடவடிக்கையாக வளர்ந்து விட்டால் என்ன செய்வது என்று அவன் அஞ்சினான். ஏனெனில், அத்தகைய போர் நடவடிக்கைகளில் இறங்கிவிடக்கூடாதென்று கும்பினிக் கவர்னர் அவனுக்கு ஏற்கெனவே கண்டிப்பான உத்தர விட்டிருக்கிறாரே!



ஆகவே அவன் இன்னொரு காரியம் செய்தான். அதாவது, கர்னல் மாக்ஸ்வெல்லை அனுப்பி அந்தப் பகுதிகளின் எல்லைகளை வரையறுக்கச் சொன்னான். ஒவ்வொரு பாளையக்காரரும் எவ்வளவு வரி கொடுக்க வேண்டு மென்பதும், ஒவ்வொருவருடைய ஆட்சிக்கும் உட்பட்டுள்ள பகுதிகள் எவையெவையென்பதும் இதனால் தெளிவாகும் என்று அவன் கருதினான்.

கர்னல் மாக்ஸ்வெல் இந்த எல்லை நிர்ணயப் பணியில் இறங்கினான். இதற்கு ஆங்கிலத்தில் செட்டில்மெண்ட் (Settlement) என்று பெயர். ஒவ்வொரு பாளையக்காரரும் நமக்குச் சொந்தமான பாளையப் பகுதிகளுக்கு ஆதாரங்கள் காட்ட வேண்டுமென்று அவன் உத்தரவு போட்டான்.

இவ்வாறு செய்வதால் பாளையங்களிடையே நிலவிவந்த எல்லைத் தகராறுகள் ஒரு முடிவுக்கு வரும் என்று மாக்ஸ்வெல் நம்பினான். இந்த நம்பிக்கையை அவன் கும்பினித் தலைமை அலுவலகத்திற்கு எழுதிய ஒரு கடிதத்தில் தெரிவித்திருக்கிறான்.

எட்டயாபுரம் பாளையக்காரன் தனக்குச் சொந்தமான அருங்குளம், சுப்பலாபுரம் கிராமங்களை ஜெகவீரனும் அவன் மகன் வீரப்பாண்டியனும் ஆக்கிரமித்துக் கொண்டு இருப்பதாகக் கலெக்டரிடம் ஒரு புகார் கொடுத்திருந்தான். அதற்கான தஸ்தாவேஜ்களையும் அவன் தாக்கல் செய்தான். அப்பகுதியைச் சேர்ந்த மக்களும் அதுபற்றி மாக்ஸ்வெல்லிடம் வாக்குமூலம் அளித்தார்கள். கும்பினியாரின் பழைய ரிக்கார்டுகளிலும் இந்தப் பகுதி எட்டயாபுரத்தைச் சேர்ந்ததாகவே குறிப்பிடப்பட்டிருந்தது. வரி கொடுக்க மறுத்த அக்கிராமங்களின் மக்களை அடக்குவதற்காகவே பழைய கும்பினி அதிகா. ]கள் கட்டபொம்மனைப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார்கள் என்ற உண்மை அவனுக்குப் புலனாயிற்று. எனவே அப்பகுதியை மீண்டும் எட்டயாபுரத்தானிடம் கொடுத்து விடுமாறு கர்னல் மாக்ஸ்வெல் கட்டபொம்மனிடம் கூறினான்.

கலெக்டர் டோரின் துரையிடம் ஒரு துபாஷ் இருந்தான். அவன் கம்பள வகுப்பைச் சேர்ந்தவன். திப்பு சுல்தான் விவகாரம் தீரும் வரையில் பாளையக்காரர்களுடன் எவ்விதமான சண்டை சச்சரவுகளும் வைத்துக் கொள்ளக் கூடாதென்ற கும்பினி கவர்னரின் இரகசியக் கட்டளையை அவன் கட்டபொம்மனுக்கு இரகசியமாகத் தெரிவித்திருந்தான். அதனால் துணிவு கொண்ட கட்டபொம்மன் தான் ஆக்கிரமித்த கிராமங்களை மாக்ஸ்வெல்லின் சொல்படி எட்டயாபுரத்தானிடம் திரும்பித்தர மறுத்துவிட்டான். அது மட்டுமல்ல; எட்டயாபுரத்தைச் சேர்ந்த வேறு சில பகுதிகளையும் பாஞ்சாலங்குறிச்சியோடு சேர்க்க வேண்டும் என்று அழி வழக்காடினான்.

மாக்ஸ்வெல் ஆத்திரமடைந்தான். ஆனால் அதை வெளிக்காட்டிக்கொள்ள முடியவில்லை. கட்டபொம்மனிடம் அவன் மேற்கொண்டு எதுவும் பேச்சு வைத்துக் கொள்ளவில்லை. எட்டயாபுரத்தானுக்கும் பாஞ்சாலங்குறிச்சியானுக்கும் இந்தத் தகராறு காரணமாகச் சண்டை மூண்டுவிடும் போல் தோன்றியது. அதைத் தடுக்கும் வகையில் எட்டயாபுரத்துப் படைகள் தகராறுப் பகுதிக்குள் தற்காலிகமாகப் பிரவேசிக்க வேண்டாமென்று சொல்லிவிட்டு, மாக்ஸ்வெல் திருநெல்வேலிக்குத் திரும்பினான். அவன் சொல்லுக்குக் கட்டுப்பட்டு, எட்டயாபுரத்தான் அப்பகுதியிலிருந்து தன் படைகளை நீக்கிக் கொண்டான். அதன் விளைவாகக் கட்டபொம்மன் இன்னும் அதிகமாகத் துணிவு பெற்றான்.

## சேத்தூர் படுகொலை

சிவகிரியில் அப்போது பாளையக்காரராக இருந்தவர் வயதில் முதியவர். அவருக்கு மகன் ஒருவனும் மாப்பிள்ளையொருவனும் இருந்தனர். மாப்பிள்ளையின் பெயர் மாப்பிள்ளை வன்னியன்.



இவர்களைத் தவிர, அந்தப் பாளையத்தில் உத்தியோகம் பார்த்து வந்த சங்கரலிங்கம் பிள்ளையென்ற ஒருவனுமிருந்தான்.

இந்தச் சங்கரலிங்கம்பிள்ளை, பாளையக்காரர் மகனையும் மாப்பிள்ளை வன்னியனையும் கட்டபொம்மனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தான். கட்டபொம்மன் இவர்களைத் தன் பாளையத்திற்கு அடிக்கடி வரவழைத்து விருந்து வைத்து உற்சாக மூட்டினான்.

"உன் தந்தைக்கு இவ்வளவு வயதாகியும் அவருக்கு இன்னும் பதவி ஆசை போகவில்லையே! உனக்குப் பட்டத்தைக் கட்டி வைத்துவிட்டு, அவர் இப்போது ஓய்வெடுத்துக் கொண்டிருக்க வேண்டுவதே நியாயமாகும். ஆனால் தன் உயிருள்ள வரையில் அவர் அப்படிச் செய்யமாட்டார் போல் தோன்றுகிறதே!" என்று சிவகிரியார் மகனை நோக்கி அடிக்கடி அங்கலாய்த்தான் பாஞ்சைப் பதியான்.

இதைக் கேட்டுக் கேட்டு, சிவகிரிச் சின்னவன் புத்தியும் மாறியது. தந்தையை எப்படியாவது பதவியிலிருந்து நீக்கிவிட்டு, தான் பட்டத்துக்கு வந்தால் எவ்வளவோ நலமாயிருக்குமேயென்று அவன் நாக்கில் நீர் ஊறியது. மாப்பிள்ளை வன்னியனும் சங்கரலிங்கம் பிள்ளையும் அவனை இந்த அக்கிரமமான ஆசையில் ஊக்குவித்து வந்தனர்.

ஆனால் சிவகிரிக் கிழவன் மிகவும் ஆள் பலம் வாய்ந்தவன். அதனால் அவனை நேரடியாக எதிர்ப்பதற்கு மகனுக்குத் துணிவு பிறக்கவில்லை. அதற்காக ஒரு யுக்தி சொன்னான் கட்டபொம்மன். அந்த யுக்திப்படி, கட்டபொம்மனைச் சிவகிரிக்கு விருந்தாளியாக அழைத்தான் சிவகிரிச் சின்னவன்.

கட்டபொம்மன் தன் பரிவாரங்களோடு சிவகிரி போய்ச் சேர்ந்தான். வீடு தேடி வந்த விருந்தினன் என்ற முறையில்

பெரியவர் அவனை அன்போடு வரவேற்றுப் பண்போடு உபசரித்தான்.

ஆனால் கட்டபொம்மனும் அவன் ஆள்களும் இரவில் கிழவரைக் கொன்றுவிடத் திட்டமிட்டிருந்தனர். இது அவருக்கு எப்படியோ தெரிந்து போயிற்று. தம் மருமகனும் சங்கரலிங்கம் பிள்ளையும்கூட இந்தச் சதியில் சம்பந்தப் பட்டிருப்பது அவருக்குப் புரிந்து போயிற்று. எனவே, நம்பகமான சில நண்பர்களுடன் அவர் இரவோடு இரவாகச் சிவகிரியை விட்டுக் கிளம்பி, தம் நண்பரான சேத்தூர் பாளையக்காரரிடம் சென்று தஞ்சமடைந்தார்.

தந்தை இவ்வாறு ஓடிப்போய்விடவே, மகன் தானே சிவகிரிப் பாளையக்காரனாகப் பட்டம் ஏற்றான். மாப்பிள்ளை வன்னியன் அவனுக்கு மந்திரியானான். சங்கரலிங்கம்பிள்ளை பிரதானியானான். அவர்கள் மூவரும் கட்டபொம்மனுடன் முன்னமே செய்து கொண்டிருந்த ஒப்பந்தப் படிக்கு, அவனுக்கு ஒரு பெருத்த தொகையை லஞ்சமாகக் கொடுத்தனர். அவன் இத்தகைய ஒரு சதித்திட்டத்தைத் தீட்டியதே இந்த லஞ்சப் பணத்திற்கு ஆசைப்பட்டுத் தானே?

ஆனால், அவன் இத்துடன் திருப்தி அடையவில்லை. தப்பியோடிவிட்ட தந்தையால் மகனுக்கு என்றைக்கும் ஆபத்து ஏற்படக்கூடும் என்பதை அவன் எடுத்துச் சொன்னான். உடனே மகன் என்ன செய்தான், தெரியுமா? தன் தந்தையை ஒழிப்பதற்கு ஒரு வழி சொல்லும்படி, அவன் கட்டபொம்மனிடமே யோசனை கேட்டான்.

கட்டபொம்மன் அதற்கும் ஒரு யோசனை சொன்னான். அதைத் தானே செயல்படுத்தவும் முன் வந்தான். எப்படியெனில்,-

சேத்தூர் பாளையக்காரருக்கு அவன் ஒரு கடிதம் எழுதினான். சிவகிரிப் பெரியவருக்கும் அவர் மகனுக்கும் நேர்ந்துள்ள பகைமையைக் கண்டு அவன் மனம் வருந்துவதாகவும், அவ்விருவரையும் மீண்டும் ஒற்றுமைப் படுத்தி வைக்கத்தான் ஆசைப்படுவதாகவும்; தான் இருவருக்கும் பொதுவான நண்பனே தவிர எந்தக் கட்சியிலும் சேர்ந்தவனல்லவென்றும் அவன் அக்கடிதத்தில் எடுத்துக் கூறியிருந்தான். இந்தப் பசப்பு மொழிகளை உண்மையென்று நம்பினார் சேத்தூர்ப் பாளையக்காரர்! பாவம், அதுவும் அவருடைய போதாத காலந்தான்.



ஆனால், சிவகிரிக் கிழவர் கட்டபொம்மனை நம்பவில்லை. அவனைக் காணவும் விரும்பவில்லை. எனினும் அவனால் ஏதேனும் நன்மை ஏற்படக்கூடும் என்று எண்ணிய தம் நண்பர் சேத்தூராரர் வார்த்தைக்கு அவர் கட்டுப்பட்டார். சேத்தூராரும் கட்டபொம்மனைத் தன் பாளையத்துக்கு வர வழைத்தார்.

கட்டபொம்மன் தன் பரிவாரங்களுடன் சேத்தூர் சென்றான். சமாதானப் பேச்சுத் தொடங்கியது. சிவகிரிச் சின்னவனும் அவனைச் சேர்ந்தவர்களும் வரவழைக்கப் பட்டார்கள். கட்டபொம்மன் வகுத்த திட்டப்படி, அவர்கள் எல்லோரும் இந்தப் பேச்சு வார்த்தையின்போது நன்கு திறம்பட நடித்தார்கள். சிவகிரிப் பெரியவர், சேத்தூரிலேயே தங்கிவிடுவதென்றும், அவருடைய பராமரிப்புக்காகச் சின்னவன் ஒரு பெருந்தொகையைச் சேத்தூராருக்குத் தருவதென்றும் தீர்மானமாயிற்று.

சமாதானப் பேச்சுகள் இவ்வாறு சுமுகமாக முடிந்து விட்டதால், சேத்தூர்ப் பாளையக்காரர் கட்டுக்காவல்களை நீக்கிவிட்டார். தம் மகிழ்ச்சியைத் தெரிவிக்கும் வகையில், அவர் ஒரு பெரிய விருந்து வைத்தார். அதிலே மதுவும் பரிமாறப்பட்டது. இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, கட்டபொம்மனின் ஆள்கள் சேத்தூராருக்குத் தரப்பட்ட மதுவில் இரகசியமாக மயக்க மருந்தைக் கலந்து விட்டார்கள். அதனால், விருந்துண்ட சிறிது நேரத்திற்கெல்லாம் அவர் நினைவிழந்தார். அந்நிலையிலேயே அவரை மூட்டை

போல் சுருட்டிக் கட்டித் தாங்கள் தங்கியிருந்த இடத்துக்குக் கடத்திச் செல்ல, கட்டபொம்மன் குழுவினர் திட்டமிட்டனர்.

மயக்கத்திலாழ்ந்திருந்த சேத்தூராரர் சிறிது கண்விழித்துப் பார்த்தார். உடனே அவர்களது சதித்திட்டம் அவருக்குப் புலனாகிவிட்டது. அவர் திகிலடைந்து குரலெழுப்பினார். அடுத்த கணமே பாவி கட்டபொம்மன் அவரைத் தன் வாளால் குத்திக் கொன்றான்.

பாளையக்காரரின் அபயக்குரல் கேட்டு அவர் மனைவி மக்கள் பதறியோடி வந்தனர். அவர்களையும் ஈவிரக்கமில்லாமல் கொன்று குவித்தனர் கட்டபொம்மன் குழுவினர்!

தலைவர் ம.பொ.சி. போன்ற கட்டபொம்மன் ஆதரவாளர்கள், நினைக்கவே நெஞ்சம் நடுங்கும் இந்தப் படுகொலைச் செய்தியைத் தாம் எழுதியுள்ள நூல்களில் குறிப்பிடவேயில்லை. காரணம், அவனது இழிசெயல்களையெல்லாம் மக்களுக்குத் தெரியாமல் மறைக்கவேண்டுமென்ற எண்ணமா, அவர்களே அறியாத குறையா என்பது அண்டவனுக்குத்தான் வெளிச்சம்!

நிராயுதபாணிகளான கிழவரையும் பெண்டிரையும் பச்சிளங் குழந்தைகளையும் நெஞ்சில் சிறிதும் ஈரமின்றிக் கேவலம் அற்பக் காசுக்காகக் கொலை செய்தான் கட்டபொம்மன்! சேத்தூராரின் இரத்தம் அவன் கையைவிட்டு விலகாத கறை!

அன்போடு வரவழைத்து விருந்து வைத்து உபசரித்த சேத்தூராரரையும் அவர் குடும்பத்தினரையும் கொன்று முடித்தபின் இரவோடு இரவாகச் சிவகிரிப் பெரியவரை அங்கிருந்து தூக்கிக் கொண்டு வந்துவிட்டனர். வஞ்சனையாளர் கொண்டுவந்து, அவரைச் சிவகிரிச் சிறையில் விலங்கிட்டு வைத்தனர்.



பெரியவர் தமக்கு நேர்ந்த கதியைப் பற்றிக்கூட அவ்வளவாக வருந்தவில்லை! தமக்குத் தஞ்சமளித்த குற்றத்திற்காகச் சேத்தூராருக்கு இப்பாவிகள் இழைத்த கொடுமையை எண்ணித்தான் அவர் உள்ளம் பதறித் துடித்தது.

சிறையிலிருந்தவாறே, இவர்களை அடக்குவதற்கு வழியென்ன என்று அவர் சிந்தனை செய்தார். அதற்கு ஒரே வழிதான் இருந்தது. அதுவே கும்பினியாரின் துணையை நாடுவது. அவர் இரகசியமாக ஓர் ஓலையை எழுதி, ஒரு நம்பகமான ஆள் மூலம் திருநெல்வேலி கலெக்டருக்கு அனுப்பி வைத்தார். அந்த ஓலையைக் கண்டவுடனே கலெக்டர் டோரின், கர்னல் மாக்ஸ்வெல்லைச் சேத்தூருக்கு அனுப்பி வைத்தான்.

சேத்தூரில் வந்து விசாரணை செய்யும்போது சிவகிரிப் பெரியவர் எழுதியிருந்ததனைத்தும் உண்மையேயென்பது மாக்ஸ்வெல்லுக்கு தெளிவாகப் புலப்பட்டது. அவன் சீற்றம் மிகக் கொண்டான். தன் படைகளோடு சிவகிரி நோக்கிப் புறப்பட்டான்.

கர்னல் மாக்ஸ்வெல் தன்னுடன் ஒரு துப்பாக்கிப் படையையும் சில பீரங்கிகளையும் கொண்டு சென்றான். கும்பினிப் பட்டாளம் பாளையக்காரர்களுடன் போர் நடவடிக்கை எதுவும் மேற்கொள்ளாது என்று துணிவு கொண்டிருந்த கட்டபொம்மனுக்கு இது ஒரு பேரதிர்ச்சியாக இருந்தது. கர்னல் மாக்ஸ்வெல் சண்டைக்குத் தயாராகி விட்டான் என்று தெரிந்ததும், கட்டபொம்மன் கதிகலங்கிப் போனான். கோழைத்தனத்திற்கும் நயவஞ்சகத்துக்கும் பேர்போன பரம்பரையில் பிறந்தவனாயிற்றே? அதனால் தன்னை நம்பியிருந்த நண்பனும் தனக்குக் கை நிறைய லஞ்சம் கொடுத்தவனுமாகிய சிவகிரிச் சின்னவனை நட்டாற்றில் விட்டு விட்டு, தன் படைகளோடு பாஞ்சாலங் குறிச்சிக்கு ஓடிப்போய் விட்டான் கட்டபொம்மன்!

கட்டபொம்மனுடைய தைரியத்தில்தானே சிவகிரிச் சின்னவன் இத்தகைய தீச் செயல்களில் இறங்கினான்? எனவே அவன் தன்னைக் கைவிட்டு ஓடியதும், சின்னவனும் தன் தலை தப்பினால் போதுமென்று சிவகிரியை விட்டு ஓடிப் போய்விட்டான். அவனுக்கு உறுதுணையாயிருந்த மாப்பிள்ளை வன்னியனும் சங்கரலிங்கம் பிள்ளையும் அச்சின்னவனுக்கு முன்னமேயே கம்பி நீட்டி விட்டார்கள்!

இப்படி எல்லோருமே ஓட்டமெடுத்துவிட்டபடியால், கர்னல் மாக்ஸ்வெல்லும் அவனது கும்பினிப்படைகளும் எவ்வித எதிர்ப்புமில்லாமல் வெற்றி நடை போட்டு சிவகிரிக்குள் புகுந்தனர். அங்குச் சிறையில் கிடந்த பெரியவர் விடுதலை செய்யப்பட்டார். அவரையே மீண்டும் பாளையக் காரராகப் பதவியிலமர்த்தினான் கர்னல் மாக்ஸ்வெல். அவரும் கும்பினியுடன் ஒரு நட்பு உடன்படிக்கை செய்து கொண்டார்.

சேத்தூர் படுகொலையில் பங்கு கொண்ட சங்கரலிங்கம் பிள்ளைக்கும், மாப்பிள்ளை வன்னியனுக்கும் எந்தப் பாளையக்காரரும் புகலிடம் தந்து ஆதரிக்கக்கூடாது என்று கர்னல் மாக்ஸ்வெல் ஒரு கண்டிப்பான உத்தரவு பிறப்பித்தான். கட்டபொம்மன் ஒரு பெரிய பாளையக்காரனாயிருந் தமையால் அவனைப் பற்றிக் கலெக்டரும் மேலதிகாரிகளும்தான் தீர்மானிக்க வேண்டுமென்ற கருத்தில், தான் நேரடி நடவடிக்கை எதுவும் எடுக்காமல், தன் ரிப்போர்ட்டை மட்டும் அவர்களுக்கு அனுப்பிவைத்தான்.

ஆனால் கட்டபொம்மன் இந்த விவகாரத்தை எப்படியாவது அமுக்கிவிட வேண்டுமென்று கவலை கொண்டான். அப்போது கலெக்டரிடம் துபாஷாக இருக்கும் அவனது பழைய நண்பனது நினைவு அவனுக்கு வந்தது. உடனே திருநெல்வேலிக்குப் புறப்பட்டுப்போய் அவனை ரகசியமாகச் சந்தித்து, அவனிடம் ஒரு நல்ல தொகையை லஞ்சமாகத் தந்தான். அது மட்டுமல்ல; சேத்தூர், சிவகிரி விவகாரங்களில் தன் பெயரையே இழுக்காமல் மறைத்து



விட்டால் கலெக்டருக்கே ஒரு பெரிய தொகை லஞ்சமாய்த் தருவதாக வாக்களித்தான்!

இதற்கிடையில் சங்கரலிங்கம் பிள்ளை ஊற்றுமலையில் போய் ஒளிந்து கொண்டிருந்தான். அது எப்படியோ கர்னல் மாக்ஸ்வெல்லுக்குத் தெரிந்து போய்விட்டது. உடனே அவன் தன் படைவீரர்களை அனுப்பி, சங்கரலிங்கம் பிள்ளையைக் கைது செய்து திருநெல்வேலிக்குக் கொண்டு வந்தான்.

பிடிபட்டுவிட்ட சங்கரலிங்கம்பிள்ளை தன்னைக் காட்டிக் கொடுத்துவிடக் கூடாதேயென்று கிலியுற்றான் கட்டபொம்மன். அதற்காக மீண்டும் அந்தக் கலெக்டரின் துபாஷியைப் போய்ப் பார்த்துப் பேசினான். சங்கரலிங்கம் பிள்ளையைக் கலெக்டர் மன்னித்துவிடுவாராயின், அவருக்கு மிகப் பெரிய தொகையைத் தருவதாக கட்டபொம்மன் அந்தத் துபாஷி மூலம் சொல்லியனுப்பினான்.

இந்தத் தகவல் கர்னல் மாக்ஸ்வெல்லுக்கு அவனுடைய உளவாட்கள் மூலம் எட்டிவிட்டது. உடனே அவன் ஓர் இராணுவ அதிகாரியென்ற முறையில், நடந்த விவகாரங்கள் யாவற்றையும் சென்னையிலுள்ள கும்பினியாருக்கு ரிப்போர்ட்டு செய்தான். அத்துடன் இந்த விஷயங்களில் கலெக்டர் டோரின் தனது துபாஷியின் பேச்சைக் கேட்டே நடந்து வருவதாகவும் கும்பினியின் கவர்னருக்கு அவன் இரகசியப் புகாரை அனுப்பி வைத்தான்.

உடனே கும்பினி மேலதிகாரிகள் ஓர் அவசர உத்தரவைப் பிறப்பித்தார்கள். கலெக்டரின் துபாஷியை உடனடியாகக் கைது செய்து மேல் விசாரணைக்காகச் சென்னைக்கு அனுப்பி வைக்குமாறு அதில் அவர்கள் கட்டளையிட்டிருந்தார்கள்! கர்னல் மாக்ஸ்வெல் அக்கட்டளையை மகிழ்ச்சியோடு நிறைவேற்றி வைத்தான்!

கலெக்டர் டோரினுக்கு இது ஆத்திரமூட்டியது. மேலதிகாரியான தன்னைக் கலக்காமல் தன்னுடைய

துபாஷியைக் கைது செய்யும்படி கும்பினியார் உத்தரவிட்டது. அவனுக்கு மிகப் பெரிய அவமானமாயிருந்தது. எனவே அவன் தன் பதவியை ராஜிநாமா செய்யத் தீர்மானித்தான். அப்படிச் செய்வதற்கு முன்னால், மாக்ஸ்வெல்மீது ஏற்பட்ட ஆத்திரத்தில், கட்டபொம்மனைச் சம்பந்தப்படுத்தியுள்ள சேத்தூர் சிவகிரி ரிக்கார்டுகளை அழித்தொழித்தான் கலெக்டர் டோரின்.

இதனால் அந்தக் கொலைக் குற்றத்திலிருந்து கட்டபொம்மன் அப்போதைக்குத் தப்பிக்க முடிந்தது!

## நவாப் கைகழுவினான்

டோரின் துரை ராஜிநாமா செய்துவிட்டுப் போன பிறகு, அவனுக்குப் பதிலாய் லண்டன் துரையென்பவன் திருநெல்வேலிக்குக் கலெக்டராக நியமிக்கப் பெற்றான்.

பாளையக்காரர்களிடம் பரிசுகளும் லஞ்சங்களும் பெற்றுக் கொண்டு, கலெக்டர்கள் வரி வசூலில் தீவிர அக்கறை செலுத்தாமலிருந்துவிடுகிறார்கள் என்ற ஒரு பொதுவான கருத்து கும்பினி மேலிடத்தில் நிலவி வந்தது. இதற்காகக் கலெக்டரின் சம்பளம் பற்றி அவர்கள் ஒரு புதிய உத்தரவு பிறப்பித்தார்கள். அதாவது கலெக்டருக்கு மாதச் சம்பளம் 250 வராகன். அதைத் தவிர, அவர்கள் வசூலிக்கும் தொகையில் நூற்றுக்கு ஒன்றரை ரூபாய் வீதம் அவர்கள் கமிஷன் எடுத்துக் கொள்ளலாம். இந்தப் புதிய ஏற்பாட்டின் மூலம், நமக்கு உபரியாகக் கிடைக்கக்கூடிய கமிஷன் தொகையைக் கருதியாவது கலெக்டர்கள் சுறுசுறுப்பாக வரிவசூல் செய்வார்கள் என்று நம்பினார்கள் கும்பினி மேலதிகாரிகள்.

கலெக்டராகப் பதவி ஏற்றதும், லண்டன்துரை மிக ஆர்வத்தோடு வரிவசூலில் முனைந்தான். அதன் பொருட்டு, கர்னல் மாக்ஸ்வெல் தெரிவித்த "செட்டில்மெண்டு" நில நிர்ணயத் திட்டத்தைத் தீவிரப்படுத்தினான்.



கர்னல் மாக்ஸ்வெல் செட்டில்மெண்டு அதிகாரியாக நியமிக்கப்பட்டான். அவனது செகரட்டரியாகப் பானர்மென் என்பான் பதவிக்கு வந்தான். இந்தப் பானர்மென்தான் பின்வரும் நிகழ்ச்சிகளில் பெரும் பங்கு பெறவிருக்கும் மேஜர் பானர்மென் ஆவான்.

மாக்ஸ்வெல் செட்டில்மெண்டு அதிகாரியாக வந்ததும், பழைய டோரின் காலத்தில் தப்பித்துக்கொண்ட கட்டபொம்மனை இப்போது எப்படியாவது மடக்கிவிட வேண்டும் என்று அவன் தீர்மானித்தான். அருங்குளம், சுப்பலாபுரம் கிராமங்களை உடனடியாக எட்டயாபுரத்தானிடம் ஒப்படைத்துவிட்டு, கட்டபொம்மன் தன் படைகளை அப்பகுதியிலிருந்து விலக்கிக்கொள்ள வேண்டுமென்று 16-12-1792'ல் அவன் ஒரு கண்டிப்பான உத்தரவை அனுப்பி வைத்தான். இந்த உத்தரவுக்குக் கட்டபொம்மன் பணிய மறுத்ததால், அவன்மீது ராணுவ நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கர்னல் மாக்ஸ்வெல் கலெக்டருக்கு ஆலோசனை சொன்னான். மாக்ஸ்வெல்லுக்கு இந்தத் துணிவு ஏற்பட்டதன் காரணம், கும்பினியின் கர்நாடக அரசியலில் அப்போது ஏற்பட்டிருந்த சில மாறுதல்களேயாகும்.

அதாவது,

திப்புசுல்தானால் ஆங்கிலக் கும்பினிக்கு ஏற்படக்கூடிய பேராபத்தை உணர்ந்து, அப்போது கல்கத்தாவில் கவர்னர் ஜெனரலாக இருந்த காரன்வாலிஸ் என்பவன், ஒரு பெரும் படையோடு சென்னை வந்து சேர்ந்தான். வந்ததும், அவன் மராட்டியருக்கும் நிஜாமுக்கும் தூதனுப்பினான். திப்புவை எப்படியும் தோற்கடித்துவிட்டு, அவனுடைய நாட்டைப் பங்கு போட்டுத் தருவதாகக் காரன்வாலிஸ் அவர்களுக்கு வாக்களித்தான். பின்னர் தானே கும்பினிப் படைகளுக்குத் தலைமை தாங்கியவனாய், திப்புவை எதிர்த்துச் சென்றான்.

முதலில் அவன் திப்புவின் படைகளைத் திருச்சியிலிருந்து விரட்டியடித்தான். பின்பு திண்டுக்கல்லைக் கைப்பற்றினான். அடுத்தபடியாகக் கொங்கு நாட்டைத் தாக்கிப் பிடித்தான். அதைத் தொடர்ந்து திப்புவின் சீமைக்குள்ளேயே புகுந்து, அவனுக்குச் சொந்தமான பெங்களூரைப் பிடித்துக் கொண்டான்.

ஆங்கிலக் கும்பினியார் இவ்வாறு வெற்றிமேல் வெற்றியாகப் பெற்று வருவதைக் கண்ட மராட்டியரும், நிஜாமும் மிகத் துணிவடைந்தவர்களாய்த் திப்புவுக்கு எதிராகப் போரில் குதித்தனர்!

திப்பு மனவலி இழந்தான். அவனிடத்தில் படையிருந்தும் பணமிருந்தும் படை நடத்தும் திறனில்லாது போயிற்று. அவன் ஆங்கிலேயருக்கு எதிர் நிற்கமாட்டாமல் மேலும் மேலும் பின்வாங்கிச் சென்று, கடைசியாய்த் தன் தலைநகரான சீரங்கப்பட்டினம் கோட்டைக்குள்ளேயே போய் ஒளிந்து கொண்டான்!

நல்ல அரண்வசதிகள் வாய்ந்த ஒரு பலமான கோட்டை அது. ஆனால் காரன்வாலிஸ் அஞ்சவில்லை. அவன் அந்தக் கோட்டையின் தலைவாசலுக்கே தன் படைகளோடு போய்ச் சேர்ந்து விட்டான்!

இந்தப் போர் 1790-இல் தொடங்கி 1792 வரை நடைபெற்றது. போரின் முடிவைக் காணாமலேயே திப்பு சமாதானம் பேச ஆரம்பித்துவிட்டான். அப்படியின்றி அவன் இறுதிவரை எதிர்த்துப் போரிட்டிருந்தால், கும்பினிப் படைகள் சிதறுண்டு போயிருக்கும். ஏனெனில், அதன் தலைமை நிலையமான சென்னையிலிருந்தும் வெகுதூரத்தில் துண்டிக்கப் பட்டு நின்றமையால், கும்பினிப் பட்டாளம் மைசூரில் அதிகநாள் தாக்கு பிடித்திருக்க முடியாது. வெற்றி கொள்ளும் வாய்ப்புகள் இருந்தும், திப்பு படுதோல்வியுற்றவன் போல் சமாதானம் பேசினான். அவனது நிலையற்ற, கோழைத் தனமான மனப்போக்குக்கு இது ஓர் எடுத்துக் காட்டு ஆகும்.



திப்புவுக்கும் ஆங்கிலேயருக்கும் ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. இதற்குச் சீரங்கப்பட்டினம் உடன்படிக்கை யென்று பெயர்.

அதன்படி, திப்புவின் பாதி ராஜ்யம் அவனிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்டது. அதைக் கும்பினியாரும் மராட்டியரும் நிஜாமும் தமக்குள் பங்கு போட்டுக் கொண்டனர். அதில் திண்டுக்கல், மலையாளம், பாரமகால் பிரதேசம் ஆகியவை ஆங்கிலேயருக்குக் கிடைத்தன. போரில் ஏற்பட்ட நஷ்டங்களுக்கு ஈடாக, ஆங்கிலக் கும்பினிக்குத் திப்புசுல்தான் மூன்று கோடியே முப்பது லட்ச ரூபாய் கொடுக்க ஒப்புக் கொண்டான்! உடன்படிக்கையின் ஷரத்துகள் அனைத்தும் நிறைவேற்றப்படும்வரை, திப்புசுல்தான் தன் புதல்வர்கள் இருவரைக் கும்பினியிடம் ஜாமீனாக விட்டு வைக்கவும் சம்மதித்தான்!

இதனால் திப்புவின் மதிப்பும் செல்வாக்கும் மிகமிகக் குறைந்து விட்டன. அதே சமயத்தில் ஆங்கிலேயரின் பெருமையும் புகழும் மிக மிக உயர்ந்து நின்றன. இந்தியாவிலுள்ள எல்லாச் சுதேச மன்னர்களும் ஆங்கிலேயரின் படைவலிமையைக் கண்டு பயம் அடைந்தனர்.

கும்பினியாரின் இந்த மாபெரும் வெற்றிக்குக் காரணமாயிருந்தவன் கவர்னர் ஜெனரல் காரன்வாலிஸே அல்லவா. அதனால் பிரிட்டிஷ் அரசாங்கம் அவனுக்கு மார்க்விஸ் (அதாவது, பிரபு) என்ற பட்டத்தை அளித்துக் கௌரவித்தது.

இந்தக் காரன்வாலிஸ் பிரபுவின் சிலை இப்போது சென்னை எழும்பூரில் உள்ள கன்னிமேரா பொருட்காட்சி நிலையத்தின் ஆயுதசாலையில் வைக்கப்பட்டுள்ளது. திப்புசுல்தானின் இரு புதல்வர்களையும் காரன்வாலிஸ் பிரபு பிணையாகப் பெறும் காட்சி, சிலையின் அடிப்பீடத்தில் சித்திரிக்கப்பட்டுள்ளதை நாம் இப்போதும் பார்க்கலாம்.

திப்புசுல்தான் அடக்கப்பட்ட இந்த நிகழ்ச்சிகளால் துணிவு கொண்டவனாய், கட்டபொம்மன்மீது போர் தொடங்கத் திட்டமிட்டான் கர்னல் மாக்ஸ்வெல்.

ஆனால், மைசூர்ப் போரினால் ஏற்பட்ட பயன்கள் முழுவதையும் கும்பினி அடையும்வரை எந்தவிதமான புதுப்போர்களிலும் ஈடுபடாமலிருக்கும்படி, கலெக்டர் லண்டன் துரைக்குக் கும்பினி மேலிடத்திலிருந்து ஓர் எச்சரிக்கை உத்தரவு வந்து விட்டது! அதனால் கர்னல் மாக்ஸ்வெல் பெரிதும் ஏமாற்றம் அடைந்தான்.

மேற்குப்பாளையங்களில் வரிவசூல் செய்து வருவதற்காக, கலெக்டர் லண்டன்துரை ஒரு சிறு படையோடு காப்டன் டைட்டன் என்பவனை அனுப்பிவைத்தான். ஆனால் அந்தக் காப்டனால் ஒரு சல்லிகூட வரியாக வசூலிக்க முடியவில்லை. அவன் வெறுங்கையோடு திரும்பி வந்தான். அதன் பின்னர், லண்டன் தன்னுடைய பிரதிநிதியாக ஸ்டீவன்சன் என்பவனை அனுப்பி, எல்லாப் பாளையங்களிலும் நயம் பயமாக வசூல் செய்ய முயன்றான்.

கலெக்டர் எந்தவிதமான தீவிர நடவடிக்கையும் மேற்கொள்ள முடியாது என்பதைக் கட்டபொம்மன் இதற்குள் நன்கு உணர்ந்து கொண்டுவிட்டான். இதனால் அவன் வரிப் பணத்தைச் செலுத்தாமல், மேலும், மேலும் தவணை சொல்லிக் கொண்டே வந்தான். வரி வசூலிக்க வரும் அதிகாரிகளுக்கு விருந்துகள் வைத்தும், பரிசுகள் வழங்கியுமே அவன் தன் காரியத்தைச் சாதித்துக் கொள்ளலானான். அதுமட்டுமல்ல; அருங்குளம், சுப்பலாபுரம் ஆகிய பகுதிகள் கும்பினியாரால் தன் தந்தைக்குப் பரிசாக அளிக்கப் பட்டவையென்றும் அவன் அழி வழக்காடினான். அவ்வாறே ஒரு மனுவைத் தயாரித்து, அதைக் கும்பினி கவர்னருக்கு அனுப்பி வைத்தான்.

இதற்கிடையில், மைசூர்ப் போர் முடிவதற்கு முன்பே, ஆர்க்காட்டு நவாபு தன் பிரிதிநிதியொருவனைத்



திருநெல்வேலிச் சீமைக்கு அனுப்பி, வரிவசூல் என்ற பெயரால் அங்கு அகப்பட்டதைச் சுருட்டிவருமாறு பணித்திருந்தான். அந்தப் பிரதிநிதி பாஞ்சாலங்குறிச்சிக்கும் வந்து சேர்ந்தான். உடனே கட்டபொம்மன் ஒரு தந்திரம் செய்தான். அதாவது, அந்தப் பிரிதிநிதிக்கு நிரம்பப் பரிசுகள் கொடுத்து அவனைச் சரிக்கட்டிக் கொண்டான். அதோடு, கப்பத் தொகையில் ஒரு சிறு பகுதியை செலுத்தி தான் செலுத்தாத ஒரு பெருந்தொகைக்கு அவனிடம் போலி ரசீது ஒன்று எழுதி வாங்கிக் கொண்டான். மேலும், தலக்காவல், திசைக்காவல் முதலியவற்றுக்காக நவாபிடமிருந்து தனக்கு ஒரு பெரிய தொகை வரவேண்டியிருப்பதாகவும், அந்தப் பிரதிநிதி கைப்பட ஒரு கணக்கு எழுதி வாங்கி வைத்துக் கொண்டான். வந்த பிரதிநிதியோ, தனக்குக் கிடைத்த வரையில் இலாபம் என்ற எண்ணத்தில், கட்டபொம்மன் கேட்டவாறெல்லாம் எழுதிக் கொடுத்தான். இந்தப் போலி ரசீதுகளையும் போலிக் கணக்குகளையும் காட்டி, கும்பினி அதிகாரிகளை பின்னர் ஏமாற்றலாம் என்பதே கட்டபொம்மனின் திட்டம்!

தாசில்தார் என்ற பதவி வகித்தவன் இந்த நவாபின் பிரதிநிதி. அவன் பாஞ்சாலங்குறிச்சியில் தன் காரியத்தை முடித்துக் கொண்டு, மேற்குப் பாளையப்பகுதிக்கும் புறப்பட்டுச் சென்றான். அங்கே அவன் படுகொலை செய்யப்பட்டான்!

நவாபின் அதிகாரி கொலையுண்ட செய்தி திருநெல்வேலிக் கலெக்டருக்கு பெரும் அதிர்ச்சியை அளித்தது. அதே சமயத்தில் பாளையங்களுக்கிடையே புகுந்து குழப்பம் விளைவித்து வந்த அந்த மனிதன் இறந்து ஒழிந்ததில் அவனுக்கு ஒரு திருப்தியும் ஏற்பட்டது.

இந்த நிகழ்சசிக்குப் பின்னர், கும்பினியார் நவாபுடன் ஒரு புது உடன்படிக்கை செய்து கொண்டார்கள். அதன்படி இனிமேல் நவாப் தன் தனிப்பட்ட முறையில் எந்த அதிகாரிகளையும் பாளையக்காரர்களிடம் அனுப்பக் கூடாது

என்று தடை விதிக்கப்பட்டான். பழைய பாக்கியினை நிர்ணயம் செய்யும் உரிமையையும், புதிய வரிகளை விதித்து அவற்றை வசூலிக்கும் பூரண உரிமையையும் கும்பினியே எடுத்துக் கொண்டது. வசூலாகும் தொகையில் வசூல் செலவு போக மீதியில் ஒரு பகுதியை நவாபின் செலவுக்காகத் தந்துவிட்டு, பாக்கித் தொகை முழுவதையும் அவன் ஏற்கெனவே பட்டிருந்த திராக் கடனுக்காகக் கும்பினி வரவு வைத்துக் கொள்வதென்று ஏற்பாடாயிற்று. அந்த உடன்படிக்கையோடு திருநெல்வேலிச் சீமையையே நவாப் கைகழுவி விட்டான்!

## கொள்ளை! கொள்ளை!!
## கொள்ளையோ கொள்ளை!!!

அதன்பிறகு, 1793-ம் ஆண்டின் தொடக்கத்தில், பாளையக்காரர்கள் விஷயத்தில் சற்று உறுதியான போக்கைக் கடைப்பிடிப்பதென்று கும்பினியார் தீர்மானித்தார்கள். ஆனால் அதற்கும் இடையூறாக, இங்கிலாந்திலிருந்து அப்போது ஒரு புதிய உத்தரவு வந்தது. அதாவது அந்த ஆண்டு ஐரோப்பாவில் இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் இடையே பெரும் போர் மூண்டிருந்ததால் இந்தியாவிலுள்ள பிரெஞ்சுப் பகுதிகளை உடனே தாக்கிக் கைப்பற்றுமாறு பிரிட்டிஷ் அரசாங்கம் சென்னையிலுள்ள கிழக்கிந்தியக் கும்பினிக்கு உத்தரவிட்டது. இந்த உத்தரவின்படி எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் மிக முக்கியமானவையாய் இருந்தபடியால் அவை முடியும் வரை பாளையக்காரர்கள் மீதான நடவடிக்கைகளைத் தள்ளிப் போடுவதென்று கும்பினி தீர்மானித்தது. கட்டபொம்மன் பாடு மறுபடியும் கொண்டாட்டமாகி விட்டது!

இதற்கிடையில், ஆங்கிலேயர்களிடம் தோல்வியடைந்திருந்த திப்புசுல்தான், அவர்கள் மீது எப்படியேனும் வஞ்சம் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று அந்தரங்கத்தில் துடிதுடித்துக் கொண்டிருந்தான். அதற்காக அவன் இரகசியமாக பிரஞ்சுக்காரர்களின் உதவியை நாடியிருந்தான். அவர்களும் அவனுக்கு உதவி செய்வதாக வாக்களித்திருந்தார்கள். ஆனால் அது காரியத்தில் கைகூடுவதற்குள்ளாக சென்னையிலிருந்து கும்பினிப் படையொன்று புறப்பட்டுப் போய்ப் பாண்டிச்சேரியைப் பிடித்துக் கொண்டு விட்டது!



பாண்டிச்சேரி வீழ்ந்ததால், திப்புவுக்கு பிரஞ்சுக்காரர்களின் உதவி கிடைக்காமல் போயிற்று. திப்புவுக்கு மட்டுமல்ல; இந்தியாவின் பல பாகங்களில் கும்பினியை எதிர்த்துக் கலகம் செய்துவந்த அநேகம் குறுநில மன்னர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்கள் அளித்துக் கொண்டிருந்த உதவி நின்று போய்விட்டது!

இதனால் அப்போது ஆங்கிலேயர்களுக்குக் குறிப்பிடத்தக்க பெரிய எதிரிகள் யாருமே இல்லாமல் போய்விட்டார்கள். இருந்தாலும் அவர்களுக்குத் திப்புசுல்தான் விஷயத்தில் மட்டும் உள்ளூர ஓர் அச்சம் இருந்து கொண்டேயிருந்தது. அவனை இறுதியாக ஒழிக்கும்வரை பாளையக்காரர்களை ஒழிப்பது போன்ற சில்லறை விஷயங்களில் கும்பினிப் படைகளை ஈடுபடுத்துவதில்லையென்று அவர்கள் முடிவு செய்துவிட்டார்கள்.

இந்த அந்தரங்கம் கட்டபொம்மனுக்குத் தெரிந்து போய் விட்டது. எனவே அவன் துணிவு மிகக் கொண்டான். காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்வதென்று தீர்மானித்தான். அதாவது, தன் படை வீரர்களுடன் சுற்று வட்டாரங்களில் புகுந்து கொள்ளையடிப்பதிலும் கொலைகள் செய்வதிலும் தீவிரமாக முனைந்தான். அது மட்டுமல்ல; தன் குடிமக்களையும் கசக்கிப் பிழிந்தான்.

அந்தக் காலத்தில் மிகப் பிரபலமாக விளங்கிய கொள்ளைக் கூட்டத்தினர் பலரை கட்டபொம்மன் தன் படையிலே சேர்த்துக்கொண்டான். அவர்களது துணையோடு சென்று, எட்டயாபுரத்துக்குச் சொந்தமான பல

கிராமங்களிலும், மற்றும் ஆழ்வார்திருநகரி, ஸ்ரீவைகுண்டம் போன்ற இடங்களிலும் அவன் புகுந்து சூறையாடினான். அங்குள்ள கோயில்களைக் கூட அவன் விட்டுவைக்கவில்லை. பெண்களையும் குழந்தைகளையும் கூடத் துன்புறுத்தி, அவர்கள் அணிந்திருந்த சிறு சிறு நகைகளைக் கூட அவன் பறித்துக் கொண்டான். தாய்மார்கள் கால் விரலில் போட்டிருந்த மிஞ்சி என்கின்ற சிறிய வெள்ளி வளையங்களையும் அவன் விடமாட்டானாம். "பாஞ்சாலங் குறிச்சியான் மிஞ்சியையும் மிஞ்சவிட மாட்டான்" என்பது அக்காலத்தில் வழங்கி வந்த பழமொழியாகும்.

'காதறுப்பான் கட்டபொம்மன்' என்னும் மற்றொரு பழமொழியும் திருநெல்வேலிச் சீமையில் வழக்கிலிருந்து வந்ததாகத் தெரிகிறது. காரணம், பெண்கள் அணிந்துள்ள காதணிகளுக்காக, அவர்களது காதுகளையே அவன் இரக்கமின்றி அறுத்துவிடுவானாம்!

இத்தகைய கொடுஞ்சித்தம் படைத்தவன் வியாபாரிகளை மட்டும் சும்மா விட்டு வைப்பானா? அவர்களது வர்த்தகப் பண்டங்களைக் கொள்ளையடிப்பதில் அவனுக்கு ஓர் அலாதியான ஆனந்தமாம்! அறுவடை சமயத்தில் வயல்களில் புகுந்து, குடியானவர்கள் அரும்பாடு பட்டுக் கதிரடித்துத் தூற்றிப் புடைத்து வைத்திருக்கும் தாவர தானியங்களை அப்படியே அள்ளிக்கொண்டு வந்து விடுவானாம்!

வசதி படைத்த பெரிய மனிதர்களாய் உள்ளவர்களை அவன் பாஞ்சாலங்குறிச்சிக்கு தூக்கிக் கொண்டு போய் விடுவது வழக்கமாயிருந்தது. அவர்களைச் சேர்ந்தவர்கள் அவன் கேட்கும் பெருந்தொகைகளைக் கொண்டு வந்து கொடுத்து விட்டு, அந்தப் பெரிய மனிதர்களை மீட்டுச் செல்லவேண்டும்!

இரவு நேரங்களிலும், யாரும் எதிர்பாராத சமயங்களிலும், பெரும் திருவிழாக் காலங்களிலும்தான் கட்டபொம்மன் தன் கொள்ளைக் கூட்டத்தோடு புறப்பட்டுப் போவது வழக்கம்.



அப்போது கும்பினிப் படைகளோ, பிற பெரிய பாளையங்களின் படைகளோ எதிர்ப்படுமாயின், அவன் அவர்களை எதிர்க்கத் துணியமாட்டான்; நேரே பாஞ்சாலங் குறிச்சிக்கு ஓடி வந்து விடுவான்! நிராயுத பாணிகளான குடியானவர்களிடத்திலும் பெண்களிடத்திலும்தான் அவன் தன் வீர தீர சூர பராக்கிரமங்களைக் காட்டுவது வழக்கமா யிருந்தது!

இந்தக் கோழையைத்தான் நம் பாரத தேசத்தின் முதல் முழக்க வீரன் என்று பாராட்டுகிறார் ம.பொ.சி. இந்தக் கூற்று நம் அருமைத் தாயகத்தையே அவமதிப்பது போல் இருக்கிறதல்லவா?

ஒப்பிலக்கணம் என்னும் உயரிய நூலை இயற்றிய பெரியார் கால்டுவெல் பாதிரியாரை அறியாதார், தமிழ் கற்றோரிடையே எவருமிருக்க மாட்டார்கள். தமிழுக்குப் பெரும் பணி புரிந்த, தமிழின் தனிச் சிறப்புகளை உலகிற்கு எடுத்துணர்த்திய அந்தக் கிறிஸ்தவ பெருமகன் திருநெல்வேலிச் சீமையில் வாழ்ந்தவராவார். அவர் திருநெல்வேலியின் வரலாறு என்ற ஓர் அரிய நூலையும் ஆங்கிலத்தில் எழுதியுள்ளார். அந்நூலில் அவர் நமது கட்டபொம்மனைப் பற்றிக் குறிப்பிட்டுள்ள சில பகுதிகளைப் பாருங்கள்.

இதன் தமிழ் மொழிபெயர்ப்பு வருமாறு:

**"அந்தப் பாளையக்காரன் தமது பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையிலிருந்து ஆயுதமேந்திய துணைவர்களுடன் புறப்பட்டுச் சென்று, சர்க்கார் கிராமங்களிலும் பிற பாளையக்காரர்களின் கிராமங்களிலும் புகுந்து தாக்கி, தம் கண்ணில் பட்டவற்றையெல்லாம் கொள்ளையடிப்பான். பல சமயங்களில் முக்கியமான கிராமத் தலைவர்களைத் தூக்கிக் கொண்டு போய்விடுவான்!"**

[திருநெல்வேலியின் வரலாறு – பக்கம் 173.]

கால்டுவெல் பாதிரியார் மேலும் கூறுகிறார்:

"பண்பு நிறைந்த விவசாயிகளையெல்லாம் சிறையில் அடைப்பதற்கு அவன் கொஞ்சம்கூடத் தயங்கவில்லை. பயிர்த்தொழிலில் கிடைக்கும் விளைச்சலில் நூற்றுக்குப் பதினாறு பங்கை மட்டுமே அவன் குடியானவர்களுக்குக் கொடுப்பான். இதைக் கொண்டுதான் அவர்கள் தங்கள் குடும்பச் செலவு, சாகுபடிச் செலவு, கால்நடைகளுக்கான செலவு ஆகிய யாவற்றையும் கவனித்துக் கொள்ள வேண்டும். இதனை ஏற்க மறுப்பவர்களுக்கு, இவனோ இவனது அதிகாரிகளோ கொடுந்தண்டனை வழங்குவார்கள்!

கிராமத்துக் குடிமக்கள் அமைதியான முறையில் இவன் கேட்கும் வரியைக் கொடுக்காமல் மறுத்தால், அக்கிராம மக்களையெல்லாம் சிறைப் பிடித்தும் சித்திரவதை செய்தும் அவன் பணம் வசூலிப்பான். அவர்களது நிலங்களைப் பறிமுதல் செய்வான். கால்நடைகளையும் மற்றப் பொருள்களையும் கவர்ந்து கொள்வான். மக்களில் முக்கியமானவர்களைக் கடத்திச் சென்று, அவர்களுக்குப் பல்வேறு விதமான கொடுமைகள் இழைப்பான். தனக்கு வேண்டிய கப்பத்தையும் அநியாய வரிகளையும் அவன் எப்படியும் வசூலித்து விடுவான்!"

"கம்பளப் பாளையத்தார் வேட்டைக்குச் சென்றாலும், அவர்கள் வீட்டில் திருமணம் போன்ற விழாக்கள் நடந்தாலும், அந்தச் செலவுகள் எல்லாம் குடிமக்களிடமே தண்டல் முறையில் வசூலிக்கப்பட்டு விடும்!"

இவையெல்லாம் கால்டுவெல் பாதிரியார் கட்ட பொம்மனைப் பற்றித் தருகிற விவரங்களில் சிலவாகும். வேறு பல பிரிட்டிஷ் அதிகாரிகளும் கட்டபொம்மனைப் பற்றி விரிவாக எழுதியுள்ளார்கள். அவற்றையெல்லாம் இங்குத் தருவதென்றால் இடங்காணாது. ஆகையால் பொதுவாகத் திருநெல்வேலிச் சீமையில் அப்போது நிலவிய குழப்ப



நிலையை விவரிக்கும் ஓர் அதிகாரியின் கடிதத்தை மட்டும் கவனித்து விட்டு நாம் மேலே செல்வோம்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் கும்பினிப் பட்டாளத்தின் தலைவனாக இருந்த காப்டன் டைட்டன் என்பவன் எழுதிய அக்கடிதம் வருமாறு:

"ஒருமுறை கண்டிப்பான உத்தரவும், மற்றோர் முறை தலையிடாக் கொள்கையும் கும்பினி அரசு கடைப்பிடித்து வருகிறது. இக்கொள்கையால் சுற்று வட்டார மக்கள் கும்பினி மீது வைத்துள்ள நம்பிக்கையும் நன்மதிப்பும் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வருகின்றன. பாளையக்காரர்களால் நவாபுக்கும் பின்பு கும்பினிக்கும் வரிவசூல் முறையில் பல வசதிகள் இருந்திருக்கலாம். ஆனால் இன்று பாளையக்காரர்கள் ஒருவர் பகுதியில் மற்றொருவர் புகுந்து கொள்ளையிடுவதையும், நிராயுதபாணியான பொது மக்களைக் கொடுமை செய்வதையும் படுகொலைகள் புரிவதையும் நாம் ஒப்புக்கொண்டுதான் ஆக வேண்டும். குறிப்பாக, பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரன் செய்து வரும் கொடுமைகள் கொஞ்சநஞ்சமல்ல! கும்பினியின் கட்டளை என் கைகளைக் கட்டிப் போட்டிருக்கிறது. இப்பகுதி மக்கள் ஆள்பவர் யார் என்பதைப் பற்றிக் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. அதை விட, யார் நீதியுடனும் அமைதியுடனும் பாதுகாப்புடனும் ஆட்சி செலுத்தக் கூடியவர்கள் என்றுதான் எதிர்பார்க்கிறார்கள். வலிமை பெற்றவர்களின் கொடுமைகளிலிருந்து இந்தப் பரிதாபகரமான குடிமக்களைக் காக்கும் பணியில் கும்பினி கவனம் செலுத்தினால், மக்களின் அனுதாபத்தையும் ஆதரவையும் நாம் நிச்சயமாகப் பெறமுடியும். இதனால் கும்பினிக்கே பெரும் பலன் ஏற்படும்!"

இக்கடிதம் ஓரளவு அன்று தென்னகத்தில் நிலவிவந்த அவல நிலையைப் படம் பிடித்துக் காட்டுவதாக இருக்கிறது. கும்பினியின் நலனில் அக்கறை கொண்ட ஒரு ராணுவ தளபதி தன் மேலதிகாரிகளுக்கு எழுதியுள்ள அந்தரங்கமான அரசியல்

யோசனை இது. எனவே, இதில் குறிப்பிட்டுள்ள எதையும், கட்டபொம்மன் மீதுள்ள பகைமையினால் வெள்ளைக்காரன் வேண்டுமென்றே எழுதிவைத்த பொய்யுரையென்று புறக்கணித்து விட முடியாது.

வெள்ளைக்காரர்கள் எழுதிவைத்த குறிப்புகள் ஒரு புறமிருக்க, அக்காலத்துத் தமிழ்க் கவிஞர்கள் தந்துள்ள சில கருத்துகளைக் கவனிக்கலாம்.

அரசாங்கக் கையெழுத்துப் பிரதி நூல் நிலையத்தில் கட்டபொம்மன் கும்மியென்ற நூல் ஒன்று இருக்கிறது. அதிலுள்ள சில கண்ணிகளைக் கீழே தருகிறேன், பாருங்கள்:

''வேட்டைக்குப் போறதும் கோட்டைக்கு வாரதும்,
விஸ்தாரமாய் விளையாடுவதும்,
நாட்டிகமாய்ச் சேவல் கட்டுவதும், துரை
தன்னரசாய்ச் சீமையாளுவதும்;
கும்பினிக்கே கிஸ்தி கட்டாமல் வெகு
கூட்டங் குவிதலாய்த் தான் கூடி,
செம்பாதி ராத்திரி வேளையிலே தினம்
தீவட்டிக் கொள்ளையடிப்பதுவும்;
வில்லும் கையுமாய்த் திரிவதுவும், வரி
வேங்கைப் புலிபோல் வருவதுவும்,
தொல்லுலகில் கட்டபொம்மு துரைசெய்தி
சொல்லமுடியாது மெல்லியரே!''

இந்தக் கும்மியை பாடிய புலவர் கட்டபொம்மன் பகைவரல்ல. அதற்கு மாறாக, அவனைப் பாராட்டிப் புகழ்ந்து பாடப்பட்ட கும்மி இது. எனினும், கவி, தன்னையும் அறியாமல் அவனுடைய உண்மைக் "குணாதிசயங்களை" சிற்சில இடங்களில் வெளிப்படுத்திவிடுகிறார் என்றே கொள்ள வேண்டியதிருக்கிறது.

கட்டபொம்மன் கொள்ளையடித்து வாழ்ந்ததும் மக்களைக் கொடுமைப்படுத்தியதும் யாவராலும் மறுக்க



முடியாத சரித்திர நிகழ்ச்சிகள். அப்பகுதி மக்களே இன்றும் நேரடியாக ஒப்புக் கொள்ளுகின்ற ஓர் உண்மை இது. கட்டபொம்மனைப் போற்றுகின்ற சில பெரியவர்கள்கூட, நேரில் பேசும்போது இந்த உண்மையை மறுக்கவில்லை. ஆங்கிலேயரை எதிர்த்தான் என்பதற்காக அவனை அவர்கள் "மன்னிக்கிறார்கள்!" அவர்களோடு நேரடியாக நடத்திய விவாதத்திலிருந்து அது தெரியவந்தது.

கட்டபொம்மனைப் பாராட்டியெழுதியுள்ள சரித்திர ஆசிரியர்களில் ஒருவரான திரு. தி.நா. சுப்பிரமணியம் அவர்கள், தம்முடைய கட்ட பொம்மு என்ற நூலில் அவனுடைய கொடிய இயல்புகளைப் பற்றிக் கொஞ்சம் கோடி காட்டிச் செல்வதைப் பாருங்கள்!

"அவருடைய ஆள்கள் ஆழ்வார்திருநகரி, ஸ்ரீவைகுண்டம் முதலிய இடங்களுக்குச் சென்று பணம் திரட்டி வந்தனர். பணம் கொடுக்காதவர்களைக் கட்டித் தூக்கி வந்து விட்டனர்." (பக்கம் 97)

ஆழ்வார் திருநகரியும் ஸ்ரீவைகுண்டமும் பாஞ்சாலங் குறிச்சிப் பாளையத்தைச் சேர்ந்தவை அல்ல. அப்படியிருக்க அங்குப் போய்ப் "பணம் திரட்டும்" உரிமை கட்டபொம்மனுக்கு எப்படி ஏற்பட்டது? அவன் கொள்ளையடித்த செய்தியைத்தான் "பாலிஷாக"ப் பணம் திரட்டினார்கள் என எழுதியுள்ளார் தி.நா.சு. ஆனால் அடுத்த வரியிலேயே அவர் உண்மையை ஒப்புக்கொண்டாக வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது! பணம் கொடுக்காதவர்களைக் கட்டித் தூக்கி வந்து விட்டனர் என்கிறார் அவர். உரிமையில்லாத இடத்தில் பணம் திரட்டப்போய், பணம் கொடுத்தவர்களை சாதாரணமாகக் கூட அழைத்துவராமல் கட்டித் தூக்கி வந்தார்களாம். இந்தச் செயலைப் பகற் கொள்ளையென்ற சொல்லைத் தவிர வேறு எந்தப் பெயராலாவது அழைக்க முடியுமா?

ம.பொ.சி. அவர்கள் தாம் எழுதியுள்ள நூல்களிலோ அல்லது கட்டுரைகளிலோ, கட்டபொம்மனைப்பற்றி இப்படியொரு கருத்து இருக்கிறது என்பதைக்கூடச் சொல்லாமல், முழுக்க முழுக்க இருட்டடிப்புச் செய்திருக்கிறார்!

வெள்ளைக்காரர்கள் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையைக் கைப்பற்றிய காலத்தில், அங்கிருந்த பாதாளச் சிறையில் சில பெரியவர்கள் அடைபட்டுக் கிடந்திருக்கிறார்கள். அந்தப் பெரியவர்கள் குறும்பூர், மானாடு என்னும் ஊர்களிலிருந்து கட்டபொம்மனால் பலவந்தமாகத் தூக்கி வரப்பட்டவர்களாம். இவர்கள் நெடுங்காலமாக அங்குச் சிறைப்பட்டிருந்திருக்கிறார்கள். இந்தத் தமிழ்ப் பெருமக்களை மிருகங்களினும் கேவலமாக நடத்தியிருக்கிறான் பாஞ்சைப் பாதகன். இவர்களை விடுவித்த பிறகு இவர்கள் கொடுத்த வாக்கு மூலங்கள் இன்னும் ரிக்கார்டு ஆபீசில் இருக்கின்றன.

பிளாக்மெயில், கிட்நாப்பிங் என்றெல்லாம் இந்தக் காலத்தில் சொல்லுகிறோமே, இவற்றை அந்தக் காலத்திலேயே மிகச் சிறப்பாக நடத்தி வந்திருக்கிறான் நமது காவியத் தலைவன் கட்டபொம்மன்!

திருநெல்வேலிக் கலெக்டருக்குப் பாளையக்காரர்களும், பொதுமக்களும் செய்துகொண்ட மனுக்கள் பலவற்றில், கட்டபொம்மனின் தகாத செயல்கள் பற்றிப் புகார்கள் செய்யப்பட்டுள்ளன. அதேபோல, கும்பினியின் இராணுவ அதிகாரிகளும், சிவில் அதிகாரிகளும் சென்னைக்கு அனுப்பிய பல கடிதங்களிலும் ரிப்போர்ட்டுகளிலும் அவனது கொடுஞ்செயல்கள் பற்றித் தகவல்கள் தரப்பட்டிருக்கின்றன. இவ்வளவு இருந்தும், சென்னைக் கும்பினி கட்டபொம்மன் மீது உடனடியாக எந்த நடவடிக்கையும் எடுக்குமாறு உத்தரவிடவில்லை. அதற்கு மிகவும் இரகசியமான ஒரு காரணமும் இருந்தது.



அதாவது -

டச்சுக்காரர்கள் வசமிருந்த் தூத்துக்குடியில் டேவிசன் என்ற ஓர் ஆங்கிலேயன் இருந்தான். அவன் உண்மையில் ஆங்கிலக் கும்பினியின் இராணுவ உளவு இலாகாவில் காப்டன் பதவி வகித்து வந்தான். ஆனால் வெளிப்பார்வைக்கு கும்பினியின் வர்த்தகப் பிரதிநிதி போல் அவன் நடித்து வந்தான். தூத்துக்குடியிலிருந்துகொண்டு தென்னாட்டுப் பாளையக்காரர்களில் யார் யார் டச்சுக்காரர்களுடன் தொடர்பு கொள்கிறார்கள் என்பதைக் கண்காணித்து வருவதே அவன் பணியாக இருந்தது.

கட்டபொம்மனுக்கும் டச்சுக்காரர்களுக்கும் அப்போது மிகவும் நெருக்கமான தொடர்பு ஏற்பட்டிருந்தது. ஆனால், இனிமேல் இந்தியாவில் ஒரு டச்சு அரசை நிறுவுவதோ, நிலைநிறுத்துவதோ இயலாது என்ற நிலைமை ஏற்பட்டவுடன், டச்சுக்காரர்கள் தமக்குப் பாளையக்காரர்களோடு ஏற்பட்டிருந்த தொடர்புகளைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொள்ளலானார்கள்.

இந்தச் சமயம் பார்த்து, டேவிசன் கட்டபொம்மனுடன் நெருங்கிப் பழகத் தொடங்கினான். காரணம், கட்டபொம்மன் அதுகாறும் டச்சுக்காரர்களின் கைக்கூலியாக இருந்தவன். எனவே அவனை பிரிட்டிஷ்காரர்களின் கைக்கூலியாக மாற்றுவது எளிதேயல்லவா? அந்த ஆசையில், டேவிட்சன் கட்டபொம்மனோடு நெருக்கமான தொடர்பு கொள்ளலானான்.

முன்பு அருங்குளம், சுப்பலாபுரம் மக்கள் கிளர்ந்தெழுந்த போது, இந்த டேவிசன் கொடுத்த தைரியத்தினால்தான் ஜெகவீரபாண்டியன் பிரிட்டிஷார் சார்பில் தலையிட்டான்.

கம்பளத்து மக்களின் குலதெய்வமான ஜக்கம்மாவின் கோயில் பாஞ்சாலங்குறிச்சியிலிருந்தமையால், அந்தக்

கோயிலின் பூசாரியென்ற முறையில் அம்மக்களிடையே கட்டபொம்மன் நல்ல செல்வாக்குப் பெற்றிருந்தான். ஆகவே, கட்டபொம்மனை பிரிட்டிஷ் கும்பினியின் கையாளாக மாற்றிவிட்டால், அது கம்பள இனத்தவர் அனைவரையுமே மாற்றிவிட்டாற்போல் ஆகிவிடும் என்று கணக்குப் போட்டான் டேவிசன்.

ஆனால், இவனுடைய இந்த இரகசியத் திட்டத்துக்கு இடையூறாக விளங்கினான் எட்டயாபுரத்தான். எப்படியெனில், எட்டயாபுரத்தான் ஆங்கிலேயரிடம் உண்மையாகவே விசுவாசம் காட்டிவந்தான். அதே சமயத்தில், அவன் கட்டபொம்மனிடம் தீராத பகைமை கொண்டிருந்தான். எட்டயாபுரத்தான் கட்சியில் நியாயமும் இருந்தபடியால், கலெக்டரும் மற்ற அதிகாரிகளும் அவன் பக்கமே சார்ந்து நிற்கவேண்டியதாகிவிட்டது.

ஆனாலும், கட்டபொம்மனை எப்படியும் கும்பினியின் விசுவாசமுள்ள ஊழியனாக ஆக்கிவிடுவதாக, டேவிசன் மேலதிகாரிகளுக்கு வாக்களித்து வந்தான். அவனுடைய சொல்லுக்குக் கும்பினி எவ்வளவு மதிப்பு வைத்திருந்தது என்பது, பின்னால் வரப்போகும் ஒரு நிகழ்விலிருந்து நன்கு தெளிவாகும்.

### போதாத காலம் ஆரம்பம்

இதற்கிடையில், திருநெல்வேலிச் சீமையில் எப்படியாவது அமைதியை நிலைநாட்டி, வரி வசூல்களையும் தீவிரப்படுத்த வேண்டுமென்று, கும்பினியார் ஆர்வம் கொண்டனர். இதற்காக, அந்த மாவட்டத்தின் ஒவ்வொரு முக்கியமான இடத்திலும், கும்பினிப் பட்டாளம் ஒன்றை நிறுத்தி வைப்பதென்று முடிவு செய்யப்பட்டது. இது சம்பந்தமான உத்தரவு, பாளையங்கோட்டையில் அப்போது கமாண்டராக இருந்த கர்னல் காம்பெல்லுக்கு அனுப்பி வைக்கப்பட்டது.



காம்பெல் அந்த உத்தரவை நிறைவேற்றுவதற்கு முன்பாக, கலெக்டரையும் கலந்தாலோசிக்க வேண்டுமல்லவா? ஆனால், அதற்குள் 22-7-1794 அன்று, கலெக்டர் லண்டன்துரை திடீரெனக் காலமாகிவிட்டான்.

லண்டன் துரை இறந்ததும், அவனிடம் உதவியாளனாக இருந்து வந்த பாலாமியான் என்பவன் தற்காலிகக் கலெக்டராக நியமிக்கப்பட்டான். பின்னர், அப்போது திருவாங்கூரில் பிரிட்டிஷ் ரெசிடெண்டாக இருந்த ஜார்ஜ் பவுனி என்பவன், திருநெல்வேலியின் கலெக்டராகப் பதவியேற்றான்.

பவுனித்துரை பதவிக்கு வந்தவுடன், அவன் முக்கியமான பிரகடனம் ஒன்றை வெளியிட்டான். அதாவது -

இனிமேல் எந்தப் பாளையக்காரனும் நவாபுடன் எந்தவிதத் தொடர்பும் வைத்துக்கொள்ளக் கூடாது. நவாபின் கட்டளைப்படி நடப்பவர்கள் செய்கைகளுக்கு, அவர்களே பொறுப்பாளியாவார்கள். பாளையக்காரர்கள் அனைவரும் கலெக்டருடன்தான் தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும். கும்பினியின் கட்டளைப்படிதான் அவர்கள் நடந்துகொள்ள வேண்டும்! - இதுவே அந்தப் பிரகடனத்தின் சாரம்.

இந்தச் சமயம், ஐரோப்பாவிலே ஆங்கிலேயருக்கும், டச்சுக்காரர்களுக்கும் இடையே போர் மூளலாயிற்று; உடனே, இந்தியாவில் டச்சுக்காரர் வசமிருந்த தூத்துக்குடியை ஆங்கிலக் கும்பினி பிடித்துக்கொண்டுவிட்டது. இது நடந்தது 1795-ஆம் ஆண்டு.

கும்பினியின் நேரடி ஆட்சிக்குள்ளாகத் தூத்துக்குடி சேர்த்துக் கொள்ளப்பட்டது. ஆனால் அங்கு வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த டச்சுக்காரர்களையும், கப்பல் போக்குவரத்தில் தொடர்புகொண்டிருந்த பிளமிஷ் வகுப்பினரையும், ஆங்கிலேயர்கள் அங்குத் தொடர்ந்து இருந்துவர

அனுமதித்தனர். இந்தச் சலுகைகளைப் பயன்படுத்திக் கொண்டு, டச்சு வியாபாரிகளும், முன்னாள் டச்சு அதிகாரிகளும் கள்ளத்தனமாக ஆயுதங்களை இறக்குமதி செய்து, அவற்றைப் பாளையக்காரர்களுக்கு விற்று இலாபம் திரட்டுவதில் ஈடுபட்டனர். பிற்பாடு பாஞ்சாலங்குறிச்சிப் போரின்போது கட்டபொம்மனால் உபயோகிக்கப்பட்ட பல துப்பாக்கிகள், இந்த முறையில் பெறப்பட்டவைதாம்.

இந்த ஆயுதக் கடத்தலை டேவிசன் விழிப்போடு கண்காணிக்க வேண்டியிருந்தது. அந்தப் பகுதியைச் சேர்ந்த பாளையக்காரர்களிடம் நெருக்கமான பழக்கம் வைத்துக் கொண்டால்தான், தன் கடமையைச் சரிவர நிறைவேற்றுவது சாத்தியமாகும் என அவன் எண்ணினான். இதற்காக அவன் ஒரு யுக்தி செய்தான். அதாவது,

பிரிட்டிஷ் கும்பினி அந்தப் பகுதியில் வசித்த நெசவாளர்களிடம் துணிகளை வாங்கி, அவற்றைத் தூத்துக்குடி துறைமுகம் வழியாக மேல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வந்தது. சில சமயங்களில் நெசவாளர்களுக்கு முன் பணமும் கொடுக்கப்பட்டது. இந்தப் பணத்தை அந்தந்தப் பகுதிப் பாளையக்காரர்களிடம் கொடுத்து, அவர்கள் மூலமாக நெசவாளர்களுக்குப் பிரித்துக் கொடுக்குமாறு டேவிசன் ஏற்பாடு செய்தான்.

பாஞ்சாலங்குறிச்சியில் ஆயிரம் நெசவாளர்கள் என்றால் அவர்களுக்கான முன் பணத்தை டேவிசன் கட்டபொம்மன் கையில் கொடுப்பான். கட்டபொம்மன் அதில் சரிபாதிக்கு மேல் தானே எடுத்துக்கொண்டு, ஏழை நெசவாளர்களை வயிற்றில் அடித்துவிடுவான். உயிருக்குப் பயந்த நெசவாள மக்கள், இந்த உண்மையை வெளியே சொல்ல முடியாமல் வேதனையுற்றனர்.

இந்த மோசடியை டேவிசனும் ஓரளவு அறிந்துகொண் டிருந்தான். எனினும், கட்டபொம்மனது தொடர்பை



வளர்ப்பதற்காக அவன் மூலமாகவே தொடர்ந்து பண வரவு செலவை நடத்தி வந்தான். அது மட்டுமல்ல, அவன் குடிப்பதற்குச் சீமை சாராய வகைகளையும் அவ்வப்போது பரிசாக அளித்து வந்தான். இதனால் டேவிசனுக்கு பாஞ்சாலங் குறிச்சியான் ஒரு தனிப்பட்ட மதிப்பும் மரியாதையும் செலுத்தி வந்தான்.

வீரபாண்டிய கட்டபொம்மன் பாஞ்சாலங்குறிச்சியின் பாளையக்காரனாகப் பட்டமேற்று ஏழு ஆண்டுகளாயின. கும்பினியின் தலையிடாக் கொள்கையால், இந்த ஏழு ஆண்டுகளும் அவனுடைய கொள்ளைத் தொழிலுக்கு மிகவும் அனுகூலமான காலமாகவே அமைந்திருந்தன. இந்த நிலையில், *1797,* மார்ச் *10*-ஆம் தேதியன்று, திருநெல்வேலி, இராம நாதபுரம் பகுதிகளின் பேஷ்கிஷ் கலெக்டராக, டபிள்யூ.சி. ஜாக்சன் என்பவன் நியமிக்கப்பட்டான்.

இந்த ஜாக்சன் மிகவும் துடுக்குத்தனமும், அகம்பாவமும், முன்கோபமும் கொண்டவன். நல்ல இராணுவ அனுபவம் உள்ளவன். திப்புவின் விவகாரம் தீரும் வரையில் தென்பாண்டிய நாட்டில் ஒரு திறமைவாய்ந்த ஆள் இருக்க வேண்டும் என்பதற்காகவே, கும்பினி மேலிடம் இவனைக் கலெக்டராக நியமித்தது.

இருந்தாலும், இவன் திருநெல்வேலிக்கு வரும்போது சென்னைக் கவர்னர் இவனுக்கு ஒரு முக்கியமான எச்சரிக்கை செய்து அனுப்பினார். அதாவது, கும்பினியின் பெரும் எதிரியான திப்பு சுல்தான் இறுதியாக அழிக்கப்படும்வரை, தென்னாட்டில் எந்தவிதமான சச்சரவுகளும் வைத்துக் கொள்ளக் கூடாது; நயத்தாலும் பயத்தாலும் இராஜதந்திர முறைகளாலும் எவ்வளவு பணம் வசூலிக்க முடியுமோ, அவ்வளவையும் வசூலித்துச் சென்னைக்கு அனுப்ப வேண்டியது; இதுவே அந்த எச்சரிக்கை.

ஜாக்சன் தென்னாட்டுக்கு வந்தபோது, இராமநாதபுரம் சேதுபதி ஒரு பெரும் புரட்சிக்கு ஆயத்தம் செய்து கொண்

டிருந்தார். அவரை அங்கிருந்து கிளப்பிச் சென்னைக்குக் கொண்டுவந்து வைத்துவிட்டனர் கும்பினி அதிகாரிகள். இராமநாதபுரம் பாளையத்தைக் கும்பினி தன் நேரடி ஆட்சியில் எடுத்துக்கொண்டுவிட்டது.

இதனால் ஜாக்சன் தன்னுடைய தலைமை அலுவலகத்தை இராமநாதபுரத்திலேயே அமைத்துக் கொண்டு விட்டான். எனினும் திருநெல்வேலியிலும் அவனுக்கு ஓர் அலுவலகம் இருந்தது.

இதற்கிடையில் கட்டபொம்மனுடைய அட்டகாசங்களும், அட்டூழியங்களும் பெருகிக்கொண்டே போயின. கும்பினியின் நேரடி ஆட்சியிலிருந்த பகுதிகளிலும்கூட அவன் புகுந்து கொள்ளையடிக்கலானான். பிற பாளையங்களின் பகுதிகளைத் தன்னுடையவையென்று அழி வழக்காடி, அவற்றை ஆக்கிரமித்து வந்தான்.

பாஞ்சாலங்குறிச்சியானின் பரம்பரை எதிரியான எட்டயாபுரத்தான், கும்பினிக்கு மறுபடியும் ஒரு மனுச் செய்திருந்தான். அதில், தன்னுடைய ஆட்சிப் பகுதியைச் சேர்ந்த அருங்குளம், சுப்பலாபுரம் கிராமங்களைக் கட்டபொம்மன் ஆக்கிரமித்திருப்பதோடு, தனது ஏனைய பகுதிகளிலும் அவன் அடிக்கடி புகுந்து கொள்ளையடிப்பதாகவும் புகார் கூறியிருந்தான்.

அக்காலத்தில் ஊற்றுமலைப் பாளையக்காரராக இருந்தவர் நவநீத மருதப்பன் என்பவர். இவர் மறவர் வகுப்பைச் சேர்ந்தவர். இவரும் கலெக்டருக்கு ஒரு மனுக் கொடுத்திருந்தார். அதில், கட்டபொம்மனும் அவனுடைய ஆள்களும் அடிக்கடி தன்னுடைய பாளையத்துக்குள் நுழைந்து, கலகம் செய்தும், கொள்ளையடித்தும் வருவதாக அவர் சொல்லியிருந்தார். அதுமட்டுமல்ல; ஊற்றுமலைப் பாளையம் பாஞ்சாலங்குறிச்சிக்கு அடங்கிப் பணிய வேண்டும் என்றும், அப்படிப் பணியாவிட்டால் அங்கு பெரும்



படையெடுப்பு நடக்குமென்பதாகத் தானாபதிப் பிள்ளையின் தம்பியான வீரபத்திர பிள்ளை யென்பவன் வந்து மிரட்டிப் போயிருப்பதாகவும் அந்த மனுவில் அவர் குறிப்பிட்டிருந்தார். 7-8-1797 என்று அந்த மனுவில் தேதியிடப்பட்டிருக்கிறது.

தலைவன் கோட்டையென்பது இன்னொரு பாளையம். அந்தப் பாளையத்தின் அதிபரும் கட்டபொம்மன் மீது ஒரு புகார் செய்திருந்தார். கட்டபொம்மன் அத்துமீறி நடப்பதாகவும், தானே நவாபின் பிரதிநிதியென்று சொல்லிக்கொண்டு, திசைக்காவல் பணத்தைத் தன்னிடமே செலுத்துமாறு மிரட்டுவதாகவும் அவர் அந்தப் புகார் மனுவில் கூறியிருந்தார்.

இவற்றைத் தவிர, கும்பினியின் அதிகாரிகளாகவும், பணியாள்களாகவும் பல இடங்களில் பணிபுரிந்து வந்தவர்கள் அந்தந்தப் பகுதிகளில் கட்டபொம்மன் புரிந்த கொடுமைகள் பற்றி ரிப்போர்ட்டுகள் அனுப்பியிருந்தார்கள். தனக்கு வந்து சேர்ந்த இந்தப் புகார்கள் யாவற்றையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக் கலெக்டர் ஜாக்சன் சென்னைக்கு அனுப்பிவைத்தான். மொழிபெயர்த்தவன் பெயர் எச்.கிரேம். இவனது கையெழுத்தோடு கூடிய இந்த ரிக்கார்டுகள் இன்றும் அரசாங்க ரிக்கார்டு ஆபீசில் இருக்கின்றன. இவற்றைத் தவிர, திருநெல்வேலிச் சீமை மக்கள் கும்பினித் தலைமையிடத்துக்கு நேரடியாக அனுப்பியுள்ள புகார்களும் இங்கு வந்திருக்கின்றன.

பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்தைச் சேர்ந்தவர்களே பலர் கையெழுத்திட்டு, சென்னைக்கு இரகசியமாக ஓர் ஓலை அனுப்பியுள்ளார்கள். அதில் கட்டபொம்மன் வரி வசூல் செய்யும் கொடுமைகளை விவரித்திருப்பதோடு, கும்பினியார் நெசவாளிகளுக்குத் தரும் முன்பணத்தை அவன் நடுவில் நின்று பறித்துக்கொள்வதால், இனிமேல் நெசவுத் தொழிலே நடைபெறாது என்றும் அவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

பாஞ்சாலங்குறிச்சியான் மீது வந்து குவிந்துகொண்டிருந்த புகார்களையெல்லாம் கலெக்டர் ஜாக்சன் கவனமாகப் பரிசீலனை செய்தான். அத்துடன் கட்டபொம்மன் கடந்த ஆறு ஆண்டுகளாக வரி செலுத்தாமல் சாக்குப்போக்குச் சொல்லி வருவதையும், அவன் கணக்கில் ஆறாயிரம் சக்கரம் வரி பாக்கியிருப்பதையும் தெரிந்துகொண்டான். அதை வசூலிக்கும் பொருட்டு, ஆலன் என்ற ஓர் அதிகாரியைப் பாஞ்சாலங்குறிச்சிக்கு அனுப்பி வைத்தான்.

ஆலன் துரை பாஞ்சாலங்குறிச்சிக்குப் போனவுடன், கட்டபொம்மன் அவனுக்குப் பிரமாதமான வரவேற்பு அளித்தான். ஆனால், வரிபாக்கி விஷயத்தில் வெறும் சால்ஜாப்புகளைக் கூறி, அவனைத் திருப்பி அனுப்பிவிட்டான்.

*1798*-ஆம் ஆண்டு பிறந்தது. கலெக்டர் ஜாக்சன் பாஞ்சாலங்குறிச்சியின் பழைய பாக்கியை வசூலிக்கப் புதிய முயற்சிகள் பலவற்றை மேற்கொண்டான்.

*1798*-இல்தான் கட்டபொம்மனது போதாக் காலமும் ஆரம்பமாயிற்று என்று சொல்லவேண்டும். ஏனெனில், அதுவரையில் எப்படியோ தப்பித்துக்கொண்டு வந்த அவன், அந்த ஆண்டில்தான் சில புதிய சிக்கல்களில் மாட்டிக் கொள்ளலானான்.

*1798* ஜனவரி *30*-ஆம் நாளன்று, ஆழ்வார் திருநகரியில் ஒரு திருவிழா நடந்தது. அந்தத் திருவிழாவில் கட்டபொம்மன் தன் ஆள்களுடன் திடீரென்று புகுந்து, மக்களைக் கும்பல் கும்பலாக வளைத்துக் கொண்டு கொள்ளையடித்தான். ஆண்கள், பெண்கள், குழந்தைகள் என்று பாகுபாடு பாராமல், அவர்களைத் துன்புறுத்தினான். அப்போது அந்த ஊருக்கு வந்திருந்த கும்பினி அதிகாரி காப்டன் ஹாமில்டன் என்பவன், கட்டபொம்மனது இந்தக் கொடுமைச் செயலைத் தடுக்க முயன்றான். ஆனால் ஹாமில்டனிடம் போதுமான படை வீரர்கள் இல்லை. திருவிழாக் கூட்டமாகவும் இரவு



நேரமாகவும் இருந்ததால், அவனால் அக்கலவரத்தை எளிதில் அடக்க முடியவில்லை. ஆகவே, ஹாமில்டன் தான் தங்கியிருந்த விடுதிக்குச் சென்றுவிட்டான். அந்த விடுதியைச் சுற்றிக் கட்டபொம்மன் தன் ஆள்களை நிறுத்தி வைத்துவிட்டு, ஹாமில்டனை வெளியில் வராதவாறு சிறை வைத்தாற்போல் செய்துவிட்டான். பிறகு அவன் தன் கொள்ளைத் தொழிலில் முழுமூச்சாக இறங்கி, அதில் கிடைத்தவற்றையெல்லாம் சுருட்டிக்கொண்டு, இரவோடிரவாகப் பாஞ்சாலங்குறிச்சிக்குத் திரும்பிவிட்டான்.

காப்டன் ஹாமில்டன் இந்த நிகழ்ச்சி பற்றிக் கலெக்டருக்கு ஒரு ரிப்போர்ட்டு அனுப்பினான். கட்டபொம்மனது இத்தகைய அட்டூழியங்களை அடக்காது விட்டுவிட்டால், தென்பாண்டி நாட்டில் கும்பினியின் கௌரவம் மிகமிகப் பாதிக்கப்பட்டுவிடும் என்று அவன் அதில் குறிப்பிட்டிருந்தான்!

ஜாக்சன் உடனே கட்டபொம்மனுக்கு ஒரு தாக்கீது அனுப்பினான். *3-2-1798* தேதியிட்ட அந்தத் தாக்கீதில் காப்டன் ஹாமில்டன் ஆணைக்குக் கீழ்ப்படியாமல் கட்டபொம்மன் ஆழ்வார்திருநகரியில் கொள்ளையடித்ததற்கும் கலகம் நடத்தியதற்கும் சமதானம் கோரப்பட்டிருந்ததோடு, கும்பினிக்குச் சேர வேண்டிய கிஸ்திப் பாக்கியை அவன் ஏன் இன்னும் அனுப்பவில்லையென்றும் கேட்கப்பட்டிருந்தது.

இந்தக் கடிதத்துக்குக் கட்டபொம்மன் பதில் ஏதும் அனுப்பவில்லை. ஆழ்வார் திருநகரியில் நடந்த நிகழ்ச்சிக்கு என்ன சமாதானம் கூறுவதென்று அவனுக்குத் தோன்றவில்லை. "கும்பினிக்கு வேண்டியது வரிப்பணம்தானே? அதைக் கொடுத்துவிட்டால், மற்ற எதையும் பற்றி அவர்கள் கவலைப்படமாட்டார்கள்" என்று அவனுடைய மாமன் அவனுக்கு யோசனை கூறினான். கும்பினியிலிருந்து மறுபடியும் ஆள் வந்தால், அவர்களுடைய நிலை என்ன

என்பதை அறிந்துகொண்டு, அதன்படி நடந்துகொள்ளலாம் என்று முடிவு செய்தான் கட்டபொம்மன்.

இரண்டு மாதங்கள் கழிந்தன. கட்டபொம்மனிடமிருந்து எந்தவிதமான பதிலும் வராததால், கலெக்டர் ஜாக்சன் மறுபடியும் 28-4-1798 அன்று ஒரு கடிதம் எழுதியனுப்பினான். அந்தக் கடிதத்தைக் கலெக்டருடைய வரிவசூல் அதிகாரிகளில் ஒருவரான வைகுண்டம் பிள்ளையென்பவர் பாஞ்சாலங்குறிச்சிக்கு எடுத்துச் சென்றார்.

"நடப்பு ஆண்டின் முதல் தவணை கிஸ்திப் பாக்கியையும், இரண்டாவது தவணை கிஸ்திப் பாக்கியையும் கட்டபொம்மன் இதுவரை செலுத்தவில்லை. மூன்றாவது தவணை நெருங்குவதால், இந்த ஆண்டின் முழு கிஸ்தியையும் உடனடியாக அனுப்ப வேண்டும். இதுதவிர, பழைய பாக்கிகள் முழுவதையும் உடனடியாகத் தீர்க்க வேண்டும். முன்பு பல தடவைகளில் செய்ததுபோல், பணம் கட்டாமல் வெறும் தவணை சொல்லக்கூடாது. இந்தக் கிஸ்தி பாக்கி விவரங்கள் பற்றி முடிவு செய்வதற்காகவும், தகுந்த சமாதானத்தைத் தெரிவிப்பதற்காகவும், என்னை நேரில் வந்து பார்க்கும்படி உத்தரவிடுகிறேன்!"

- இதுவே அந்தக் கடிதத்தின் கருத்து.

கிரிமினல் குற்றங்களில் தன்னை ஈடுபடுத்தி விடுவார்கள் என்று பயந்திருந்த கட்டபொம்மனுக்கு, இக்கடிதம் சற்று ஆறுதலைத் தந்தது. கும்பினியார் வரிப்பணத்தில் மட்டும் குறியாக இருக்கிறார்களே தவிர மற்ற தன்னுடைய தீய நடவடிக்கைகளைப்பற்றி அவர்கள் அக்கறை காட்டவில்லையென்று அவன் அனுமானித்துக் கொண்டான். எனவே, பணத்தைக் கட்டுவதிலும் கூடுமானவரை காலம் கடத்தலாம் என்று அவன் திட்டமிட்டான்.

கட்டபொம்மனுடைய உபசாரங்களிலும், பரிசுகளிலும் மயங்கிப்போன வைகுண்டம்பிள்ளை, மைசூர்போர் முடியும்வரை தென்னாட்டில் கும்பினியார் எந்தவிதமான ராணுவ நடவடிக்கையையும் எடுக்கமாட்டார்கள் என்ற இரகசியத்தையும் அவனுக்குத் தெரிவித்துவிட்டான்.



இதைக் கேட்டதும், கட்டபொம்மன் கள் குடித்த நரி போலத் துள்ளிக் குதித்தான். தன்னைத் தட்டிக் கேட்க ஆளில்லாததால், தன்னுடைய வெறியாட்டத்தை இன்னும் விரிவாக நடத்தலாம் என்று அவன் துணிவு கொண்டான். கூடிய விரைவில் வரிப்பாக்கியோடு கலெக்டரை நேரில் வந்து பார்ப்பதாக உறுதி கூறி, அவன் வைகுண்டம் பிள்ளையைத் திருப்பியனுப்பி வைத்தான்.

ஒரு மாதம் சென்றது. கட்டபொம்மன் நேரில் வரவும் இல்லை; வரிப்பாக்கியையும் அனுப்பவில்லை. ஜாக்சன் கோபம் கொண்டான். ஆனால், கும்பினி மேலிடம் அவன் கையைக் கட்டிப் போட்டிருந்ததால், வெறும் மிரட்டலைத் தான் அவன் மீண்டும் கடைப்பிடிக்க வேண்டியதிருந்தது.

*1798 மே மாதம் 23-ஆம் தேதியன்று*, கட்டபொம்மனுக்கு அவன் ஒரு கடிதம் எழுதினான். அதில் தனது முந்தைய கடிதங்களுக்குக் கட்டபொம்மன் ஏன் இதுவரை எழுத்து மூலமான பதில் அனுப்பவில்லையென்று கேட்டிருந்ததோடு, வரிப்பாக்கியை உடனடியாகச் செலுத்தாவிட்டால், பாளையம் பறிமுதல் செய்யப்படலாம் என்று ஜாக்சன் பயமுறுத்தியிருந்தான்.

ஆனால், இது வெறும் வீண் மிரட்டலே யென்பதைப் புரிந்துகொண்டு, கட்டபொம்மன் அசட்டையாயிருந்து விட்டான்!

தன் கடிதத்துக்குப் பதில் வராததால், கலெக்டர் ஜாக்சன் மறுபடியும் பதினைந்து நாள் கழித்து கட்டபொம்மனுக்கு ஓர் உத்தரவு அனுப்பினான். அந்தக் கடிதத்தைக் கும்பினியின் போர் வீரர்களான துருவசன், மதாரன் என்னும் இரண்டு அதிகாரிகள் எடுத்துச் சென்றனர்.

"கட்டபொம்மன் தன் நடத்தைகளுக்கான சமாதானத்தை இந்தக் கடிதம் கண்ட பதினைந்து தினங்களுக்குள் கலெக்டர் முன்பு ஆஜராகிச் சொல்ல வேண்டும். அப்படி ஆஜராகா விட்டால், கட்டபொம்மனைக் கையோடு அழைத்து வருவதற்கான அதிகாரம் இந்த அதிகாரிகளுக்கு வழங்கப் பட்டிருக்கிறது. பாக்கி பூராவையும் கட்டபொம்மன் உடனடியாகக் கொண்டுவந்து நேரில் செலுத்த வேண்டும். அப்படிச் செலுத்தாவிடில், கட்டபொம்மன் பாளையக்காரர் பதவியிலிருந்து நீக்கப்பட்டு, அப்பதவிக்கு வேறொருவன் நியமிக்கப்படுவான்!"

இதுவே அந்த உத்தரவின் சாரம்.

இந்த உத்தரவைப் பார்த்ததும், கட்டபொம்மன் நடுங்கிப் போய்விட்டான். வீண் மிரட்டல் இல்லையென்பதை அவன் புரிந்து கொண்டுவிட்டான். ஒரு வேளை கலெக்டர் தன்னைப் பதவி நீக்கம் செய்து உத்தரவிட்டுவிட்டால், நிலைமை விபரீதமாகி விடுமேயென்று அவன் பயமடைந்தான்.

அவனுடையத் தந்தை ஜெகவீரபாண்டிய கட்டபொம்மன் முன்பு ஒருமுறை இவ்வாறு பதவி நீக்கம் செய்யப்பட்டதும் அப்பதவியைத் திரும்பப் பெறுவதற்குள் அவன் பட்டபாடும் வீரபாண்டியனுக்கு வெகு நன்றாய்த் தெரியும். அதுபோலவே தன் கதியும் ஆகிவிட்டால், அப்புறம் தன் பாளையத்து மக்களே தன்னை மதிக்க மாட்டார்கள்; அது மட்டுமல்ல, தனக்குப் போட்டியாக நியமிக்கப்படுகிற புதுப் பாளையக்காரனை அப்பதவியிலிருந்து அகற்றுவதும் அரிதாகிவிடும் என்றெல்லாம் அவன் அச்சமடைந்தான்.

இந்த இக்கட்டான நிலையைச் சமாளிப்பது எப்படியென்று அவன் தீவிரமாக யோசனை செய்தான். கடைசியாக வேறு வழியில்லாமல், இன்னும் ஒரு வாரத்துக்குள் கலெக்டரை நேரில் வந்து பார்த்துத் தகுந்த சமாதானம் சொல்லுவதாகவும், இதுவரையில் ஆகிவிட்ட காலதாமதத்திற்கு மன்னிக்குமாறு கேட்டுக்கொண்டும் கலெக்டருக்கு ஒரு பதில் எழுதி, அதை அந்த அதிகாரிகள் வசமே அனுப்பி வைத்தான். கெஞ்சினால் மிஞ்சுவதும், மிஞ்சினால் கெஞ்சுவதும் தானே பாஞ்சாலங்குறிச்சியானின் பரம்பரைக் கொள்கையாக இருந்து வந்திருக்கிறது?



பதிலைப் பெற்றுக்கொண்ட கலெக்டர் அவன் பணத்தைச் செலுத்தாமல் வெறும் சாக்குப்போக்குகள் சொல்லியனுப்பியதைப் பற்றிக் கோபம் கொண்டான். எனினும் கட்டபொம்மனது கடிதத்தில் காணப்பட்ட பணிவு மனப்பான்மையைக் கருதிச் சற்று ஆறுதல் அடைந்தான்.

கலெக்டர் தன்மீது அவ்வளவாகக் கோபமடைய வில்லையென்பதைத் தன் ஆள்கள் மூலம் அறிந்துகொண்ட கட்டபொம்மன் மறுபடியும் அசட்டையாக இருந்து விட்டான்.

## இராமநாதபுரப் பேட்டி

வாரங்கள் சென்றன. ஆனால் கட்டபொம்மன் தன்னைப் பார்க்க வரவில்லை; பணமும் அனுப்பவில்லை என்று சீற்றம் கொண்டான் கலெக்டர் ஜாக்சன். "தீவிர நடவடிக்கைகள் எடுத்தாலொழிய, இவனை வழிக்கு கொண்டுவர முடியாது" என்று அவன் தீர்மானித்தான்.

கலெக்டர் ஜாக்சன் இந்த விவகாரம் பூராவையும் சென்னையிலிருந்த ரெவின்யூ போர்டுக்கு அவ்வப்போது பல கடிதங்கள் மூலம் தெரிவித்து வந்தான். கடைசியாக அவன் ஒரு கடிதம் எழுதினான். அதில் :

"கட்டபொம்மு தன்மீதுள்ள குற்றங்களுக்குப் பதில் சொல்ல இராமநாதபுரம் வராமல் தட்டிக்கழித்து வருகிறான். சர்க்கார் கிராமங்களிலும் பக்கத்துப் பாளையங்களின் கிராமங்களிலும் திசைக்காவல் என்ற பெயரால், வரப்போகும் ஆண்டுக்கும் கூட முன்கூட்டியே அவன் வரி வசூல்

செய்துவிடுகிறான். ஆனால், கும்பினிக்குச் செலுத்த வேண்டிய பாக்கியை மட்டும் செலுத்தாமல் தவணை சொல்லி வருகிறான்.

பொதுவாக அவனது பாளைய மக்களிடமும் மற்றவர்களிடமும் அவன் பலாத்காரத்தையும் பயன்படுத்தி வருவதாகத் தெரிகிறது. பாஞ்சாலங்குறிச்சியின் பாளையக்காரனாகக் கட்டபொம்முவைத் தொடர்ந்து விட்டு வைத்திருந்தால், இந்தக் குறைகள் மேலும் மேலும் அதிகமாகும். கட்டபொம்முவை அவன் பாளையத்தைவிட்டு வேற்றிடத்தில் கொண்டுபோய் வைத்துவிட வேண்டும். இராமநாதபுரமே அதற்குச் சரியான இடம் என்று கருதுகிறேன். அவன் வர மறுத்தால் அவனைப் பிடித்து வரும் அதிகாரம் எனக்கு அளிக்கப்பட வேண்டும். அத்துடன் என்னுடைய கட்டளைகளுக்கு அவன் கீழ்ப்படியாவிட்டாலும், அவனைப் பாளையக்காரன் பதவியிலிருந்து உடனே நீக்கி விடவும் எனக்கு அதிகாரம் தரப்பட வேண்டும்.

கட்டபொம்மனால் கும்பினியாருக்கு வர்த்தகத் துறையில் தீங்கு நேர்ந்து விடுகிறது. நெசவாளர்களுக்குக் கும்பினி கொடுத்த முன்பணத்தில் பெரும்பகுதியை இவன் சாப்பிட்டு வந்தான். தறி நெய்பவர்கள் எந்த நேரத்திலும் தம் சொத்துக்கள் பறிபோய்விடுமோ என்ற அச்சத்திலேயே வாழ்ந்து வருவதால், கும்பினியின் துணி வியாபாரத்தில் பெரும் தேக்கம் ஏற்பட்டுள்ளது.

இத்தகைய காரணங்களால், பாளையங்கோட்டையில் மேஜர் ஸ்மார்ட் தலைமையில் உள்ள கும்பினிப் படையை, பாஞ்சாலங்குறிச்சி விவகாரத்தில் உடனடியாக ஈடுபடுத்த விசேஷ அதிகாரம் அளிக்க வேண்டுகிறேன்!" என்று கேட்டிருந்தான் கலெக்டர் ஜாக்சன்.

ஆனால், கலெக்டரின் இந்தத் தீவிரத் திட்டத்தைக் கும்பினி ஏற்றுக்கொள்ளவில்லை. மைசூர்ப் போர் முடியும்



வரை வேறு போர் கூடாது என்ற தங்கள் கொள்கையைத் தளர்த்த அவர்கள் அப்போது தயாராயில்லை. பாஞ்சாலங்குறிச்சியான் பணம் கொடுக்கவில்லையென்றால், பின்னால் அவனிடமிருந்து வட்டியும் முதலுமாக வசூலித்துக்கொள்ளலாம்; ஆனால், போர் நடவடிக்கையில் இறங்கிவிட்டால் அது எங்கு கொண்டுபோய் விடுமென்று சொல்ல முடியாதல்லவா? ஆகையால் கலெக்டருக்கு அவர்கள் பின்வருமாறு ஒரு கடிதம் எழுதினார்கள் :

"கலெக்டரின் வேண்டுகோளைத் தீவிரமாக ஆலோசித்த பிறகு சர்க்காரால் அதை அனுமதிக்க இயலவில்லை. மேலும் கலெக்டர் அனுப்பிய எல்லாக் கடிதங்களும் எச்சரிக்கைகளும் கட்டபொம்முவிடம் போய்ச் சேர்ந்தனவா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். அதேபோல், கட்டபொம்மு அனுப்பிய சமாதானங்கள் யாவும் கலெக்டருக்கு வந்து சேர்ந்தனவா என்பதையும் கும்பினி தெளிவுபடுத்திக் கொள்ள விரும்புகிறது.

இதற்கு முதல்படியாக, பாளையக்காரரை நேரில் வரவழைத்துக் கலெக்டர் விசாரணை செய்ய வேண்டும். பிறகு அந்த விவரத்தைக் கும்பினிக்கு எழுத வேண்டும். பாளையக்காரர் நேரில் வராமல் அலட்சியம் செய்வாரானால், கலெக்டர் இராணுவ நடவடிக்கை தவிர மற்ற நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்!"

கும்பினியின் இந்தக் கடிதத்தைக் கண்டதும் கலெக்டர் ஜாக்சனுக்குக் கோபமும் ஏமாற்றமும் ஏற்பட்டன. ஆனாலும் அதன் கடைசி வாசகம் அவனுக்குச் சிறிது அனுகூலமாயிருந்தது. அதன்படி, கட்டபொம்மன் தன்னை நேரில் வந்து சந்திக்க வேண்டுமென்று அவனுக்கு ஓர் இறுதி உத்தரவை அனுப்புவது, அதற்கு அவன் வழக்கம்போல் கீழ்ப்படியாமல் இருந்துவிட்டால், அவனைப் பாளையக்காரன் பதவியிலிருந்து நீக்கி உத்தரவு பிறப்பித்துவிட்டு,

வேறொருவனை அப்பதவியில் நியமித்து விடுவது என்று அவன் திட்டமிட்டான்.

கலெக்டர் ஜாக்சனுக்கு ஆரம்பமுதலே கட்டபொம்மன் மீது வெறுப்பு இருந்து வந்தது. கட்டபொம்மனை எப்படியும் அடக்கியே தீரவேண்டும் என்று அவன் ஆர்வம் கொண்டான். தனக்கு முன்பிருந்த கலெக்டர்களாலும் மற்ற கும்பினி அதிகாரிகளாலும் சாதிக்க முடியாததைத் தான் சாதித்துவிட வேண்டுமென்று அவன் பிடிவாதம் கொண்டான்.

அந்தச் சமயம் ஜாக்சன் ஒரு தாசில்தாரை வரி வசூலுக்காகப் பாஞ்சாலங்குறிச்சிக்கு அனுப்பியிருந்தான். அவனை உடனே இராமநாதபுரத்திற்குத் திரும்பி வருமாறு அவன் கட்டளையிட்டான். அதன் பிறகு, 1798, ஆகஸ்டு 18-ஆம் நாளன்று, ஜாக்சன் துரை கட்டபொம்மனுக்கு ஓர் உத்தரவு அனுப்பினான். "செப்டம்பர் 5-ஆம் தேதிக்குள் கட்டபொம்மன் இராமநாதபுரம் வந்து கலெக்டரின் கச்சேரியில் நேரில் ஆஜராக வேண்டும். ஆஜராகாவிட்டால் அவன் அழிவு நிச்சயம். இது சென்னையிலுள்ள மேலிடத்தின் உத்தரவு!" என்று அதில் எழுதப்பட்டிருந்தது.

வரிப் பாக்கியைப்பற்றியோ பிற விஷயங்களைப் பற்றியோ அதில் ஏதும் குறிப்பிடப்படவில்லை.

இந்தக் கடிதம் கட்டபொம்மனுக்குக் கிடைத்ததும் இராணுவ நடவடிக்கை இல்லாமலேயே கலெக்டர், தன்னைப் பணியவைக்க முடியும் என்ற உண்மையைக் கட்டபொம்மன் முதன் முதலாக உணரலானான். காரணம், கும்பினி மேலிடத்திலிருந்து கலெக்டருக்கு அனுப்பப்பட்ட கடிதம் பற்றிய அந்தரங்கத்தை, தூத்துக்குடியிலிருந்த டேவிசன் அதே சமயம் கட்டபொம்மனுக்கு வேறொரு கடிதத்தின் மூலம் தெரிவித்திருந்தான்.

தன்னுடைய பாளையத்தைப் பறிமுதல் செய்து ஜாக்சன் அதை வேறு யாருக்காவது கொடுத்துவிடக் கூடும் என்ற



பெரும்பீதி கட்டபொம்மனுக்கு ஏற்பட்டுவிட்டது. அதை எப்படியாவது தவிர்த்தாக வேண்டும் என்ற கவலையில், கும்பினியின் உத்தரவுக்கு அவன் உடனே கீழ்ப்படியத் தொடங்கிவிட்டான். கலெக்டரைப் பேட்டி காணப் போவதற்குரிய ஏற்பாடுகளை அவன் உடனடியாகச் செய்ய ஆரம்பித்தான்.

இந்தத் தகவலைப்பற்றித் தி.நா.சு. அவர்கள் எழுதுகிறார்:

"இந்தக் கடிதத்தைக் கட்டபொம்மு அலட்சியம் செய்யவில்லையென்றே தெரிகிறது. அவர் கலெக்டரைக் காணப் புறப்பட்டு வந்தார்." - (கட்டபொம்மு; பக்கம் 103)

வெள்ளையனுக்கு அடிமைப்படாத ஒரு சுதந்திர அரசுக்கு அதிபதியாக இருந்திருந்தால், கட்டபொம்மன் கலெக்டரைக் காணப் போயிருக்க வேண்டியதில்லை. கலெக்டரின் ஆணையை அவன் ஆண்மையுடன் மறுத்து நின்றிருக்கலாம். அவன் என்றுமே கும்பினிக்கு வரி செலுத்தாதவனாக இருந்தால், புதிதாக வந்து வரி கேட்பவர்களிடம் கொடுக்க முடியாது என்று உறுதியுடன் கூறியிருக்கலாம். அவன் எழுதியுள்ள எந்த ஒரு கடிதத்திலும், கட்டபொம்மன் ஆங்கிலக் கும்பினியின் மேலாதிக்கத்தை எதிர்க்கவில்லை; வரி கொடுக்க முடியாது என்றும் சொல்ல வில்லை. அதற்கு மாறாக, வரி செலுத்துவதற்கு தவணைகள் தாம் கேட்டிருக்கிறான்; அல்லது சாக்குப்போக்குகள் சொல்லி வந்திருக்கிறான்.

வீரபாண்டிய கட்டபொம்மன் கலெக்டரைப் பேட்டி காணப் புறப்பட்ட நிகழ்ச்சியை, மற்ற நிகழ்ச்சிகளைப் போல் ம.பொ.சி. அவர்களால் இருட்டடிப்புச் செய்ய முடியவில்லை. ஆகவே, அதைப்பற்றிக் கீழ்க்கண்டவாறு எழுதி அவர் சமாளிக்க முயன்றிருக்கிறார் :

"கம்பெனியின் வரி வசூலிக்கும் கலெக்டரான ஜாக்சன்

என்பான், ஒரு வாரத்திற்குள் தனது இருப்பிடம் வந்து தன்னைக் கண்டு பேசவேண்டுமென, இரு தூதுவர் மூலம் கட்டபொம்மனுக்குச் செய்தியனுப்பினான். செய்திப்படி நடக்க வீரபாண்டியனுக்கு மனமில்லை. ஆயினும், சுற்றிலுமுள்ள பாளையக்காரர்களெல்லாம் ஆங்கிலேயருக்கு அடிமைகளாகி விட்டதால், கலெக்டரைப் பார்ப்பதன் மூலம் பகைமையைக் குறைக்கலாமென நம்பினான்... 1798-ஆம் ஆண்டு ஆகஸ்டு 24-ஆம் தேதி, தளபதிகள் முன் செல்ல, தம்பிமார் புடைசூழக் கலெக்டரைக் காணத் திருநெல்வேலி சென்றான் வீரபாண்டியன்" - (ம.பொ.சி. "வீரபாண்டியக் கட்டபொம்மன்" - பக்கம் 17, 18)

செப்டம்பர் மாதம் 5-ஆம் தேதிதான் கட்டபொம்மனை இராமநாதபுரம் வந்து தன்னைப் பார்க்கும்படி கலெக்டர் உத்தரவு போட்டிருந்தான். ஆனால், அதுவரை தாமதம் செய்தால்கூட விபரீதமாகிவிடலாம் என்று அஞ்சினான் கட்டபொம்மன். அதற்குள்ளாகவே கலெக்டரைக் கண்டுவிட அவன் துடிதுடித்தான்.

கலெக்டரோ, செப்டம்பர் 5-ஆம் தேதிக்குள் கட்டபொம்மனைச் சந்திப்பதில்லையென்று முடிவு செய்தான். ஆகையால், கட்டபொம்மனுக்கு உத்தரவு அனுப்பிய மூன்று நாள்களுக்கெல்லாம், அவன் இராமநாதபுரத்தை விட்டுத் திருநெல்வேலிச் சீமைக்குப் புறப்பட்டுப் போய்விட்டான்!

சமாதானமாய்ப் போவதற்கு எவ்வளவோ வாய்ப்புகள் வந்தபோதெல்லாம் தட்டிக் கழித்துவிட்ட கட்டபொம்மன் இப்போது கலெக்டர் இராமநாதபுரத்திலில்லை என்பது தெரிந்ததும், அவரை எங்கேனும் ஒரு "காம்பி"ல் பார்த்தாவது சமாதானம் செய்துகொள்ள வேண்டும் என்று துடிப்புற்றான். எனினும், தனியே சென்றால் தனக்கு ஏதேனும் ஆபத்து வரக்கூடுமோ என்ற அச்சத்தில், அவன் தன்னுடைய படைவீரர்கள் நாலாயிரம் பேரைத் துணையாக அழைத்துச்



இந்தப் பேட்டி பற்றிய விவரங்கள் அரசாங்க ரிக்கார்டுகளில் விரிவாக எழுதப்பட்டிருக்கின்றன. அதைத் தவிர அந்தக் காலத்தில் வாழ்ந்த சிலரது குறிப்புகளிலும் அவை நிரம்ப இடம் பெற்றிருக்கின்றன. ஆனால் அவற்றிற்கெல்லாம் மாறாக, கட்டபொம்மன் ஆதரவாளர்கள் இந்த இராமநாதபுரப் பேட்டியை அவனது வீரத்திற்கும், தீரத்திற்கும் ஓர் எடுத்துக்காட்டாகத் திரித்துக் கூற முயன்றிருக்கிறார்கள். ஆனால் அவர்களாலும் பல இடங்களில் உண்மையை மறைக்க முடியவில்லை.

அக்காலத்துக் கவிஞர் ஒருவர், இந்நிகழ்ச்சிகள் பற்றி ஒரு சிந்து பாடியிருக்கிறார். அதற்கு இராமநாதபுரப் பேட்டியென்று பெயர், புத்தக வடிவில் இன்னும் வெளிவராத இந்த ஏட்டுச் சுவடியில், அந்தப் பேட்டியை ஆதிமுதல் இறுதிவரை நன்கு விவரித்திருக்கிறார் அக்கவிஞர்.

கலெக்டர் ஜாக்சன் திருநெல்வேலிக்கு வந்திருக்கிறான் என்று கேள்வியுற்ற கட்டபொம்மன், தன் பரிவாரங்களுடன் முதலில் திருநெல்வேலி போய்ச் சேர்ந்தான். இவ்வளவு நாள் வீராப்போடிருந்துவிட்டு, இப்போது பணிந்து வந்திருக்கும் தன்னைக் கலெக்டர் மிகவும் பரிவோடு வரவேற்பார் என்று அவன் கனவு கண்டான். ஆனால் கலெக்டர் கண்டிப்பாக அவனை அங்குக் காண முடியாது என்று கூறிவிட்டு, குற்றாலத்திற்குப் புறப்பட்டுப் போய்விட்டான்.

கட்டபொம்மனுக்கு இது ஒரு பெருத்த ஏமாற்றமாகவும், அவமானமாகவும் இருந்தது.

கலெக்டரைப் பார்க்காமல் பாஞ்சாலங்குறிச்சிக்குத் திரும்புவதற்கும் அவனுக்குத் துணிவு பிறக்கவில்லை. ஆகவே, அவன் தன் பரிவாரங்களையும் அழைத்துக் கொண்டு திருக்குற்றாலத்தை நோக்கிப் புறப்பட்டான். நாம் முன்னே குறிப்பிட்ட அந்தச் சிந்துப் பாட்டிலே, கட்டபொம்மனது அப்போதைய மனநிலையை விளக்குவதாக அமைந்துள்ள இரண்டு கண்ணிகள் இருக்கின்றன. அதாவது,

''கண்டசனங்கள் நீர் எங்கே போகிறீர் என்று
கண்டிப்பாய் கேட்டவர் தங்களுக்கு,
எண்டிசை போற்றிடும் குற்றால நாதரை
இப்போ தரிசிக்கப்போகிறோ மென்று,
சொல்லுங்கள் என்று கட்டபொம்மு
செல்லத்துரை வழி காட்டினராம்;
வில்லுங் கையுமாக ஊமைத்துரை தானும்
வேங்கைப் புலிபோல் நடந்தனராம்!''

குற்றாலத்துக்குக் கலெக்டரைத் தொடர்ந்து போவதாய்ச் சொல்லுவதற்கு வெட்கமுற்றவனாய்க் கட்டபொம்மன் குற்றாலநாதரைத் தரிசிக்கச் செல்வதாய்க் கேட்டவர்களுக் கெல்லாம் பதில் அளிக்குமாறு தன் பரிவாரங்களுக்கு உத்தரவிட்டானாம்!

ஆகஸ்டு 31-ஆம் தேதியன்று கட்டபொம்மன் குற்றாலம் போய்ச் சேர்ந்தான். ஆனால் ஜாக்சன் அவனை அங்கேயும் பார்க்க மறுத்துவிட்டான். தான் அவசரமாகச் சொக்கம் பட்டிக்குச் செல்வதாகவும், கட்டபொம்மன் தன்னை அங்கு வந்து பார்க்கலாமென்றும், ஜாக்சன் தன் துபாஷி மூலம் சொல்லியனுப்பிவிட்டான்.

இந்தப் பதிலைக் கேட்டதும், கட்டபொம்மன் சஞ்சலமடைந்தான். நாள் நெருங்க நெருங்க, கலெக்டரைப் பேட்டி காண்பதில் அவனுக்கு இருந்த அவசர மனப்பான்மையும் அதிகரித்தது. எனவே, குற்றாலத்துக்குப் பன்னிரண்டு மைல் தொலைவிலிருந்த சொக்கம்பட்டிக்கும் அவன் கலெக்டரைத் தொடர்ந்து செல்லலானான்!

சொக்கம்பட்டி போய்ச் சேர்ந்ததும், கட்டபொம்மனும் தானாபதி பிள்ளையும் கலெக்டரின் துபாஷியாயிருந்த விசுவநாத பிள்ளையென்பவனைத் தனிமையில் சந்தித்துப் பேசினார்கள். கலெக்டரிடம் சொல்லி எப்படியாவது சொக்கம்பட்டியிலேயே பேட்டிக்கு ஏற்பாடு செய்து



வைக்குமாறு அவர்கள் விசுவநாதபிள்ளையைக் கேட்டுக் கொண்டார்கள். விசுவநாதபிள்ளையும் அப்படியே செய்து விடுவதாக உறுதி கூறிச் சென்றான்.

ஆனால் கலெக்டர் ஜாக்சனிடம் விசுவநாத பிள்ளையின் பேச்சு எடுபடவில்லை. கட்டபொம்மனுக்கு இராமநாத புரத்தில்தான் பேட்டியளிக்க முடியும் என்று அவன் கண்டிப்பாகச் சொல்லிவிட்டான். ஒன்று, கட்டபொம்மன் நேரே இராமநாதபுரத்துக்குச் சென்று, தன் வருகைக்காக அங்கே காத்திருக்க வேண்டும்; அல்லது, தான் இராமநாதபுரம் போய்ச் சேருகிறவரையில், தன் பின்னாலேயே அவன் வந்து கொண்டிருக்க வேண்டும்! இவ்விரண்டிலொன்றைச் செய்யத் தவறினால், கட்டபொம்மனிடமிருந்து அவனுடைய பாளை யத்தைப் பறிமுதல் செய்துவிடுவதாகப் பயமுறுத்தினான் ஜாக்சன் துரை.

கட்டபொம்மன் கலக்கமடைந்தான். வரவரச் சிக்கல் அதிகமாகிறதேயெனக் கவலை கொண்டான். மற்றப் பாளையக்காரர்களின் எதிரில் கலெக்டர் தன்னை வேண்டு மென்றே அவமானப்படுத்த விரும்புகிறான் என்பதை அவன் புரிந்துகொண்டான். எனினும் கலெக்டரின் கட்டளையை மீற அவனுக்குத் தைரியம் ஏற்படவில்லை.

"முக்கியமாக, சொக்கம்பட்டி எனக்குப் பகையான ஒரு பாளையம். இங்கு நான் கலெக்டரைத் தொடர்ந்து வந்ததே, கும்பினியின் கட்டளையை மதிக்க வேண்டுமென்பதற்காகத் தான். எனக்கு இங்கேயே பேட்டியளித்து விட்டால், என் கௌரவம் ஓரளவு காப்பாற்றப்படும். அப்படி இயலாவிட் டால், கலெக்டர் குறிப்பிடும் வேறொரு நாளில் இராமநாத புரத்தில் வந்து பார்க்கிறேன். எனக்கு இப்போது சற்று உடல்நலக் குறைவாயிருப்பதால், நான் உடனடியாகப் பாஞ்சாலங்குறிச்சிக்குத் திரும்பிச் செல்ல அனுமதியளிக்க வேண்டுகிறேன்!" என்றெல்லாம் கெஞ்சிக் கெஞ்சி அவன் கலெக்டருக்குக் கடிதம் எழுதினான். ஆனால் கல்மனம்

கொண்ட ஜாக்சன், அவனுடைய வேண்டுகோள் எதற்குமே இணங்க மறுத்துவிட்டான்.

நான் கலெக்டரைப் பேட்டி காண முயன்றதற்கு அத்தாட்சியாக, கலெக்டரிடமிருந்து ஏதாவது ஓர் எழுத்து மூலமான பதிலைப் பெற்றுவிட்டால் அது தனக்குப் பிற்பாடு பாதுகாப்பாக உதவும் என்று எண்ணினான் கட்டபொம்மன். ஆனால் ஜாக்சன் அதற்கும்கூட இடம் கொடுக்காமல் விழிப்போடிருந்துவிட்டான். கட்டபொம்மனுக்கு அவன் எழுத்து மூலம் எதுவுமே தரவில்லை.

கடைசியாக, கட்டபொம்மனுக்குத் தன்னுடைய முகாமில் பேட்டிதர முயற்சி செய்வதாக, ஜாக்சன் சொல்லியனுப்பினான். வேறு வழியின்றி, கட்டபொம்மன் அதற்குச் சம்மதித்துத் தன் பரிவாரங்களோடு ஜாக்சனைப் பின்தொடர்ந்து சென்றான்.

ஜாக்சனின் அடுத்த முகாம் சேத்தூர். இந்தச் சேத்தூரின் பாளையக்காரரையும் அவரது குடும்பத்தினரையும் கட்டபொம்மன் படுகொலை செய்தவன் அல்லவா! அந்த நிகழ்ச்சியை நினைவில் வைத்துக்கொண்டே ஜாக்சன் தன் முகாமைச் சேத்தூருக்கு மாற்றினான்.

அதே காரணத்தால் கட்டபொம்மனும் சேத்தூருக்குச் செல்லத் தயங்கினான். அந்தப் பாளையத்து மக்கள் தன்னையும் தன் பரிவாரங்களையும் தாக்க வருவார்களோ என்று அஞ்சினான். எனினும், கலெக்டரோடு போகும்போது அத்தகைய ஆபத்து எதுவும் தனக்கு நேராது என்று அவன் தைரியம் கொண்டான்.

சேத்தூரில் கட்டபொம்மன் தன் கூடாரத்தைவிட்டு வெளி வரவேயில்லை; தன் ஆள்களையும் ஊருக்குள் செல்ல வேண்டாமென்று அவன் தடுத்துவிட்டான். கலெக்டர் அவனுக்கு அங்கேயும் பேட்டி தரவில்லை! அவனது இழிநிலையைக் கண்டு சேத்தூர் மக்கள் எள்ளி நகையாடினார்கள்.



கட்டபொம்மன் அட்டகாசமும் அட்டூழியமும் புரிந்த இடங்களுக்கெல்லாம் அவனை இழுத்துச் சென்று, ஆங்காங்கு உள்ள மக்களின் ஏளனத்துக்கு அவனை ஆளாக்க வேண்டும் என்பதே ஜாக்சனின் அந்தரங்க ஆசை! ஆகவே அவன் தன் அடுத்த முகாமாகச் சிவகிரியைத் தேர்ந்தெடுத்தான்!

சிவகிரியென்றதுமே கட்டபொம்மனுக்குக் குளிர்சுரம் வந்துவிட்டது! அவனால் கொடுமை இழைக்கப்பட்ட கிழவர் அல்லவா அங்குப் பாளையக்காரராக இருக்கிறார்? அவரால் தனக்கு யாது தீங்கு நேருமோ என்று அவன் அஞ்சி நடுங்கினான். கலெக்டரின் சொல்லைத் தட்டி, அவரைப் பின்தொடராமல் ஊர் திரும்புவதற்கும் அவனுக்குத் துணிவு வரவில்லை. இத்தகைய தொடைநடுங்கியைத்தான் சூரன், தீரன் என்றெல்லாம் போற்றுகிறது ஒரு கூட்டம்! இதைவிட மோசடி வேறு ஏதாவது உண்டா?

சிவகிரிப் பாளையக்காரர் கலெக்டரை வரவேற்று ஊருக்குள் அழைத்துச் சென்று உபசரித்தார். ஆனால் கட்டபொம்மனோ அவனது ஆள்களோ சிவகிரிக்குள் நுழையக்கூடாது என்று அவர் கண்டிப்பாகச் சொல்லி விட்டார். கலெக்டரும் அதை ஆமோதித்தான்.

ஊர்ப்புறத்திலே ஒதுக்கித் தள்ளப்பட்ட கட்டபொம்மனுக்குச் சிவகிரியில் பேட்டி கிடைக்க வாய்ப்பே இல்லாமல் போய்விட்டது. இதற்குள் செப்டம்பர் 4-ஆம் தேதியும் வந்துவிட்டது. எனவே, மறுநாள் நிச்சயம் தனக்குப் பேட்டி கிடைத்துவிடும் என்று நம்பினான் கட்டபொம்மன். அதுவரை தனக்கு என்ன அவமானங்கள் நேர்ந்தாலும் பொறுத்துக் கொள்வதென்று அவன் தன் மனதை உறுதிப்படுத்திக் கொண்டான்.

சேத்தூரிலும் சிவகிரியிலும் கட்டபொம்மனைப் பெட்டிப் பாம்பாக அடக்கிவிட்ட ஜாக்சன், அவனை இன்னும் அவமானப்படுத்த வேண்டுமென்பதற்காகத் தன் அடுத்த முகாமை ஸ்ரீவில்லிபுத்தூருக்கு மாற்றினான்!

ஸ்ரீவில்லிபுத்தூரில் கட்டபொம்மனும் அவன் ஆள்களும் பல கொள்ளைகளையும், கொலைகளையும் நடத்தியிருக்கிறார்கள். எனவே இப்போது அங்குப் பகல் நேரத்தில் போவதற்கு அவன் பயமடைந்தான். இருந்தாலும் கலெக்டர் போகும்போது அவனால் போகாமலிருக்க முடியவில்லை. கலெக்டரோடு செப்டம்பர் 5-ஆம் தேதி அன்று அவன் ஸ்ரீவில்லிபுத்தூர் போய்ச் சேர்ந்தான்.

அன்றுதான் கலெக்டரை அவன் இராமநாதபுரத்தில் வந்து சந்திக்க வேண்டுமென்று உத்தரவிடப்பட்டிருந்த கெடுவு நாளாகும். எனவே, கலெக்டர் முகாமிட்டிருந்த கூடாரத்துக்கு வெளியே கட்டபொம்மனும் தானாதிபதிப் பிள்ளையும் வந்து சேர்ந்தார்கள். கலெக்டர் கூடாரத்துக்குள் இருந்துகொண்டு, தன் துபாஷியை மட்டும் வெளியே அனுப்பினான்.

அவனிடம் கட்டபொம்மன் மிகவும் குழைந்து குழைந்து பேசினான்.

"நீங்கள் பெரிய மனது வைத்துக் கலெக்டரிடம் சொல்லி இந்த ஊரிலேயே எனக்குப் பேட்டி தர ஏற்பாடு செய்ய வேண்டும். கும்பினியார் தந்த கெடு இன்றோடு முடிகிறது!"

அதற்குத் துபாஷி தந்த பதில் :

"கலெக்டர் துரை இப்போது கடுஞ்சினத்தோடு இருக்கிறார். ஆகையால் அவரை நீங்கள் இப்போது பேட்டி கண்டால், அது உங்களுக்கு நன்மையாக முடியாது. அடுத்த முகாமில் உங்கள் காரியத்தை நான் கட்டாயம் முடித்து வைக்கிறேன். கெடுவுத் தேதியைத் தள்ளிப்போடக் கலெக்டர் சம்மதித்து விட்டார். அவரை இன்று நீங்கள் பார்க்க வந்ததையும், தொடர்ந்து வந்து கொண்டிருப்பதையும் அவரிடம் நான் தெரிவித்து விடுகிறேன்!"

ஸ்ரீவில்லிபுத்தூரில் கட்டபொம்மன் பட்ட அவமானம் ஊரெங்கும் பரவிவிட்டது. இப்படி அடுத்தடுத்து அவனை அவமானப்படுத்தினால், அவன் ரோஷம் தாங்காமல் தன் பாளையத்துக்குத் திரும்பிப் போய்விடுவான்; அப்படிப் போய்விட்டால், அதையே சாக்காக வைத்துக்கொண்டு, அவனைப் பாளையக்காரன் பதவியிலிருந்து நீக்கிவிடலாம் என்பது ஜாக்சன் துரையின் உள்நோக்கம். ஆனால் கட்டபொம்மன் அதற்கு இடம் கொடுக்கவில்லை. மானம் போனாலும் பரவாயில்லை, தன் பதவி போய்விடக்கூடாது என்று அவன் உறுதியாய் நின்றான். ஆகையால், வெட்கத்தை விட்டொழித்துவிட்டு, கலெக்டர் சென்ற இடம் எல்லாம் வளர்கிடாய்க் குட்டிபோல அவனும் பின்னாலேயே போய்க் கொண்டிருந்தான்.



ஸ்ரீவில்லிபுத்தூரைவிட்டுப் பேரையூர் என்னுமிடத்துக்குக் கலெக்டர் முகாம் சென்றான். கட்டபொம்மனும் கூடவே சென்றான். அங்கும் பழைய கெஞ்சல்தான்; பழைய பதில்தான்!

அடுத்தபடியாக, ஜாக்சன் பவாலில் முகாமிட்டான். கட்டபொம்மன் அங்கும் சென்று கூடாரமடித்தான். அந்தக் கூடாரத்தில் அவன் தங்கி இளைப்பாறுவதற்குள், கலெக்டர் அடுத்த ஊருக்குப் புறப்பட்டுவிட்டான்! உடனே கட்டபொம்மனும் அவசர அவசரமாகத் தன் மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொண்டு பின் தொடர்ந்தான்.

கலெக்டர் பள்ளிமடையில் முகாமிட்டான். அந்த ஊரிலாவது கலெக்டரைக் கண்டு பேசலாமென்று அரும்பாடுபட்டான் கட்டபொம்மன். ஆனால் கலெக்டர் இன்று நாளையென்று சால்ஜாப்புச் சொல்லிக்கொண்டே அடுத்த ஊருக்குப் புறப்பட்டுவிட்டான்.

அடுத்த ஊர் கமுதி. இங்கும் பழைய பல்லவிதான்! கட்டபொம்மன் தான் ஊரிலிருந்து புறப்பட்டு வந்து நெடுநாளாகிவிட்டதென்று கூறி, கலெக்டருக்கு ஒரு கருணை மனுப் போட்டான்.

"இராமநாதபுரத்திற்குப் போய் நிச்சயம் பேட்டி தருகிறேன்" என்று பதில் அனுப்பிவிட்டு, கலெக்டர் அன்றைக்கே கமுதியை விட்டுப் புறப்பட்டான்.

**இராமநாதபுரம் பேட்டி - 2**

கடைசியாக, 1798 செப்டம்பர் 9-ஆம்தேதி மாலை, கலெக்டர் ஜாக்சன் இராமநாதபுரம் போய்ச் சேர்ந்தான். அவன் பின்னாலேயே கட்டபொம்மனும் போய்ச் சேர்ந்தான்.

இராமநாதபுரத்தில், கட்டபொம்மன் தன் ஆள்களுடன் கோட்டைக்கு வெளியே கூடாரமடித்துத் தங்கினான்.

மறுநாள், அதாவது, செப்டம்பர் 10-ஆம் தேதியன்று கலெக்டரின் கச்சேரியில் கட்டபொம்மனுக்குப் பேட்டியளிக்கப்படுமென்று அறிவிக்கப்பட்டது.

இதை ராகவய்யா என்ற அரிகாரன் கட்டபொம்மனிடம் வந்து சொல்லிப்போனான்.

கட்டபொம்மன் மகிழ்ச்சியடைந்தான். மறுநாள் காலை பத்து மணிக்கு, தம்பிமார், மைத்துனர், தானாதிப்பிள்ளை ஆகியோரையும் உடனழைத்துக்கொண்டு, அவன் கலெக்டரைக் காணப் புறப்பட்டுச் சென்றான்.

கட்டபொம்மனும் அவனது துணைவர்களும் கோட்டைக்குள் பிரவேசித்தனர். கோட்டைக்குள்ளே அரண்மனையிலுள்ள மெத்தை வீட்டுக்கு அவர்கள் அழைத்துச் செல்லப்பட்டனர்.

கட்டபொம்மன் தான் வழக்கமாகக் கலெக்டரைப் பார்ப்பது அரண்மனையின் வடக்குப் பக்கத்திலுள்ள இராமலிங்க விலாசம் என்னும் மாளிகையில்தானே என்ற கேள்வியை எழுப்பினான். கச்சேரியின் கீழ்ப்பகுதி பழுதடைந்திருப்பதால் மேல்மாடியில் கலெக்டர் பேட்டியளிக்கக் காத்திருப்பதாக அவனுக்குப் பதில் அளிக்கப்பட்டது.



கட்டபொம்மனும் அவன் துணைவர்களும் அந்த மாடிக் கட்டடத்தை அடைந்தார்கள். அப்போது அங்குக் காவல் புரிந்த கும்பினிச் சேவகர்கள் அவனை அணுகி, கட்டபொம்மனுடன் அவனுடைய தம்பிமார், தானாதிப்பிள்ளை ஆகியோர் மட்டுமே மாடிக்கு வரலாமென்று கலெக்டர் உத்தரவிட்டிருப்பதாகத் தெரிவித்தனர். இதனால் அவனுடைய மைத்துனர் முதலியோர் வெளியே தங்கும்படி ஆகிவிட்டது!

கடைசியாக, கட்டபொம்மன் ஆவலோடு எதிர்பார்த்திருந்த கலெக்டரின் பேட்டி அவனுக்குக் கிடைக்கலாயிற்று.

கலெக்டர் ஜாக்சன் கட்டபொம்மனை முகமலர்ச்சியுடன் வரவேற்றான். அவனது க்ஷேமலாபங்களை விசாரித்துவிட்டு, "என்னுடைய உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து நீர் என்னை வந்து பார்த்ததற்காக நான் மகிழ்ச்சியடைகிறேன்!" என்றான் ஜாக்சன்.

கட்டபொம்மன் தனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்டு, கலெக்டரின் பேட்டி கிடைத்ததற்குத் தான் மிகவும் மகிழ்ச்சியடைவதாகக் கூறினான். தன்னுடைய தாயாருக்கு உடல் நலமில்லாதிருந்தமையாலேயே தான் கலெக்டரை வந்து பார்ப்பதில் அவ்வளவு காலதாமதம் ஏற்பட்டதென்றும், அதன் பொருட்டுத் தன்னை மன்னிக்குமாறு வேண்டிக்கொள்வதாகவும் அவன் கலெக்டரிடம் பணிவோடு எடுத்துரைத்தான். கடைசியாக, தன் மீது இதுவரையில் கும்பினிக்கு இருந்துவந்த சந்தேகங்கள், கோபதாபங்கள் யாவும் தீர்ந்துவிடுமெனத் தான் உறுதியாக நம்புவதாகவும் அவன் வினயமாகத் தெரிவித்துக் கொண்டான்.

பிறகு, கலெக்டர் கிஸ்திப் பாக்கியைப் பற்றிக் கேட்டான். தான் செலுத்த வேண்டிய தொகை முழுவதையும், தன்னோடு கையில் கொண்டுவந்திருப்பதாகக் கட்டபொம்மன் பதிலளித்தான்.

கலெக்டருக்கும், கட்டபொம்மனுக்கும் நடந்த இந்த உரையாடல்களின் முழு விவரம், அப்போதே எழுதி

வைக்கப்பட்டுள்ளது. அந்த ரிக்கார்டுகளிலிருந்து, அவ்விருவரும் என்னென்ன பேசிக்கொண்டார்கள் என்பது இன்றைக்கும் நமக்குத் தெளிவாகக் காணக் கிடைக்கிறது.

கிஸ்திப் பணம் முழுவதையும் கொண்டுவந்து கட்டிவிட்டால், கும்பினியின் மன்னிப்பை நிச்சயமாகப் பெற்றுவிடலாம் என்று கட்டபொம்மனுக்கு டேவிசன் யுக்தி சொல்லிக் கொடுத்திருந்தான். அதன்படியே பணத்தோடு வந்திருந்தான் கட்டபொம்மன்.

ஆனால், கட்டபொம்மன் பக்தர்கள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? கலெக்டர் ஜாக்சன் கிஸ்திப் பாக்கியைக் கேட்டபோது,

"வானம் பொழியுது, பூமி விளையுது,
மன்னவன் காணிக்கு ஏது கிஸ்தி?"

என்று அவனைத் திருப்பிக் கேட்டானாம் கட்டபொம்மன்! இப்படியே சினிமாவிலும், நாடகத்திலும் அவர்கள் காட்டுகிறார்கள். உண்மையைத் திரித்துக்கூறி, பொய்ம்மையைப் பெருக்கிக் காட்டி, கோழையை வீரனாகவும், பணிந்து போனவனை வணங்காமுடியனாகவும் போலிச் சித்திரங்கள் தீட்டி மக்களை ஏமாற்றிவரும் இந்தப் பாஞ்சாலங்குறிச்சிப் பக்தர்களை என்னவென்று சொல்வது!

வரிப்பணம் செலுத்தாமையைக் காரணமாகக் காட்டிக் கட்டபொம்மனை மடக்கிவிடலாம் என்று மனப்பால் குடித்துக்கொண்டிருந்த ஜாக்சன் துரைக்கு, அவன் "பணத்தோடு வந்திருக்கிறேன்!" என்று பதிலிறுத்தது பெருத்த ஏமாற்றத்தை அளித்தது. எனவே, அடுத்தபடியாக அவனது அத்துமீறிய செயல்கள் பற்றி விசாரிக்கத் தொடங்கினான் ஜாக்சன்.

சர்க்கார் கிராமங்களில் புகுந்து குழப்பம் ஏற்படுத்தி வருவதாகக் கட்டபொம்மன் மீது கூறப்பட்டிருந்த புகாரைப்



பற்றிக் கலெக்டர் கேட்டான். இதை எதிர்பார்த்திருந்த கட்டபொம்மன் தான் அவ்விதம் எதுவுமே செய்யவில்லையென்றும், தன்னால் யாருக்கேனும் துன்பம் நேர்ந்ததாக நிரூபணம் செய்யப்படுமானால், அதற்கான பொறுப்பை ஏற்று நஷ்டஈடு தரத் தயாராயிருப்பதாகவும் மிகப் பணிவோடு பதில் சொன்னான்.

இதைக் கேட்டதும், ஜாக்சன் வியப்படைந்துவிட்டான். கட்டபொம்மன் பற்றி டேவிசன் தந்த கருத்தே சரியென்று எண்ணினான். கும்பினியின் கையாளாக இருக்கத் தகுந்த ஒருவனைப் பகைவனாக்கப் பார்த்த தம் மடமையை எண்ணி அவன் மன ஆயாசம் கொண்டான். கும்பினியாரும் தானும் கட்டபொம்மனை சரிவரப் புரிந்துகொள்ளாமல் ஒரு தவறான முடிவுக்கு வந்திருந்தது பற்றி, தான் மிகவும் வருந்துவதாகத் தெரிவித்தான். இந்த வார்த்தையைக் கேட்டு உச்சி குளிர்ந்தான் கட்டபொம்மன்!

அப்போது, சென்னைக் கும்பினியார் தம் கடிதத்தில் குறிப்பிட்டிருந்த ஒரு விஷயம் ஜாக்சனுக்கு நினைவு வந்தது. அதாவது, கலெக்டர் அதுவரையில் கட்டபொம்மனுக்கு எழுதிய கடிதங்களையும், அவற்றிற்கு அவன் எழுதிய பதில் கடிதங்களையும், அவனுக்குப் படித்துக் காட்டுமாறும்; அவை பற்றி அவன் ஏதேனும் திருத்தமோ விளக்கமோ தர விரும்பினால் அதை வாங்கி மேலிடத்துக்கு அனுப்புமாறும் கும்பினியார் கலெக்டருக்கு உத்தரவிட்டிருந்தார்கள். அதன்படி ஜவாப் நவீஸ் என்ற மொழி பெயர்ப்பாளனைக் கூப்பிட்டு, அக்கடிதங்களையெல்லாம் கொண்டுவரும்படி கலெக்டர் கட்டளையிட்டான்.

தான் எழுதிய கடிதங்கள் யாவும் வந்து சேர்ந்தனவா என்று கலெக்டர் கட்டபொம்மனைக் கேட்டான். தனக்குப் பல கடிதங்கள் வந்தனவென்றும்; அவற்றிற்கெல்லாம் வாய்ச்சொல் மூலமும் கடிதங்கள் மூலமும் பதில் அனுப்பியிருப்பதாகவும்; அவை பற்றி இப்போது ஞாபகம் இல்லை

யென்றும்; ஆனால், கலெக்டர் அனுப்பிய எல்லாக் கடிதங்களும் தனக்கு வந்து சேர்ந்தனவா என்பதைத் தன்னால் உறுதியாகச் சொல்ல முடியாது என்றும் கட்டபொம்மன் கூறினான்.

அதன்மேல், தன்னுடைய கடித நகல் யாவற்றையும் கட்டபொம்மனுக்குப் படித்துக் காண்பிக்கும்படி கலெக்டர் உத்தரவிட்டான்.

கடிதங்கள் ஒவ்வொன்றாகப் படிக்கப்பட்டன. அவற்றைப் படிக்கப்படிக்க, கட்டபொம்மனுக்கு வயிற்றைக் கலக்கியது. கடித்து முடிந்ததும், "நான் ஊருக்குத் திரும்பிச் செல்லலாமா?" என்று அவன் கலெக்டரைக் கேட்டான்.

தான் எழுதிய கடிதங்களையே மறுபடியும் படிக்கச் சொல்லிக் கேட்கும்போது, கலெக்டர் ஜாக்சனுக்கு மீண்டும் கட்டபொம்மன் மீது உள்ளூரச் சிறிது ஆத்திரம் ஏற்பட்டது. அவன் சொன்னான் : "இந்தப் பேட்டி விவரங்களையெல்லாம் நான் சென்னைக்கு ரிப்போர்ட்டு செய்ய வேண்டும். அங்கிருந்து பதில் வரும்வரை சிறிது காலம் இராமநாத புரத்திலேயே நீர் தங்கியிருக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். ஏனெனில், இது கும்பினி மேலிடத்தாரின் கட்டளை. நீர் தங்குவதற்கு வசதியான ஒரு கட்டடத்தையும் நான் ஏற்பாடு செய்திருக்கிறேன். சென்னையிலுள்ள கும்பினிக்கு எழுதி அவர்களது அனுமதியைப் பெற்ற பிறகு நீர் பாஞ்சாலங்குறிச்சிக்குச் செல்லலாம். இந்தப் பேட்டியானது சுமுகமாக முடிந்து விட்டபடியால், அந்த அனுமதியும் வெகு எளிதில் கிடைத்துவிடும் என நம்புகிறேன்!"

ஜாக்சனின் இந்தப் பதிலைக் கேட்டதும், கட்டபொம்ம னுக்குத் தூக்கி வாரிப் போட்டது. எனினும் அதை வெளிக் காட்டிக்கொள்ளாமல், கலெக்டரின் கட்டளைப்படி இராம நாதபுரத்தில் தங்கியிருக்கத் தனக்கு ஆட்சேபணையில்லை யென்றும், ஆனால் கோட்டைக்கு வெளியில் தங்கியிருக்க



அனுமதிக்க வேண்டும் என்றும், அவன் கலெக்டரிடம் வேண்டிக் கொண்டான்.

வைசூரியென்ற பெயரைக் கேட்டாலே, வெள்ளையர்கள் பெரும் பீதியடைவார்கள். தான் இருக்கும் கோட்டைக்குள்ளே வைசூரியிருப்பதாகக் கேட்டவுடன், கலெக்டர் ஜாக்சன் தனது இராணுவ அதிகாரியான கர்னல் மார்டின்ஸ் என்பவனை அழைத்து, அது உண்மைதானா என்பதை விசாரித்து வருமாறு அனுப்பினான்.

கர்னல் மார்டின்ஸ் திரும்பிவந்து, கோட்டைக்குள் அம்மை நோய் இருப்பதாகத் தெரியவில்லையென்று பதில் சொன்னான். கட்டபொம்மன் தன் அடிவயிற்றைப் பிடித்துக்கொண்டான். தனக்குப் பொறுக்க முடியாத வயிற்று வலியாயிருக்கிறதென்றும், கொல்லைப்புறம் போய்வரத் தன்னை அனுமதிக்க வேண்டுமென்றும் அவன் கலெக்டரிடம் கேட்டுக்கொண்டான்.

அந்தக் கட்டடத்தை அடுத்துள்ள தோட்டத்திற்குள் சென்று வரும்படி, கலெக்டர் கட்டபொம்மனுக்கு அனு மதியளித்தான்.

கட்டபொம்மன் கீழே வந்தவன் தோட்டத்திற்குள் செல்லவில்லை. அவனுக்குத் திகில் ஏற்பட்டுவிட்டது. தான் எவ்வளவுதான் பணிந்து போய்க் கும்பினிக்காரன் காலில் விழுந்தாலும், இனிமேல் தன் பதவி நிலைப்பது சந்தேகமே என்று அவனுக்குப் பட்டது. கலெக்டர் ஜாக்சன் தன்மீது மாறாத வஞ்சினம் கொண்டிருக்கிறான் என்றும், இராமநாத புரத்திலேயே தன்னைக் கைதியாக்கி வைத்திருக்க அவன் திட்டமிடுகிறான் என்றும் அவன் பீதியடைந்தான். ஆகவே, அந்த இடத்தைவிட்டு எப்படியாவது தப்பியோடிவிட வேண்டுமென்று அவன் திட்டமிட்டான். மேல் மாடியிலிருந்து படிக்கட்டுகளின் வழியே கீழே இறங்கி, தோட்டத்துக்கு எதிர்ப்புறமாயுள்ள இடப்பக்கத்து வாசல் வழியாய் வெளியே ஓட்டமெடுத்தான்.

கட்டபொம்மன் ஓடுவதைக் கண்ட பால்போர் என்னும் வெள்ளைக்கார அதிகாரி, கலெக்டரைச் சத்தம் போட்டுக் கூப்பிட்டான். கலெக்டரும் மெத்தையின் முன்புறத்தில் இருந்த அறையை அடைந்து, வெளியே எட்டிப் பார்த்தான். கட்டபொம்மன் ஓடுவது தெரிந்தது. "ஓடவேண்டாம்! உனக்கு எந்தவிதமான ஆபத்தும் வராது!" என்று அவன் காதில் விழும் பொருட்டுக் கலெக்டர் உரக்கக் கத்தினான். ஆனால் ஆங்கில மொழியை அறியாமையால், கலெக்டர் என்ன சொல்கிறானென்றே கட்டபொம்மனுக்குப் புரியவில்லை. கலெக்டரின் குரலைக் கேட்டதும், அவன் இன்னும் பெரும்பீதி கொண்டு ஓடத் தொடங்கினான்!

கட்டபொம்மன் இரண்டாவது வாசலையும் தாண்டி மைதானத்தை அடைந்தான். அங்கு ஏற்கெனவே அவன் விட்டுச் சென்றிருந்த அவனது மைத்துனர் முதலியோர் இருந்தார்கள். அவர்கள் கட்டபொம்மனைத் தூக்கிக் கொண்டு கோட்டை வாயிலுக்கு விரைந்தார்கள்.

கோட்டை வாயிலின் பெரிய கதவுகள் சாத்தப்பட்டிருந்தன. உள் கதவான திட்டி வாசல் மட்டும் திறந்திருந்தது. கட்டபொம்மனும் அவன் ஆள்களும், அதைக் கடந்து வெளியே செல்லத் தொடங்கினர்.

உடனே காவலாளர்கள் கூக்குரல் எழுப்பினர். அதைக் கேட்டு அங்கு ஓடிவந்தான் லெப்டினன்ட் கிளார்க் என்னும் இராணுவ அதிகாரி.

கட்டபொம்மனைத் தூக்கிச்சென்ற கோஷ்டியினரைக் கிளார்க் தடுத்து நிறுத்தினான். ஆனால் இதற்குள்ளே, கோட்டைக்கு வெளியே காத்து நின்ற கட்டபொம்மனின் பிற ஆள்களும் இந்தச் சச்சரவில் வந்து குதித்துவிட்டனர். அதனால் குழப்பம் அதிகமாகிவிட்டது. அந்தக் குழப்பத்திலும் இரு தரப்பிலும் பலர் இறந்தனர். லெப்டினண்ட் கிளார்க் குத்திக் கொல்லப்பட்டான்!



கிளார்க்கைக் கொன்றவன் கட்டபொம்மன்தான் என்று சொல்லப்பட்டது. கலெக்டர் ஜாக்சனும் அப்படியே குற்றம் சாட்டினான். ஆனால், உண்மை அதுவல்ல. கட்டபொம்மன் தன்னையே மற்றவர்கள் தூக்கிக் கொண்டு போகவேண்டிய அளவுக்குக் கிலியடித்துப் போயிருந்தான். ஆகையால் அவன் எப்படி கொன்றிருக்க முடியும்? கிளார்க்கைக் கொன்று கட்டபொம்மனைக் காப்பாற்றிக் கொண்டு போனவர்கள் பாதர் வெள்ளையெனப்படும் வெள்ளையத்தேவன் ஆவான். இந்த உண்மையைப் பறைசாற்றும் பல நாடோடிப் பாடல்கள் இருக்கின்றன. ஊமைத்துரைதான் கிளார்க்கைக் கொன்றான் எனக்கூறும் வேறு சில நூல்களும் இருக்கின்றன. எப்படியிருப்பினும், கிளார்க்கைக் கொன்றவன் கட்டபொம்மன் அல்ல என்பது மட்டும் நிச்சயம்!

இந்தச் சண்டையில் கட்டபொம்மனின் மைத்துனர் இருவரும் வேறு இரு உறவினர்களும் மடிந்துவிட்டனர். அவன் தம்பிகள் இரண்டு பேரும் தப்பி விட்டனர்.

கட்டபொம்மனுக்கு வலக்கைபோல் இருந்து வந்த தானாதிபதிப் பிள்ளையேனும் சுப்பிரமணியபிள்ளை கோட்டைக்குள் அகப்பட்டுக்கொண்டார். அவரை ஜாக்சன் உடனே விலங்கிட்டுச் சிறையிலடைத்தான்.

கட்டபொம்மனோடு நடத்திய பேச்சில் கும்பினிக்குப் பூரண வெற்றி கிடைக்கவிருந்த தறுவாயில் அதைத் தன்னுடைய துடுக்குத்தனத்தால் கெடுத்துக் கொண்டதாக ஜாக்சனே மனம் வருந்தினான். கும்பினியின் பிற அதிகாரிகளும் ஜாக்சனுடைய திறமைக்குறைவே இந்த விபரீத விளைவுகளுக்கெல்லாம் காரணம் என்று கருதினர்.

நடந்துவிட்ட நிகழ்ச்சிகளையெண்ணி, கட்டபொம்மனும் மிக்க மனவேதனையடைந்தான். வெண்ணெய் திரண்டு வரும்போது தாழியை உடைத்தாற்போல், கடைசி நேரத்தில் தான் சற்று அவசர புத்தியுடனும், கோழைத்தனமாகவும்

நடந்துகொண்டுவிட்டதையெண்ணி அவன் கவலைப்பட்டான். அவனுடன் வந்த போர் வீரர்களும் மிகவும் மனச்சோர்வு அடைந்தார்கள். எனினும், இனி என்ன செய்வது? நடந்தது நடந்துவிட்டது. இனி வருவது வரட்டும் என்ற துணிவு அவனுக்கு ஏற்படலாயிற்று. "கடைசியில் இதற்குத்தானா நாம் கலெக்டர் இழைத்த அத்தனை அவமானங்களையும் பொறுத்துக் கொண்டிருந்தோம்?" என்பதை எண்ணும்போது, அவனுக்கு ஆத்திரமாய் வந்தது. அந்த ஆத்திரத்தைத் தீர்த்துக்கொள்பவன் போல, அவன் இராமநாதபுரத்திலும், சுற்றுப்புறத்திலும் புகுந்து கொள்ளையடிக்குமாறு தன் ஆள்களுக்கு உத்தரவிட்டான்.

கொள்ளையென்றால் பாஞ்சாலங்குறிச்சிப் படைவீரர்களுக்குப் பாலும் தேனும் போல் அல்லவா? அவர்கள் "வாய்த்தது! வாய்த்தது!" என்று களிகூத்தாடியவாறு, கடை வீதிகளைச் சூறையாடினர். வியாபாரிகளையும், பொதுமக்களையும் கலங்க மலங்க அடித்தனர். அந்த நிகழ்ச்சியை அக்காலத்திய நாடோடிக் கவியொருவர் பின்வருமாறு சித்திரிக்கிறார் :

"சின்னக் கடைவீதி யென்னும் தெருவிலே
சேரத் திரண்டதே கம்பளமும்,
தன்மை யானகடை வீதியினை யொரு
நாழிகையிற் கொள்ளை, கொள்ளை யென்றான்!

பொன்னும் பணத்தையும் கொள்ளை கொண்டார்
- பிச்சிப்
பூவும் கொழுந்துகள் கொள்ளை கொண்டார்;
சன்னக்கம்பிச் சீலை சரிகைச் சீலைகள்,
சாயச் சீலைகளும் கொள்ளை கொண்டார்!

தட்டுப்புனுகு சவ்வாதுடனே நல்ல
சந்தனங் கந்தப்பொடியுடனே,



வெட்டி விலாமிச்ச வேருடனே வாச
வில்லைகள் எல்லாமும் கொள்ளை கொண்டார்!

வேண்டுந் திரவியம் கொள்ளை கொண்டார் பாக்கு
வெத்திலை போயிலை கொள்ளை கொண்டார்;
தாண்டி விழுந்து சமையலறைதனில்
சம்பாச் சாதமும் கொள்ளை கொண்டார்!

வண்ணான் துறைதன்னில் வந்தாரே அந்த
வண்ணானைப் பூசை கொடுத்தாரே!
எண்ணாமல் வண்ணானைக் கட்டி வைத்துத் தமக்கு
ஏத்த புடவையும் கொள்ளை கொண்டார்!

இப்படியெல்லாம் கொள்ளையடிப்பது நியாயமா என்று கேட்டவர்களுக்குக் கட்டபொம்மன் என்ன பதில் சொன்னான் தெரியுமா?

"சேவுகர் சம்பளம் சொல்லாமல் எங்கள்
செலவுக்கும் இல்லாமல் கொள்ளை கொண்டோம்!"

என்று கூறினானாம் கட்டபொம்மன்!

கைது செய்யப்பட்ட தானாபதிப் பிள்ளையைக் கலெக்டர் ஜாக்சன் தக்க காவலுடன் திருச்சிக்கு அனுப்பி வைத்தான். நடந்த நிகழ்ச்சிகள் பற்றிக் கும்பினி மேலதிகாரிகளுக்கும் அவன் ஒரு ரிப்போர்ட்டு அனுப்பினான். அதில், "பாஞ்சாலங்குறிச்சிப் பாளையத்தைப் பறிமுதல் செய்துவிட வேண்டும். கட்டபொம்மனைப் பிடித்துக் கொடுப்பவர்கட்கு ஐயாயிரம் ரூபாய் பரிசு வழங்குவதாக அறிவிக்கப்பட வேண்டும். அவனுடைய பாளையத்தின் மீது இராணுவ நடவடிக்கை எடுக்க வேண்டும். அதற்காக இரண்டு பெரிய பீரங்கிகளும் ஒரு குதிரைப் படையும் அனுப்பி வைக்க வேண்டும். கும்பினியின் சேவையில் உயிர்நீத்த லெப்டி

ணெண்ட் கிளார்க்கின் குடும்பத்திற்கு உதவிப் பணம் அளிக்க வேண்டும்!'" என்று அவன் குறிப்பிட்டிருந்தான்.

இராமநாதபுர நிகழ்ச்சியானது கும்பினி மேலதிகாரிகளுக்குப் பெருத்த கலக்கத்தை உண்டு பண்ணியது. இதன் விளைவாக வேறு பல பாளையக்காரார்களும் கலகத்தில் இறங்கக்கூடுமோ என்று அவர்கள் கவலைகொண்டனர். மைசூர் விவகாரம் இன்னும் ஒரு முடிவுக்கு வராத நிலையில் தெற்கே பெரிய சண்டை சச்சரவுகளில் இறங்குவதற்கு அவர்கள் தயக்கமுற்றனர்.

இராமநாதபுரத்தைவிட்டு ஓட்டமெடுத்த கட்டபொம்மன் வழிநெடுகிலும் கொள்ளையடித்துக் கொண்டே பாஞ்சாலங்குறிச்சி போய்ச் சேர்ந்தான். கும்பினியாரை நேரடியாகப் பகைத்துக்கொள்ள வேண்டிய நிலைமைக்கு ஆளாகிவிட்டோமேயென்று அவன் நெஞ்சம் சஞ்சலம் அடைந்தது. அதுபற்றி ஆலோசனை கேட்பதற்காக, தூத்துக்குடியிலிருந்த தன் நண்பன் டேவிசன் துரையைப் பாஞ்சாலங்குறிச்சிக்கு வரவழைத்தான்.

டேவிசன் முன்பு தெரிவித்த யோசனைப்படி கும்பினிக்கு எவ்வளவு பணிந்து போக முயன்றும், கலெக்டர் ஜாக்சன் மிகவும் அநீதியாக நடந்து கொண்டு தன்னை வேண்டுமென்றே பெரிதும் அவமானப்படுத்தி விட்டதாக கட்டபொம்மன் டேவிசனிடம் குறைபட்டுக் கொண்டான்.

உடனே டேவிசன் கும்பினியின் மேலதிகாரிகட்கு ஓர் இரகசிய ரிப்போர்ட்டை எழுதியனுப்பினான்.

"பாஞ்சாலங்குறிச்சிப் பாளையக்காரார்கள் பரம்பரை பரம்பரையாகக் கும்பினிக்கு உதவியாகவும், விசுவாசமாகவும் இருந்து வருபவர்கள். வீரபாண்டிய கட்டபொம்மன் கம்பளத்துப் பாளையங்கள் அனைத்திலும் மிக்க செல்வாக்குப் படைத்தவன். மறவர் பாளையங்களெல்லாம் கும்பினியிடம் பகைமை பாராட்டும்போது, நாம் கட்டபொம்மனை நண்பனாக வைத்துக்கொள்வதே நல்லதாகும். கலெக்டர் இட்ட எல்லா கட்டளைகளுக்கும் அவன் கீழ்ப்படிந்தே வந்திருக்கிறான். அவனுக்குப் பேட்டி கொடுக்காமல் கலெக்டர் அவனை ஊரூராய் இழுத்துச் சென்று அலைக்கழித்தது ஒரு தேவையில்லாத செயலாகும். கும்பினிக்கு நண்பர்களை எந்த விலை கொடுத்தும் வாங்க வேண்டியதாயுள்ள இந்த நேரத்தில், கலெக்டர் ஜாக்சன் வீண் வம்பை விலைக்கு வாங்கியிருக்கிறார். அவர் எப்போதுமே ஒரு முன்கோபி. அரசியல் விவேகம் இல்லாதவர். கும்பினியின் நண்பர்களை அவர் உதாசீனப் படுத்திவிட்டார்!" என்றெல்லாம் தன் ரிப்போர்ட்டில் குறிப்பிட்டிருந்தான் காப்டன் டேவிசன்.



கும்பினி மேலதிகாரிகளுக்கு மிகவும் தர்மசங்கடமாகி விட்டது. டேவிசன் யோசனைப்படி கட்டபொம்மனை மீண்டும் கும்பினியின் நண்பனாக்கிக் கொள்வதற்கே அவர்கள் ஆசைப்பட்டார்கள். ஆனால், அதே சமயத்தில், தங்களின் நேரடி அதிகாரியான கலெக்டர் ஜாக்சனின் மதிப்பைக் குறைக்கவும் அவர்கள் விரும்பவில்லை. ஆகையால், 1798, அக்டோபர் 3-ஆம் நாளன்று அவர்கள் ஒரு புதிய பிரகடனத்தை வெளியிட்டார்கள். அதாவது :

"இராமநாதபுரம் கலெக்டரிடமாவது அல்லது திருச்சியிலுள்ள கும்பினித் தளபதி மேஜர் ஜெனரல் பிளாயிட் என்பவரிடமாவது, கட்டபொம்மன் உடனடியாகச் சரணடைய வேண்டும். அப்படிச் சரணடைந்தால், அவன் கலெக்டர் ஜாக்சன் மீது கூறும் புகார்கள் பற்றி விசாரணை நடத்துமாறு உத்தரவிடப்படும். இந்த ஏற்பாட்டுக்குக் கட்டபொம்மன் சம்மதிக்காவிட்டால், அவனுடைய பாளையம் பறிமுதல் செய்யப்படுவதோடு, அவனும் நாடு கடத்தப்படுவான்!" என்று அந்தப் பிரகடனத்தின் மூலம் அறிவிக்கப்பட்டது.

## துரைகள் சூடாமணி

தூத்துக்குடி டேவிசனுக்கும் கும்பினியார் ஒரு கடிதம் அனுப்பினார்கள். கலெக்டர் ஜாக்சனின் அத்துமீறிய நடவடிக்கைகளைப் பற்றிக் கும்பினி விசாரணை நடத்த உத்தேசித்திருப்பதாகவும், ஆகையால் கட்டபொம்மனை எப்படியாவது திருச்சிக்கு வரச் செய்யுமாறும் அக்கடிதத்தில் அவர்கள் எழுதியிருந்தார்கள்.

கட்டபொம்மனைப் பற்றிக் கும்பினி விடுத்த பிரகடனத்தை எடுத்துக்கொண்டு, கும்பினியின் இரண்டு அரிகாரர்கள் பாஞ்சாலங்குறிச்சிக்குப் புறப்பட்டார்கள். கன்னையன், சுப்பராயன் என்னும் அந்த இருவரும் 1798 அக்டோபர் 5-ஆம் நாளன்று, பாஞ்சாலங்குறிச்சியை வந்தடைந்தார்கள். அவர்களைக் கட்டபொம்மன் தானே நேரில் வந்து வரவேற்று உபசரித்தான்.

அந்தக் காலத்தில் இவ்வாறு அனுப்பப்படுகிற ஒவ்வொரு கடிதத்துக்கும் இரண்டிரண்டு பிரதிகள் எடுத்து அனுப்புவது வழக்கம். அவற்றில் ஒன்று அசல், மற்றொன்று நகல். தூதர்கள் முதலில் நகலைத்தான் காட்டுவார்கள். வேண்டும்போதுதான் அதன் அசலைக் காட்டுவார்கள்.

கட்டபொம்மன் அசலையும் கேட்டு வாங்கிக் கொண்டான். பின்னர், அசல், நகல் இரண்டையும் எடுத்துக் கொண்டு தன் அந்தப்புரத்திற்குள் போய்விட்டான்.

சுமார் மூன்று மணி நேரம் கழித்துக் கட்டபொம்மன் வெளியே வந்தான். கும்பினியின் பிரகடனத்தை, அசல், நகல் இரண்டையும் ஒரு பல்லக்கில் வைத்தான். பின்னர் அந்தப் பல்லக்கை மேளதாளத்துடன் பாஞ்சாலங்குறிச்சியில் ஊர்வலமாக எடுத்துவரச் செய்தான்!

ஊர்வலம் முடிந்ததும் நகலை வைத்துக்கொண்டு அசலைத் திருப்பிக் கொடுத்துவிட்டான். வந்த அரிகாரர்



களுக்கு முண்டாசு கட்டி மரியாதை செய்து அனுப்பி வைத்தான். பதில் ஓலையொன்று எழுதி அதைத் தன் ஆள்வசம் அனுப்பி வைத்தான்.

அந்த ஓலையில், அவன், கும்பினியின்பால் தனக்குள்ள விசுவாசத்தை உறுதிப்படுத்தி, தன்மீது பிசகு எதுவும் இல்லையென்றும், கும்பினியின் நீதியில் நம்பிக்கை வைத்துத் திருச்சிக்கு வர அவன் தயாராயிருப்பதாகவும் தெரிவித்திருந்தான்.

கட்டபொம்மனின் இந்தப் பணிவான பதிலைப் பார்த்ததும், "அவன் உண்மையில் அவ்வளவு கெட்டவனல்ல; கலெக்டர்தான் அவனிடம் சரியாக நடந்து கொள்ளவில்லை" என்று கருத்துக் கொண்டனர் கும்பினி மேலதிகாரிகள்.

இராமநாதபுரம் பேட்டியின்போது நடந்த உண்மை என்ன என்பதைக் கண்டறிவதற்காக, கும்பினி ஒரு விசாரணைக் குழுவை நியமித்தது. அந்தக் குழுவில், பிரௌன், ஓரம், ஜான் காஸாமேஜர் என்னும் மூன்று இராணுவ அதிகாரிகள் இருந்தனர்.

கட்டபொம்மனுக்குத் திருச்சிக்கு வரத் துணிவு ஏற்படும் பொருட்டு, கும்பினியார் திருச்சியில் சிறையிலிருந்த தானாபதிப் பிள்ளையை விடுவித்துப் பாஞ்சாலங்குறிச்சிக்கு அனுப்பி வைத்தார்கள். "நீர் எப்படியும் கட்டபொம்மனைத் திருச்சிக்கு அழைத்து வரவேண்டும்!" என்று அவர்கள் தானாபதிப் பிள்ளையிடம் சொல்லி அனுப்பினார்கள்.

கட்டபொம்மன் திருச்சிக்குப் புறப்பட்டுச் சென்றான். வழியில் அவன் மதுரையை வந்தடைந்ததும், அங்கிருந்த கும்பினி கர்னல் அவனுக்கு நல்ல வரவேற்பளித்து உபசரித்தான். இதனால் கட்டபொம்மனுக்கு இன்னும் தைரியம் உண்டாயிற்று. அவன் திருச்சிக்கு வந்து சேர்ந்தான்.

திருச்சியிலும் கும்பினி அதிகாரிகள் கட்டபொம்மனை மிகவும் உபசாரமாக நடத்தினார்கள். பின்னர், விசாரணைக் குழு தன் விசாரணையைத் தொடங்கியது.

கட்டபொம்மனும் தானாபதிப் பிள்ளையும் தங்கள் கட்சியை எடுத்துச் சொன்னார்கள். நவாப் காலத்திலிருந்து தங்கள் பாளையம் பரம்பரை பரம்பரையாய்க் கும்பினிக்கு மிகவும் விசுவாசமாக நடந்து வந்திருப்பதை, அவர்கள் தக்க சான்றுகளோடு விளக்கிக் கூறினார்கள். இறுதியில் விசாரணைக் குழு தனது தீர்ப்பைக் கும்பினி மேலிடத்துக்கு அனுப்பி வைத்தது. அந்த தீர்ப்பு வருமாறு:

"கலெக்டர் கட்டபொம்முவைத் தன்னுடன் ஊரூராக அழைத்துச் சென்று அலைக்கழித்தது. அவனுடைய கௌரவத்தைக் குறைவுபடுத்திய செயலாகும். பேட்டியின் போது கலெக்டரின் நடத்தை ஒரு பெரிய அதிகாரிக்கு உரிய நிலையில் அமையாமல், மிகவும் கடுமையாக அமைந்திருந்தது. அவருடைய மிரட்டலைக் கண்டு பாளையக்காரர் பயந்து விட்டார். அவர் தம் உயிருக்கு அஞ்சியே ஓடியிருக்கிறார். கோட்டை வாயிலில் நடந்த கலகத்தை எதிர்பாராது ஏற்பட்டுவிட்ட ஒரு நிகழ்ச்சியாகவே கருத வேண்டும். கிளார்க்கைக் கொன்றது கட்டபொம்மன்தான் எனத் தெளிவாக நிரூபிக்கப்படவில்லை. அவரது பரிவாரங்களைச் சேர்ந்த ஒருவனாலேயே அவன் இறந்திருக்க வேண்டும்."

இந்தத் தீர்ப்பினால், கட்டபொம்மன் கொலைக் குற்றத்திலிருந்து விடுவிக்கப்பட்டான். ஆனால் கிளார்க்கின் குடும்பத்திற்குக் கட்ட பொம்மன் உதவித் தொகை அளித்து வரவேண்டுமென்று உத்தரவிடப்பட்டது.

கலெக்டர் ஜாக்சன் திறமைக் குறைவானவன் என்று தீர்மானிக்கப்பட்டது. கும்பினி மேலதிகாரிகள் அவனைப் பதவியிலிருந்து நீக்கிவிட்டனர்.



கட்டபொம்மன் கும்பினியின் தீர்ப்பை ஏற்றுக் கொண்டான். இராமநாதபுரத்தில் முன்பு ஏலம் போடப்பட்ட தன்னுடைய பல்லக்கு, தண்டிகை முதலிய பொருள்களைத் தனக்குத் திருப்பித்தர ஏற்பாடு செய்யுமாறு அவன் கேட்டுக்கொண்டான்.

நவாப் காலத்தில் தன்னுடைய குடும்பத்தாருக்கு அளிக்கப்பட்டிருந்த திசைக் காவல் வரி வசூலிக்கும் உரிமையையும் அவன் தனக்குத் தொடர்ந்து அளிக்குமாறு வேண்டிக் கொண்டான்! அதன் மூலம் தனக்கு ஆண்டு ஒன்றுக்கு மூவாயிரம் சக்கரங்கள் அதிகம் கிடைக்குமென்றும், கடந்த ஆண்டில் ஜாக்சன் அதைத் தடுத்துவிட்டதால் அந்தத் தொகை தனக்கு நஷ்டமாகிவிட்டதாகவும் அவன் தெரிவித்தான். இதுபற்றி விசாரித்து முடிவு செய்வதாகக் கும்பினி அதிகாரிகள் பதில் அளித்தனர். கட்டபொம்மன் மீண்டும் கும்பினியின் விசுவாசமுள்ள பாளையக்காரனாக அங்கீகரிக்கப்பட்டான்!

கட்டபொம்மன் இவ்வாறு கும்பினியின் அடியார்க் கடியவனாக மாறிவிட்ட இந்தத் திருச்சி நிகழ்ச்சியானது, அவனது வரலாற்றிலேயே மிகமிகக் கவனத்துக்குரிய பகுதியாகும். தலைவர் ம.பொ.சி. அவர்களும் வேறு பல ஆசிரியர்களும், கட்டபொம்மனது வரலாற்றை எழுதுவதற்கு ஆதாரமான மூல நூலாக விளங்கியது, மதுரை ஜெகவீர பாண்டியனாரால் இயற்றப்பட்ட "பாஞ்சாலங்குறிச்சி வீரசரித்திர"மேயாகும். இது கட்டபொம்மனைப் புகழ்ந்து வரையப்பட்ட ஒரு நூல். இந்தப் பாராட்டு நூலில் அதன் ஆசிரியர் செய்யாத ஒரு காரியத்தை அவரைப் பின்பற்றிய பிற ஆசிரியர்கள் செய்யாத ஒரு காரியத்தை, ம.பொ.சி. அவர்கள் செய்யத் துணிந்துள்ளார் என்பது இங்குக் கூர்ந்து நோக்கத்தக்கது அதாவது, கட்டபொம்மனுடைய திருச்சி விசாரணையை அவர் அடியோடு இருட்டடிப்புச் செய்திருக்கிறார்!

திருச்சி நிகழ்ச்சிகளை ஜெகவீரபாண்டியனார் மூன்று அதிகாரங்களில் விவரித்துள்ளார். நியாயம் தெளிந்தது, பிடியுண்ட பிள்ளை மீண்டு வந்தது, துரைகள் நட்பானது என்பதே அந்த அதிகாரங்களின் தலைப்புகளாகும்.

துரைகள் நட்பானது என்ற பன்னிரண்டாவது அதிகாரத்தில், கட்டபொம்மனுக்கும் கும்பினி அதிகாரிகளுக்கும் நடந்த பேச்சுவார்த்தைகளை ஜெகவீரபாண்டியனார் பின்வருமாறு விளக்கினார்:

"இனி நீர் நமக்கு இனியராய் நின்று, என்றும் இதம்புரிந்து வரவேண்டும்" என்று பதம்பெற உரைத்தார். துரைகள் உரைத்த அவ்வுரைகளைக் கேட்டு, இவர் உளம் மிக மகிழ்ந்து கிழமை பகர்ந்தார். 'பழமையான என் நிலைமை குலையாமல் நெடுமுறை தெரிந்து நீதி செலுத்திவரின், தலைமை அதிபதிகளாகிய தங்கள் ஆணையை யான் யாண்டும் கடவேன்; வேண்டும் உதவிகளை விழைந்து புரிவேன்; கும்பினி அரசுக்கு இடையூறாக யாரேனும் தடை செய்ய நேரின், யானே நேரெதிர்ந்து அவரை நிலையழித்து இங்கு நலமுறச் செய்வேன்; பல கூறி என்? உலகறிய நின்று எந்நிலையிலும் தளராமல் கும்பினிக்கு உறுதியாய் உழைப்பேன்; இது வான் அறிய மண் அறியச் சொன்ன உண்மை' என ஆணை கூறித் தந்தார். இவ்வாறு ஒத்துழைக்க இவர் உறுதி செய்து தரவும், இத்தகைய சுத்த வீரன் துணை அமைந்தது தங்களுக்குப் பேருறுதியாமென அவர் பெரிதும் மகிழ்ந்தார். இவரது உரைகளையும், உறவுரிமைகளையும் பாராட்டி உள்ளங் குளிர்ந்தார்." - பக்கம் 130.

மேலும் கட்டபொம்மனுக்குக் கும்பினி தந்த வெகுமதிகளைப் பற்றியும் விவரிக்கிறார் ஜெகவீரபாண்டியனார்; -

"அதன்பின் சங்க அதிபதிகள் தென்னாட்டுச் சிங்கம் என்ற சிறப்புரை பகர்ந்து இரண்டு தினங்கள் கழிந்தபின் தம்முட் கலந்து ஆராய்ந்து, இவருக்குச் சிறந்த வெகுமதிகள் செய்ய விழைந்தார், சிறப்புகளை நாடினார்.



கும்பினியார் கொடுத்த வரிசைகள்.

இம்மன்னருக்கு இன்னுயிர் நண்பரான டேவிசன் துரையோடு ஆலோசித்துத் தங்கள் ஞாபகம் என்றும் மறவாது இருக்கும்படி மதித்து உயர்வான வரிசைகள் இவருக்கு உரிமையுடன் துரைமார்கள் செய்யலானார். ஆறாயிரம் ரூபாய் விலைமதிப்புள்ள ஒரு முத்துமாலையை இவருடைய கழுத்தில் அணிந்தார். சங்க முத்திரை பொறித்ததும், இருபுறமும் கூர் உள்ளதுமான வடிவாள் ஒன்று கொடுத்தார்; அன்று ஏறியுலாவிய ஏழு குதிரைகளையும் தந்தார். தங்கள் தொடர்பு எங்கும் எவரும் தெரியும்படி துரைகள் சூடாமணி என்ற ஒரு பட்டப்பெயரும் சூட்டிப் பண்பு பாராட்டி நண்புகளை நாடினார்.

'ஐயன்மீர்! என்னை ஒரு பொருளாக மதித்துச் செய்த பிழைகளையெல்லாம் பொறுத்துச் சீர் பல செய்துள்ள மேலோர்களாகிய உங்கள் முன்னிலையில் இனி யான் யாது சொல்ல வல்லேன்! சேயென நின்று ஆயதைச் செய்வேன். வாய் பேசி ஆவது என்? வந்து நாளாகின்றது; விடையருளுங்கள்' என்று கும்பினித் தலைவரிடம் பண்பு மிகுந்து இவர் நண்புடன் வேண்டினார். (பாஞ்சாலங்குறிச்சி வீர சரித்திரம் - பக்கம் 132 - 133.)

இந்நிகழ்ச்சிகள் பற்றிக் கும்பினி ரிக்கார்டுகளில் விவரம் இருக்கிறது. ஜெகவீரபாண்டியனாரும் அதை மறைக்கவில்லை, மறுக்கவுமில்லை. பின்னர் வீர கட்டபொம்மு என்ற நூலை எழுதிய எம்.எஸ். சுப்பிரமணிய ஐயரும் அந்நூலில் 45, 46-ஆவது பக்கங்களில் இதை ஒப்புக் கொண்டிருக்கிறார். வீ.சே. லீலா, பி.ஏ., பி.டி. என்ற ஆசிரியையும், தனது வீரபாண்டியக் கட்டபொம்மு என்ற புத்தகத்தின் 43, 44-ஆம் பக்கங்களில் இந்நிகழ்ச்சிகள் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறார்.

ஆனால் தலைவர் ம.பொ.சி. அவர்கள் மட்டும் இவற்றை முழுமையும் மறைத்துவிட்டார். இவற்றைப் பற்றி அவர் ஒரு சிறு குறிப்புக்கூடக் கொடுக்கவில்லை. கட்டபொம்மனை எப்படியும் ஒரு இலட்சிய வீரனாக்கிவிட வேண்டுமென்ற குறிக்கோளை முன்வைத்துக்கொண்டு அவா நூலெழுதியவ ராகையால், திருச்சி நிகழ்ச்சிகளை வெளியே சொன்னால் அவன் அந்நியருக்கு அடிவருடியவன் என்ற உண்மை வெளியிடப்பட்டு விடுமேயென்று அச்சமுற்றவராய் அவர் அப்படிச் செய்திருக்கிறார்! இதுவா அரசியல் நேர்மை? இதுவா ஒரு வரலாற்று நூலாசிரியரின் அறம்?

கட்டபொம்மனைப்பற்றி திரைப்படத்திலும் நாடகத் திலும்கூட இந்நிகழ்ச்சிகள் காட்டப்படவில்லை. அரசியல் மோசடி அங்கேயும் ஆட்சி செலுத்தியிருக்கிறது? கும்பினியின் தயவு கிடைத்துவிட்டது என்ற தைரியத்தில் கட்டபொம்மன் மீண்டும் பக்கத்துப் பாளையங்களை மிரட்டுவதிலும், அவனு டைய அட்டகாசங்களுக்குப் பணிந்து போக மறுத்தவர்களை முன்னிலும் அதிகமாகக் கொடுமைப்படுத்துவதிலும் முழுக் கவனம் செலுத்தத் தொடங்கினான்.

எட்டயாபுரம் போன்ற பாளையக்காரர்கள் கட்ட பொம்மன் கும்பினியின் மன்னிப்பை மட்டுமல்ல, பிரியத்தை யும் சம்பாதித்துவிட்டதை எண்ணி மனம் புழுங்கினர். மைசூர் விவகாரத்தை முன்னிட்டுக் கும்பினியார் அவனைத் தற்காலிகமாக விளையாட விட்டிருக்கிறார்கள் என்ற உண்மை அவர்கட்குத் தெரியாது, பாவம்!

### மீண்டும் கெட்டிபொம்முவின் கலக்கம்

ஜாக்சன் துரைக்குப் பிறகு, தென்பாண்டி நாட்டின் கலெக்டராக லூஷிங்டன் என்பவன் நியமனம் செய்யப் பட்டான். 1799-ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் அவன் திருநெல்வேலி வந்து சேர்ந்தான். பின்னர் இராமநாதபுரத்தில் தன் அலுவலகத்தை அமைத்துக்கொண்டான்.



கட்டபொம்மன் விவகாரத்தால் இதர பாளையங்களிலும் வரிவசூல் பாக்கி விழ ஆரம்பித்தது. கட்டபொம்மன் மீதும் மறுபடியும் புகார்கள் குவியத் தொடங்கின. இந்த நிலையை ஆரம்பத்திலேயே ஒழுங்கு செய்ய வேண்டுமென்று தீர்மானித் தான் கலெக்டர் லூஷிங்டன்.

எனவே, 1799, மார்ச் 16-ஆம் நாளன்று, அவன் கட்டபொம்மனுக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பினான்.

அதில், இறந்துபோன கிளார்க்கின் குடும்பத்தாருக்குக் கட்டபொம்மன் கொடுத்து வரவேண்டிய உதவித் தொகையை நிர்ணயம் செய்ய வேண்டியதிருப்பதாலும், பாளையத்தின் நிலையைப்பற்றிச் சர்க்கார் ஒழுங்கு முறைகள் செய்ய உத்தேசித்திருப்பதாலும், கட்டபொம்மன் நேரில் வந்து தன்னை இராமநாதபுரத்தில் பார்க்க வேண்டுமென்று கலெக்டர் உத்தரவிட்டிருந்தான். அத்துடன், பாஞ்சாலங் குறிச்சிப் பாளையத்துக்கான கிஸ்திப் பாக்கி முழுவதையும் உடனே கொண்டுவந்து செலுத்துமாறும் அவன் அதில் குறிப்பிட்டிருந்தான்.

அக்கடிதத்துக்குக் கட்டபொம்மன் மூன்றாம் நாளே, அதாவது 19-ஆம் தேதியே ஒரு பதில் எழுதியனுப்பினான். அது கலெக்டருக்கு 21-ஆம் தேதி கிடைத்தது. அந்தப் பதில் மிகவும் பணிவோடு எழுதப்பட்டிருந்தது.

கிளார்க்கைக் கொன்ற குற்றத்தைத் தான் செய்யவில்லை யென்று கும்பினி உறுதி செய்திருப்பதற்காகத் தன் நன்றியைத் தெரிவித்துக் கொள்வதாகவும்; அந்த வழக்கு சம்பந்தமாய் நான்கு மாத காலம் திருச்சிராப்பள்ளிக்கும், இராமநாதபுரத் திற்கும் போய் வந்து கொண்டிருக்க நேரிட்டதால், இப்போதுதான் பாளைய நிர்வாகத்தை தன்னால் கவனிக்க முடிந்ததென்றும்; மழை சரிவரப் பெய்யாமையாலும், மக்கள் குடிபெயர்ந்து விட்டதாலும் பெரும்பகுதி நிலம் தரிசு போடப்பட்டு விளைச்சலும் வரி வசூலும் குறைந்து

போய்விட்டதென்றும்; எப்படியும் கூடிய விரைவில் தன் பாக்கி மொத்தத்தையும் கொண்டு வந்து செலுத்திவிடுவதாக வும் அக்கடிதத்தில் அவன் எழுதியிருந்தான். கடிதத்தின் கடைசியில், "என்னைக் கும்பினியாரின் வளர்ப்புப் பிள்ளையாகவே கருதிக் கருணை பாராட்டி வர வேண்டும்" என்று அவன் வேண்டிக் கொண்டிருந்தான்!

இக்கடிதத்தின் நகல் இன்றும் இருக்கிறது!

"கட்பெனிக்குச் செலுத்த வேண்டிய வரியைச் சேகரித்து எடுத்துக் கொண்டு நேரில் வருகிறேன்" என்று கட்டபொம்மன் எழுதியதாக, ம.பொ.சி. யே தம் நூலின் 30'ம் பக்கத்தில் ஒப்புக் கொண்டுள்ளார்.

கும்பினிக்குக் கப்பம் கட்ட முடியாது என்று வீரபாண்டிய கட்டபொம்மன் ஆரம்பத்திலும் சொல்லவில்லை; இடையிலும் சொல்லவில்லை; இறுதியிலும் சொல்லவில்லை; அவன் கேட்டதெல்லாம் தவணை! சொன்னதெல்லாம் சால்ஜாப்பு! எண்ணியதெல்லாம் ஏமாற்ற! இதை நாம் நன்கு கவனத்தில் கொள்ள வேண்டும்!

இராமநாதபுரம் பாளையக்காரரான முத்துராமலிங்க சேதுபதி யென்பவர், கும்பினி ஆட்சியை எதிர்த்து ஒரு புரட்சியைத் தொடங்கினார். அந்தப் புரட்சிக்கான ஆயுதங்களை அவர் இரகசியமாகச் சேகரிக்கலானார். அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, கட்ட பொம்மன் முன்பு டச்சுக்காரர்களிடம் தான் வாங்கிச் சேர்த்து வைத்திருந்த ஆயுதங்களைக் கொள்ளை இலாபத்திற்குச் சேதுபதியிடம் விற்க முன் வந்தான். அறுபதாயிரம் சக்கரம் கொடுத்துச் சேதுபதி அந்த ஆயுதங்களை விலைக்கு வாங்கினார்.

புரட்சி முழு அளவில் தொடங்கப்படுவதற்கு முன்னால், அது பற்றிய தகவல் கும்பினியாருக்கு எட்டி விட்டது. உடனே அவர்கள் சேதுபதியை நாடு கடத்திச் சென்னையில் கொண்டு



போய் வைத்து விட்டார்கள். இதை நாம் ஏற்கெனவே அறிந்துள்ளோம்.

தலைவனில்லாததால், புரட்சி புகைந்து விட்டது. கலகம் எளிதில் அடக்கப்பட்டு விட்டது. இது பற்றிக் கும்பினியார் நடத்திய விசாரணையின்போது, சேதுபதிக்குக் கட்டபொம்மன் ஆயுதங்களை விற்ற செய்தி வெளியாயிற்று. அவனுக்கு மீண்டும் துன்ப காலம் தொடங்கலாயிற்று.

கலெக்டர் ஜாக்ஷன் தன்னை உடனே வந்து பார்க்கும்படி அவனுக்கு ஒரு தாக்கீது அனுப்பினான்.

ஆனால் குற்ற நெஞ்சுள்ள கட்டபொம்மன் அவனைப் பார்க்கப் போவதற்குப் பயந்து தயங்கினான். ஆகவேதான் உடனே புறப்படுவதற்கு அன்று நாள் நன்றாக இல்லை யென்றும், விரைவில் ஒரு நல்ல நாள் பார்த்துக் கொண்டு புறப்பட்டு வருவதாகவும் சொல்லியனுப்பினான்!

ஜாக்ஷன் விடவில்லை. அவன் பஞ்சாங்கம் பார்க்கத் தெரிந்தவர்களைக் கொண்டு, கட்டபொம்மன் கூறியது பொய்யென்பதைக் கண்டு கொண்டான். ஆகவே, அவன் மறுபடியும் ஓர் ஆளை அனுப்பி கட்டபொம்மன் உடனே வரவேண்டுமென்று கட்டளையிட்டான்.

கடைசியில் வேறு வழியில்லாமல், ஏப்ரல் 29'ம் தேதியன்று தான் கட்டாயம் கலெக்டரை வந்து பேட்டி காண்பதாக, கட்டபொம்மன் பதில் சொல்லியனுப்பினான்.

இந்த நிகழ்ச்சிகளில்கூட, "நான் வர முடியாது!" என்று கலெக்டரை எதிர்த்துக் கூறும் அளவுக்குத் துணிவில்லாதவனா யிருந்திருக்கிறான் ம.பொ.சி.யின் "விடுதலை வீரன்!". இதை அவரே ஒப்புக் கொள்கிறார். பாருங்கள்.

"அப்போதிருந்த மனநிலையில் 'வரமுடியாது' என்று சொல்ல அவனுக்குத் துணிவில்லை. எனவே, உடல்நிலை

சரியில்லாததால் உடனே புறப்பட்டு வர முடியாதென்றும், மேலும் அன்றைக்கு நாளும் நன்றாக இல்லையாதலால் மறுநாள் வருவதாகவும் பதில் விடுத்தான்!" - (வீர பாண்டியக் கட்டபொம்மன் - பக்கம் 33.)

ஆனால், கட்டபொம்மன் குறிப்பிட்ட நாளன்று கலெக்டரைப் போய்ப் பார்க்கவில்லை.

இதற்கிடையில், சர்க்கார் நிலங்களில் திசைக் காவல் வரி வசூலிப்பதாகக் கூறிக் கொண்டு, கட்டபொம்மனும் அவனது ஆள்களும் அத்துமீறி நடந்து வருவதாக, சார் மகால் தாசில்தார் கலெக்டருக்குப் புகார் செய்தான்.

கலெக்டர் உடனே கட்டபொம்மனுக்கு மறுபடியும் ஒரு தாக்கீது அனுப்பி வைத்தான்.

மே மாத முடிவில் கட்டபொம்மன் தன் பரிவாரங்களுடன் பாஞ்சாலங்குறிச்சியை விட்டுப் புறப்பட்டான். இதைக் கேள்வியுற்ற கலெக்டர், அவன் தன்னைத்தான் பார்க்க வருகிறான் என்று எண்ணி, அவனுக்காக இராமநாதபுரத்திலேயே காத்திருந்தான்.

ஆனால் கட்டபொம்மன் சிவகெங்கைக்குச் சென்று விட்டான்! அவன் தன்னைப் பார்க்க வரவில்லையென்று அறிந்ததும், கலெக்டர் சினம் கொண்டவனாய் வெளியூருக்கு முகாம் போய் விட்டான்.

ஜூன் மாதம் 4'ம் தேதியன்று, கலெக்டர் கமுதியில் போய் முகாமிட்டான். அன்றே அவன் கட்டபொம்மனுக்கு ஒரு கடிதம் எழுதியனுப்பினான்.

தன்னை நேரில் வந்து பார்க்காமல் கட்டபொம்மன் சால்ஜாப்புகள் சொல்லி வருவது நல்லதல்லவென்றும், பத்து மைல் தொலைவிலேயே தான் முகாம் போட்டிருப்பதால் தன்னை உடனே வந்து பார்க்குமாறு கலெக்டர் அதில் கட்டளையிட்டிருந்தான்.



அதற்குக் கட்டபொம்மன் உடனே ஒரு பதில் எழுதியனுப்பினான். அதாவது, தன்னுடன் சண்டை போட்டுக் கொண்டு சிவகெங்கைக்கு வந்துவிட்ட தன் சிற்றப்பன் சின்ன பொம்முவைச் சமாதானம் செய்து அழைத்து வருவதற்காகவேதான் சிவகெங்கை சென்றதாகவும், சின்ன பொம்முவைப் பாஞ்சாலங்குறிச்சிக்கு அனுப்பிவிட்டுப் பின்னால் இராமநாதபுரத்துக்கு வரலாமென்று இருந்ததாகவும், கலெக்டரைக் காண்பதற்குத் தான் மிக ஆவலோடிருப்பதாகவும் கட்டபொம்மன் அந்தப் பதிலில் தெரிவித்திருந்தான்.

இது வெறும் கண் துடைப்பு வேலையென்பதை ஜாஷிங்டன் புரிந்து கொண்டான். ஆகவே, அவன் மறுபடியும் ஒரு தாக்கீதைக் கட்டபொம்மனுக்கு அனுப்பினான். "இந்த உத்தரவு கண்ட ஐந்து மணி நேரத்திற்குள் நீர் என்னை வந்து பார்க்க வேண்டும்" என்று அதில் அவன் குறிப்பிட்டிருந்தான்.

கட்டபொம்மனுக்கு அக்கடிதம் கிடைத்தபோது நண்பகல் நேரம். வெயில் கடுமையாக இருப்பதால் மாலை 3 மணிக்குமேல் புறப்பட்டு வருவதாக, அதைக் கொண்டு வந்த அரிகாரனிடம் அவன் பணிவோடு சொல்லியனுப்பினான்.

சிறிது நேரம் கழித்து அவன் இன்னொரு ஆள் வசம் கலெக்டருக்கு ஒரு கடிதம் அனுப்பினான். அன்றைய தினம் நாள் நன்றாக இல்லையென்றும், ஆகையால் மறுநாள் புறப்பட்டு வர அனுமதிக்க வேண்டுமென்றும் அக்கடிதத்தின் மூலம் அவன் கலெக்டரைக் கேட்டுக் கொண்டான். அன்று உண்மையிலேயே பஞ்சாங்கப்படி நல்ல நாள் அல்ல என்பதைக் கலெக்டர் தன் துபாஷைக் கேட்டுத் தெரிந்து கொண்டான். அதன் பேரில், மறுநாள் காலை 7 மணிக்குள் தன்னை வந்து பார்க்கும்படி அவன் கட்டபொம்மனுக்குச் சொல்லியனுப்பினான்.

உடனே கட்டபொம்மன், "மாமூல்படி" தன்னுடைய முழுப் பரிவாரங்களோடு வந்து கலெக்டரைப் பேட்டி

காண்பதற்கு அனுமதி கோரி, அவருக்கு இன்னொரு கடிதம் அனுப்பினான்.

"மற்றப் பாளையக்காரர்களைப் போலவே" முப்பது பேர்களுக்கு மேற்படாத பரிவாரத்துடன் வரலாமென்று கலெக்டர் அதற்குப் பதில் அனுப்பினான்.

முழுப் பரிவாரத்துடன் தனக்கு விசேஷ அனுமதி வேண்டுமென்று கேட்டு, கட்டபொம்மன் அன்றிரவே கலெக்டரிடம் இன்னொரு தூதுவனை அனுப்பினான்.

கலெக்டர் தான் போட்ட உத்தரவை மாற்ற முடியாதென்று கண்டிப்பாகப் பதில் கூறிவிட்டான்.

கட்டபொம்மனுக்காக மறுநாள் காலை ஏழு மணி வரை காத்திருந்துவிட்டு, கலெக்டர் அடுத்த ஊருக்கு முகாம் புறப்பட ஆயத்தமானான். புறப்படுவதற்கு முன்பாக, அவன் தன்னுடைய தலைமை அரிகாரனாகிய அப்துல் ரஹ்மான் என்பவனையும் கஜான்ஜி லெட்சுமணராவ், ஜவாப் நவீஸ் சுந்தர ராவ், முன்ஷி பீர்முகமது ஆகியோரையும் கட்டபொம்மனிடம் அனுப்பி வைத்தான்.

"நீர் என்னைப் பேட்டி காண விரும்பாவிட்டால், உமது கிஸ்திப் பாக்கி முழுவதையும் உடனே லெட்சுமணராவ் வசம் கொடுத்தனுப்ப வேண்டியது" என்று கட்ட பொம்மனுக்கு ஒரு கண்டிப்பான தாக்கீதையும் கலெக்டர் அவர்களிடம் கொடுத்தனுப்பினான்.

கட்டபொம்மன் தான் ஊருக்குத் திரும்பிப் போய் கிஸ்திப் பாக்கியை வசூல் செய்து அனுப்பிவிடுவதாக இதற்கு பதில் எழுதி அனுப்பினான். அத்துடன், தன் முழுப் பரிவாரங்களையும் உடனழைத்துவர அனுமதியளிக்குமாறு அவன் மீண்டும் வேண்டுகோள் விடுத்தான்.



கலெக்டர் ஜாக்ஸன் தான் பிடித்த பிடியை விட்டுக் கொடுக்க விரும்பவில்லை.

இதற்குள் பிற்பகல் மணி மூன்றரை ஆகிவிட்டது. கலெக்டர் கட்டபொம்மனுக்கு ஓர் இறுதி உத்தரவு அனுப்பினான். "இது கண்ட இரண்டு மணி நேரத்திற்குள் நீர் என்னை வந்து பார்க்க வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால், நீர் ஊருக்கு உடனே திரும்பிச் சென்று, என் மறு உத்தரவு வரையில் வேறு எங்கும் செல்லாமல் அங்கேயே தங்கியிருக்க வேண்டும்!" என்பதே அந்த உத்தரவின் சாரம்.

நிலைமை மோசமாவதைக் கண்டு கட்டபொம்மன் கலக்கமடைந்தான். தன்னுடைய வக்கீலாகிய சங்குப் பிள்ளை யென்பவரைக் கலெக்டரிடம் தூதனுப்பி, தன் குற்றங்களை மன்னித்து அங்கேயே பேட்டியை முடிக்குமாறு அவன் கேட்டுக் கொண்டான்.

இரவு மணி எட்டு ஆகிவிட்டதால் இதற்குமேல் எந்தப் பேட்டியும் கிடையாது என்று பதில் கூறிவிட்டான்! அது மட்டுமல்ல; கட்டபொம்மனை அழைத்துச் சென்று பாஞ்சாலங்குறிச்சியில் விட்டுவருமாறு, அவன் தன் அதிகாரி ஒருவனையும் அனுப்பி வைத்தான்!

இந்த எதிர்பாராத நிகழ்ச்சியால் கட்டபொம்மன் பெருத்த ஏமாற்றமடைந்தான். கலெக்டர் உத்தரவை எதிர்க்கவோ நிராகரிக்கவோ அவனுக்கு அச்சமாயிருந்தது. ஆகவே, அந்த அதிகாரியின் பின்னாலேயே அவன் பாஞ்சாலங்குறிச்சியை நோக்கி ஆட்டுக்குட்டிபோல் புறப்பட்டுச் சென்றான்! இவன்தான் வீராதி வீரனாம்! தலைவணங்காத் தம்பிரானாம்! வெட்கம்! வெட்கம்!

பாஞ்சாலங்குறிச்சியை அடைந்ததும், தன்னை அழைத்துச் சென்ற அந்த அதிகாரிக்குப் பெரிய உபசாரங்கள் செய்து, அவன் மூலமாகவே கலெக்டருக்கு ஒரு கடிதம் கொடுத்த னுப்பினான் கட்டபொம்மன்.

நடந்து போன காரியங்களுக்காகத் தான் பெரிதும் மனம் வருந்துவதாகவும், கலெக்டர் துரை பெரிய மனது பண்ணி தன்னை மன்னிக்க வேண்டுமென்றும்; அவரைப் பேட்டி காணும் பாக்கியம் தனக்குக் கிடைக்காது போனது பெரிய துரதிருஷ்டமென்றும்; கிஸ்திப் பாக்கியைக் கூடிய விரைவில் அனுப்பி வைப்பதாகவும் அக்கடிதத்தில் அவன் கெஞ்சியிருந்தான்.

இப்படியெல்லாம் எழுதினானே தவிர, கிஸ்திப் பாக்கியை அனுப்பவுமில்லை; அதற்கப்புறம் அவன் கலெக்டரை நேரில் சென்று பார்க்கவுமில்லை. ஆனால் அதே சமயத்தில் கலெக்டர் அதிக வரி கேட்பதாகப் பொய்க் காரணம் கூறி, அவன் தன் ஆட்சிப் பகுதி மக்களைக் கசக்கிப் பிழியத் தொடங்கினான்! அது பற்றியும், அவன் பிற பாளையங்களில் புகுந்து புரியும் அட்டூழியங்கள் பற்றியும், கலெக்டருக்கு மீண்டும் புகார்கள் வரத் தொடங்கின.

### வந்துவிட்டான் பானர்மென்

இந்தச் சமயத்தில், சிவகிரிப்பாளையக்காரரான கிழவருக்கும் அவர் மகனுக்கும் மீண்டும் போராட்டம் ஆரம்பமாயிற்று. கட்டபொம்மன் வழக்கம்போல் தானும் அதில் பங்கு கொள்ளலானான். அவன் தன் படை வீரர்களில் இரண்டாயிரம் பேரைச் சின்னவனுக்கு ஆதரவாக அனுப்பி வைத்தான்.

பெரியவர் கும்பினிக்கு வேண்டியவர். அவர் தம் நண்பரான ஊற்றுமலைப் பாளையக்காரரின் உதவியை நாடினார்.

கட்டபொம்மன் சின்னவனை ஆதரிப்பதால், பெரியவருக்கு ஆதரவாகப் படைகள் அனுப்புவதற்குத் தம்மை அனுமதிக்குமாறு, ஊற்றுமலையார் கலெக்டருக்கு ஒரு கடிதம் எழுதினார்.



நண்பரான ஊற்றுமலைப் பாளையக்காரரின் உதவியை நாடினார்.

கட்டபொம்மன் சின்னவனை ஆதரிப்பதால், பெரியவருக்கு ஆதரவாகப் படைகள் அனுப்புவதற்குத் தம்மை அனுமதிக்குமாறு, ஊற்றுமலையார் கலெக்டருக்கு ஒரு கடிதம் எழுதினார்.

இந்த நிலைமையை அனுமதித்தால், விரைவில் உள்நாட்டுப் போர் மூண்டுவிடுமென அஞ்சினான் கலெக்டர். ஆகவே அவன் இதைப் பற்றிக் கும்பினி மேலிடத்துக்கு விரிவாக ஒரு ரிப்போர்ட்டு எழுதியனுப்பினான்.

இந்த ரிப்போர்ட்டு *1799*, ஜூலை மாதக் கடைசியில் சென்னைக்கு வந்து சேர்ந்தது.

ஆனால், கட்டபொம்மனின் துரதிருஷ்டம், அதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்னரே திப்புசுல்தான் விவகாரம் தீர்ந்து போய்விட்டிருந்தது. எப்படியெனில்,

*1792*-இல் கும்பினியாரிடம் போரில் தோற்றபின்பு, திப்புசுல்தான் தன் தோல்விக்குப் பழிவாங்கும் பொருட்டு இரகசியமாகத் திட்டமிட்டவண்ணமிருந்தான். பிரஞ்சுக் காரர்களுடனும், கும்பினிக்கு எதிராக இருந்த எல்லா சுதேச மன்னர்களுடனும் அவன் அந்தரங்கமாகத் தொடர்பு கொண்டான். கும்பினியை இறுதியாக எதிர்த்து ஒழித்து விடுவதற்காக, அவன் பெரும் முயற்சிகள் செய்து கொண்டிருந்தான்.

ஆங்கிலக் கும்பினியாரும் இதைப் புரிந்து கொண்டுதானிருந்தனர். அவனது திடீர்ப் படையெடுப்பை எதிர்பார்த்து, அவர்கள் ஒரு பெரும் படையைத் தயாராக வைத்திருந்தார்கள். அந்தப் படையின் ஆற்றலைக் கட்ட பொம்மன் போன்ற அற்பப் பாளையக்காரர்களிடத்தில்

அனுப்பி வைத்தது. அவனுக்கு உதவியாக, புகழ்மிக்க இராபர்ட் கிளைவின் மகனாகிய லார்டு எட்வர்டு கிளைவ் என்பவனும் வந்து சேர்ந்தான்.

படைகள் யாவும் தயாரானதும், 1799-ல் திப்புவின் மைசூர்ச்சீமையை நாலாபக்கங்களிலும் கும்பினியார் தாக்கத் தொடங்கினர். பம்பாயிலிருந்து வந்த ஒரு கும்பினிப்படை கண்ணனூரில் இறங்கி மைசூரைத் தாக்கியது. காப்டன் மால்கோம் என்பவன் தலைமையில் மற்றொரு படை ஹைதராபாத்திலிருந்து வந்து வடக்குப் புறமாக மைசூரைத் தாக்கியது. சென்னையிலிருந்து ஜெனரல் ஹாரிஸ் தலைமையில் சென்ற படை, கிழக்கேயிருந்து தாக்கிப் பெங்களூரைப் பிடித்துக் கொண்டது. பானர்மென்னெனும் கும்பினித் தளகர்த்தன், திருநெல்வேலியிலிருந்து படைகளைத் திருவாங்கூர் வழியாக வடக்கு நோக்கி நடத்திச் சென்றான்.

திப்புவுக்கு உதவி செய்வதாக வாக்களித்திருந்த அத்தனை பேரும் இந்தச் சமயத்தில் அவனைக் கைவிட்டு விட்டார்கள். திப்புவின் தலைநகரான சீரங்கப்பட்டினத்தைக் கும்பினிப் படைகள் சூழ்ந்து கொண்டு விட்டன. சரண் அடைவது அல்லது வீரமரணத்தை ஏற்றுக் கொள்வது என்று இரண்டைத் தவிர அவனுக்கு வேறு வழியில்லாது போயிற்று. இதில் இரண்டாவது வழியையே அவன் பின்பற்றினான். அவனது கோட்டை வீழ்ச்சியடைந்தபோது, அக்கோட்டையின் வாசலில் கையில் வாளேந்தி நின்று, இறுதிவரை போராடி உயிர் துறந்தான் அந்த வீரமகன்! அவனுடைய வீரப்போராட்டம் 1799, மே மாதம் 4-ம் தேதியன்று முடிவுற்றது.

திப்புவுக்குப் பிறகு, மைசூரின் பழைய மன்னர் பரம்பரையில் வந்த கிருஷ்ணராஜ உடையார் என்பவர் பட்டத்துக்கு வந்தார். இவர் கும்பினிக்கு மிகவும் நண்பராக விளங்கினார்.



பெயருக்கு மட்டும் கர்நாடக நவாபாக சென்னையில் இருந்து வந்த முகமதலி, இதற்கு நான்கு ஆண்டுகட்கு முன்னரே, அதாவது, 1795'ல் காலமாகிவிட்டான். அவனுக்குப் பிறகு அவன் மகன் உம்தத் உல் உமாரா என்பவன் நவாப் என்று பெயர் சூட்டப்பட்டான். இவன் கும்பினி ஆட்சியைக் கவிழ்ப்பதற்காகத் திப்புவுக்கு உடந்தையாயிருந்து, அவனுடன் இரகசியமான கடிதப் போக்குவரவு வைத்துக் கொண்டிருந்தான். இந்த உண்மை, திப்புவின் வீழ்ச்சிக்குப் பிறகுதான் கும்பினியாருக்கே தெரியவந்தது. அவர்கள் தன்னைத் தண்டித்துவிடப் போகிறார்களேயென்ற அதிர்ச்சி யில், உம்தத் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகி விட்டான். கடைசியாக, 1799-ல் அவனும் காலமானான்.

அவனுக்குப் பிறகு, அவன் மூத்த மகனும் மருமகனும் நவாப் பதவிக்காகப் போட்டியிட்டனர். கும்பினியார் அவ்விருவரையும் ஒதுக்கிவிட்டு, இளையமகன் அலிஹுசேன் என்பவனை நவாப் ஆக்கினார்கள்.

தஞ்சாவூரில் ஆண்டுவந்த ராஜா துல் ஜாஜி என்பவர் 1787'ல் இறந்து போனார். அவருக்குக் குழந்தை கிடையாது. ஆகையால் சரபோஜீ யென்ற சிறுவனை அவர் தத்து எடுத்திருந்தார். ஆனால், இறந்த மன்னரின் சகோதரன் அமரசிங்கன் என்பவன், சரபோஜீயை விரட்டிவிட்டு ஆட்சியைக் கைப்பற்றிக் கொண்டான். கும்பினியார் சரபோஜீயை ஆதரித்தனர். அமரசிங்கனை விரட்டிவிட்டு, அவர்கள் சரபோஜியைப் பட்டத்திலமர்த்தினர். இதுவும் 1799'ல் தான் நடந்தேறியது. தஞ்சையிலுள்ள சரஸ்வதி மகால் என்னும் புகழ்மிக்க நூல் நிலையத்தை நிறுவிய சரபோஜீ மகாராஜா இவரேயாவர்!

இவ்வாறாக கும்பினியாருக்குத் தலைவலியைத் தந்து கொண்டிருந்த பெரிய அரசியல் சிக்கல்களெல்லாம் தீர்ந்து போயிருந்த நிலையில்தான், திருநெல்வேலிக் கலெக்டர் லூஷிங்டன் கட்டபொம்மனைப் பற்றி எழுதியனுப்பிய ரிப்போர்ட்டு அவர்கள் கைக்குக் கிடைத்தது.

அப்போது பழைய இராபர்ட் கிளைவின் புதல்வனான லார்டு எட்வர்டு கிளைவ் என்பவன் சென்னையில் கவர்னராக இருந்தான். தென்னாட்டுப் பாளையங்களின் விஷயத்தில் இனியும் தலையிடாக் கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டிய அவசியமில்லையென்று அவன் தீர்மானித்தான். உடனடியாகத் தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்வதென்றும் கும்பினி முடிவு செய்தது. மேஜர் பானர்மென் தலைமையில், சென்னையிலிருந்து ஒரு பெரிய படை திருநெல்வேலிக்குப் புறப்பட்டு வந்தது!

பாளையக்காரர்கள் பற்றிய எல்லா வித நடவடிக்கைகளும் பானர்மென் முடிவுக்கே விடப்பட்டன. கலெக்டரும் மற்றமற்றக் கும்பினி அதிகாரிகளும், அவன் கேட்கும் எல்லாவித உதவிகளையும் செய்யுமாறு கட்டளையிடப்பட்டனர்! திருநெல்வேலிப் பகுதியில் பூர்ண அமைதி ஏற்பட்டுவிட்டது என்று மேஜர் பானர்மென் கூறும்வரையில். அந்தப் பகுதியிலுள்ள எந்தக் கும்பினி அதிகாரியும் அவனைக் கேட்காமல் எதுவும் செய்யக்கூடாது என்று உத்தரவிடப்பட்டது.

கலெக்டர் லூஷிங்டனுக்கு, கும்பினியாரின் இந்த உறுதியான போக்கு அளவில்லாத மகிழ்ச்சியை அளித்தது.

கும்பினியாரின் மனப்பான்மையில் ஏற்பட்ட இந்தத் திடீர் மாறுதல், பாவம் கட்டபொம்மனுக்குத் தெரியாது. அவன் வழக்கம்போல பிற பாளையங்களின் விவகாரங்களில் தலையிடுவதிலும், சுற்றுப்புற ஊர்களில் கொள்ளையடிப்பதிலும் தீவிரமாக ஈடுபட்டு வந்தான்.

சிவகிரி பாளைய விவகாரத்தில், சின்னவனுக்கு உதவியாக அவன் இரண்டாயிரம் பேர்களை அனுப்பிவைத்தான் அல்லவா? அந்த இரண்டாயிரம் பேர்களும் தன் பாளையத்துக்குள் புகுந்து சின்னவன் சார்பில் வரிவசூல் செய்வதாக, சிவகிரிக் கிழவர் 5-8-1799 அன்று கலெக்டருக்கு ஒரு புகார் அனுப்பினார்.



தலையிடுவதிலும், சுற்றுப்புற ஊர்களில் கொள்ளையடிப்பதிலும் தீவிரமாக ஈடுபட்டு வந்தான்.

சிவகிரி பாளைய விவகாரத்தில், சின்னவனுக்கு உதவியாக அவன் இரண்டாயிரம் பேர்களை அனுப்பிவைத்தான் அல்லவா? அந்த இரண்டாயிரம் பேர்களும் தன் பாளையத்துக்குள் புகுந்து சின்னவன் சார்பில் வரிவசூல் செய்வதாக, சிவகிரிக் கிழவர் 5-8-1799 அன்று கலெக்டருக்கு ஒரு புகார் அனுப்பினார்.

ஊற்றுமலைப் பாளையக்காரர் தம்முடைய பாளையத்துக்குள் கட்டபொம்மன் அத்துமீறி நுழைந்து கொள்ளையடித்ததாக, 7-8-1799'ல் கலெக்டருக்கு ஒரு புகார் தெரிவித்தார்.

இவ்விரண்டு புகார்க் கடிதங்களையும் மேஜர் பானர்மெனுக்குக் கலெக்டர் அனுப்பி வைத்தான்.

இதற்கிடையில், பாளையங்களின் விவகாரங்களில் கும்பினி தலையிடாது என்ற தைரியத்தில், கட்டபொம்மன் சிவகிரியின் மீது ஒரு பெரும் படையெடுப்பு நடத்தத் திட்டமிட்டான். இந்தப் படையெடுப்பில், வேறு சில பக்கத்துப் பாளையங்களும் கலந்து கொள்ள முன் வந்தன. இவற்றையெல்லாம் கேள்வியுற்ற சிவகிரிக் கிழவர், ஊற்றுமலை, எட்டயாபுரம் முதலிய பாளையக்காரர்களைத் தமக்கு உதவிக்கு வருமாறு கேட்டுக் கொண்டார்.

இது ஒரு பெரிய உள்நாட்டுப் போராக உருவாகும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. சகல அதிகாரங்களோடு வந்திருந்த மேஜர் பானர்மெனுக்கே அப்போது என்ன செய்வதென்றே தோன்றவில்லை. காரணம், இன்னும் சில பட்டாளங்களும் பீரங்கிகளும் அவனுக்குச் சென்னையிலிருந்து வந்து சேர வேண்டியிருந்தன. எனவே, உடனடியாக இராணுவ நடவடிக்கையில் இறங்காமல், அவன் முதலில் ஒரு பிரகடனத்தை வெளியிட்டான்.

அவனுக்குத் துணை வருவதாகச் சொன்ன பிற பாளையக்காரர்களும், "நமக்கு ஏன் இந்த வீண் வம்பு!" என்று ஒதுங்கிக் கொண்டு விட்டனர்.

### பாஞ்சாங்குறிச்சியின் வீழ்ச்சி

இந்த நிலைமையில், கட்டபொம்மனது குடும்பத்தில் ஒரு விசேஷம் வந்தது.

அதாவது, அவன் தம்பி ஊமைத்துரைக்குத் திருமணம் நிச்சயமாயிற்று. கல்யாணத்தை வெகு விமரிசையாக நடத்த அவன் திட்டம் போட்டான்.

இதையறிந்த தானாபதி சுப்பிரமணிய பிள்ளை, தன் மகன் வெள்ளைச்சாமிக்கும் அதே முகூர்த்தத்தில் திருமணத்தோடு திருமணமாகச் சேர்த்து நடத்த எண்ணினார். கட்டபொம்மனும் அதற்குச் சம்மதித்தான்.

அந்த இரண்டு கல்யாணங்களுக்கும் தேவையான நல்ல நெல் அப்போது பாஞ்சாலங்குறிச்சியில் இல்லை. வேறு எங்கேயாவது போய்த்தான் விலைக்கு வாங்க வேண்டிய திருந்தது.

தனக்குத் தேவையான எந்தப் பொருளையும் கொள்ளையடித்துப் பெறுவதுதான் பழக்கமே தவிர, கட்டபொம்மனுக்கு விலை கொடுத்து வாங்கிப் பழக்கம் இல்லை. ஆகவே தானாபதிப் பிள்ளையும் அவனும் சேர்ந்து, இது பற்றி ஒரு திட்டத்தை உருவாக்கினர்.

அந்தக் காலத்தில், கும்பினியார் தமக்குச் சேர வேண்டிய வரிபணத்தைத் தானியமாகவும் வசூலித்து வந்தனர். அப்படி வசூலான நெல்லைப் பாளையங்கோட்டை, ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி போன்ற இடங்களில் அவர்கள் களஞ்சியங்கள் கட்டிச் சேமித்து வைத்து, தக்க விலைவரும் போது விற்று வந்தனர். கட்டபொம்மன் தன் படை



இல்லை. ஆகவே தானாபதிப் பிள்ளையும் அவனும் சேர்ந்து, இது பற்றி ஒரு திட்டத்தை உருவாக்கினர்.

அந்தக் காலத்தில், கும்பினியார் தமக்குச் சேர வேண்டிய வரிபணத்தைத் தானியமாகவும் வசூலித்து வந்தனர். அப்படி வசூலான நெல்லைப் பாளையங்கோட்டை, ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி போன்ற இடங்களில் அவர்கள் களஞ்சியங்கள் கட்டிச் சேமித்து வைத்து, தக்க விலைவரும் போது விற்று வந்தனர். கட்டபொம்மன் தன் படை வீரர்களுக்கு நெல் வியாபாரிகளைப் போல் மாறு வேடம் அணிவித்து, அவர்களைப் பொதி மாடுகளுடன் ஸ்ரீவை குண்டத்துக்கு அனுப்பி வைத்தான். தானாபதிப் பிள்ளை அவர் மகன் முதலியோரும் அக்கூட்டத்துடன் சென்றார்கள்.

இரவு நேரம் பார்த்து அவர்கள் ஸ்ரீவைகுண்டம் போய்ச் சேர்ந்தார்கள். அப்போது அங்குக் களஞ்சியக் காவலனாக இருந்த பாண்டியத்தேவன் என்பவனைச் சந்தித்து, விலைக்கு நெல் வேண்டும் என்றார்கள். ஆனால், பாண்டியத்தேவன், பொழுது விடிந்த பிறகுதான் நெல் அளந்து கொடுக்க முடியுமென்று சொல்லிவிட்டான். இதைக் கேட்ட தானாபதிப் பிள்ளை, நெல்லைத் தாங்கள் மறுநாள் காலையிலேயே வாங்கிக் கொள்வதாகவும், நெல் நல்ல நெல்தானா என்பதை மட்டும் அப்போதே பார்த்துத் தெரிந்து கொள்ள விரும்புவதாகவும் நெல் பிடிக்காவிட்டால் அன்று இரவே வேறு ஊர் போக எண்ணியிருப்பதாகவும் பாண்டியத்தேவன் நம்புமாறு நயமாகப் பேசினார். அவர் பேச்சில் மயங்கிய பாண்டியத்தேவன் அந்த இரவு நேரத்திலேயே களஞ்சியத்தைத் திறந்து அப்போலி வியாபாரிகளை உள்ளே அழைத்துச் சென்றான்.

உள்ளே சென்றதும், கட்டபொம்மனின் ஆள்கள் பாண்டியத்தேவனையும் அவன் உதவியாளர்களையும் திடீரென்று தாக்கினர். பாண்டியத்தேவன் காயமுற்றுக் கீழே

கட்டபொம்மன் அந்த நெல் முழுவதையும் ஒட்டப்பிடாரம் என்னும் இடத்தில் ஒளித்து வைக்குமாறு கட்டளையிட்டான்!

ஸ்ரீவைகுண்டம் சர்க்கார்க் களஞ்சியம் கொள்ளை யடிக்கப்பட்ட செய்தி, அவ்வூர் மக்களுக்கே மறுநாள் காலையில்தான் தெரிய வந்தது. பாண்டியத்தேவன் மனைவி கனகு என்பவள் பாளையங்கோட்டைக்குச் சென்று, தன் கணவன் கொலை செய்யப்பட்டது பற்றிக் கும்பினி அதிகாரிகளிடம் முறையிட்டாள்.

உடனே களஞ்சிய மேலதிகாரியான பிர்க்கட்டு என்பவன் பாஞ்சாலங்குறிச்சிக்குப் புறப்பட்டு வந்தான். கட்டபொம்மன் மீது கொள்ளைக் குற்றம் சாட்டிய அவன், பாண்டியத் தேவனது கொலைக்கு காரணமாயிருந்தவர்களை உடனே தன்னிடம் ஒப்படைக்கவேண்டும் என்று உத்தரவிட்டான்.

முதலில் கட்டபொம்மன் தனக்கு அதுபற்றி எதுவும் தெரியாது என்று சொல்லிப் பார்த்தான். பின்னர், விசாரித்துச் செல்வதாகக் கூறித் தன் அரண்மனைக்குள் சென்று வந்து, தன் பாளையத்தைச் சேர்ந்த யாரோ சிலர் தெரியாத்தனமாய்ச் செய்துவிட்டதாகவும், நெல்லுக்கான விலையை அவர்களிட மிருந்து வசூலித்து அனுப்பி வைப்பதாகவும் தெரிவித்தான்.

ஆனால் பிர்க்கட்டு தான் நெல் விலையை வசூலிப்பதற் காக வரவில்லையென்றும், கொலை செய்தவர்களைப் பிடித்துச் செல்லவே வந்திருப்பதாகவும் கண்டிப்பாகப் பேசினான்.

கட்டபொம்மன் உள்ளே சென்று ஆலோசித்தான். தன்னுடைய ஏவுதலின் பேரிலேயே நடைபெற்ற இந்தக் காரியத்துக்கு யாரைப் பிடித்துக் கொடுப்பது? தானாபதிப் பிள்ளையைக் காட்டிக் கொடுத்தால், அவர் பதிலுக்குத் தன்னையே மாட்டிவைத்து விடுவார் என்று அவன் பயமடைந்தான். ஆகையால் கட்டபொம்மன் பிர்க்கட்டு விடம் கொஞ்சம் மழுப்பலாகப் பேசலானான். "இந்தக் குற்றங்களுக்குப் பொறுப்பானவர்களை நானே தண்டித்து விடுகிறேன். முதலில் தானாபதிப் பிள்ளையை வேலையை விட்டு நீக்கிவிடுகிறேன்!" என்றான் அவன்.



ஆனால் பிர்க்கட்டு இதற்கு மசியவில்லை. பொழுது போவதற்குள் குற்றவாளிகளை விலங்கிட்டுத் தன்முன் கொண்டு வந்து நிறுத்தாவிட்டால், எல்லாவற்றிற்கும் கட்டபொம்மனே முழுப் பொறுப்பு ஏற்கவேண்டும் என்று அவன் ஒரே பிடியாய்ப் பிடித்தான். கட்டபொம்மன் அது தன்னால் இயலாதென்று கூறிவிட்டான்.

உடனே பிர்க்கட்டுத் துரை தன் குதிரைமீது ஏறிப் பாளையங்கோட்டைக்குள் திரும்பிச் சென்றுவிட்டான். அங்கு, கலெக்டர் லூஷிங்டனுக்கும் மேஜர் பானர்மெனுக்கும் நடந்த விவரங்களையெல்லாம் எடுத்துச் சொன்னான்.

மேஜர் பானர்மென், கட்டபொம்மன் உடனே பாளையங்கோட்டைக்கு வந்து தன்னைப் பார்க்கவேண்டுமென்று, ஒரு தூதுவன் மூலம் அவனுக்கு உத்தரவு அனுப்பினான்.

கட்டபொம்மன் தான் வழக்கமாகக் கூறும் சால்ஜாப்புகளையே பதிலாக எழுதியனுப்பினான். அதாவது, "பாளையங்கோட்டைக்கு வந்து மேஜர் துரைகளை உடனே பேட்டி காண்பதற்கு நான் ஆவலாயிருக்கிறேன். ஆனால் இன்று நாள் நன்றாக இல்லை. விரைவில் நல்ல நாள் பார்த்துக் கொண்டு வந்து சேருகிறேன்" என்று அவன் பதில் விடுத்தான்.

கட்டபொம்மனுக்குப் பாளையங்கோட்டை போகவும் பயமாயிருந்தது; போகாமலிருக்கவும் பயமாயிருந்தது. ஆகவே, இதுபற்றி என்ன செய்வது என்று தன் நண்பன் டேவிசனிடம் ஆலோசனை கேட்பதற்காக, அவன் தூத்துக்குடிக்குப் புறப்பட்டுச் சென்றான்.

டேவிசனுக்குக் கும்பினியின் அப்போதைய மனோ நிலை நன்று தெரியும். அதை அவன் கட்டபொம்மனுக்கு விளக்கி, "நீ மேஜர் பானர்மெனை நேரில் போய்ப் பார்த்து மன்னிப்புக் கேட்டுக் கொண்டால்தான் பிழைக்கமுடியும்!" என்று தெளிவாகக் கூறிவிட்டான்.

கட்டபொம்மன் பாஞ்சாலங்குறிச்சிக்குத் திரும்பி வந்தான். காப்டன் டேவிசன் வார்த்தைகளைக் கேட்ட பிறகு, அவனுக்குப் பயம் அதிகமாகிவிட்டது. டேவிசன் சொல்படி பாளையங்கோட்டைக்குப் போனால், தனக்கு கட்டாயம் ஆபத்து வரும் என்று அவன் முடிவு கட்டினான்.

அப்போது அவனைப் பார்ப்பதற்காக, சிவகிரிப் பாளையத்திலிருந்து மாப்பிள்ளை வன்னியன் அங்கு வந்திருந்தான். அவனைத் தன் சார்பில் பானர்மெனிடம் தூது சென்று வருமாறு கட்டபொம்மன் கேட்டுக் கொண்டான்.

மாப்பிள்ளை வன்னியனும் அதற்குச் சம்மதித்துப் பாளையங்கோட்டைக்குப் புறப்பட்டுச் சென்றான். அங்கு அவன் பானர்மெனைப் பேட்டி கண்டு, கட்டபொம்மன் கும்பினிக்கு அடங்கி நடக்கவே விரும்புவதாகவும், எல்லா வரி பாக்கிகளையும் செலுத்தி விடுவதோடு, களஞ்சியக் கொள்ளைக்கான நஷ்டஈடு முழுவதையும் தரச் சம்மதிப்பதாகவும் எடுத்துக் கூறினான்.

பானர்மென் அதையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. எதுவாயிருந்தாலும் கட்டபொம்மன் தன்னை நேரில் வந்து பார்த்துத்தான் சொல்லிக் கொள்ள வேண்டுமென்று அவன் கண்டிப்பாகத் தெரிவித்துவிட்டான். அது மட்டுமல்ல; சிவகிரிக் கிழவருக்கு எதிராகப் புரட்சி செய்த தாய்க் குற்றம் சாட்டி, மாப்பிள்ளை வன்னியனை அவன் அங்கேயே கைது செய்து காவலில் வைத்தான்!

இதைக் கேள்வியுற்ற கட்டபொம்மன் கிலி அடைந்து விட்டான்!



தான் இதுகாறும் கும்பினியை ஏமாற்றி வந்ததுபோல் இனியும் செய்யமுடியாது என்பது அவனுக்குப் புரிந்து விட்டது. இந்த நிலையில், அடுத்தபடியாக என்ன செய்வது என்று தீர்மானிக்க முடியாமல் அவன் தவித்துக் கொண்டிருந்தான்.

ஆனால் மேஜர் பானர்மென் ஒரு தீர்மானத்துக்கு வந்துவிட்டான். *1799-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 4-ஆம்* தேதியன்று, அவன் பாளையங்கோட்டையிலிருந்து ஒரு பட்டாளத்துடன் புறப்பட்டு, சீவலப்பேரி வழியாகப் பாஞ்சாலங்குறிச்சி எல்லையை வந்தடைந்தான்.

அப்போது நள்ளிரவு நேரம். கும்பினிப் பட்டாளம் வந்துவிட்ட செய்தி கேட்டு கட்டபொம்மன் திகிலடைந்தான். அந்தச் சமயம் திருச்செந்தூரில் திருவிழா நடந்து கொண்டிருந்தது. அந்தத் திருவிழாவுக்குக் கட்டபொம்மனின் தம்பியரும் மற்றும் பலரும் சென்றிருந்தனர். ஆனால் அவர்கள் பொழுது விடிவதற்குள் திரும்பி வந்துவிட்டனர்.

மறுநாள் காலைக்குள்ளாக, கோவில்பட்டியிலிருந்தும் கயத்தாறிலிருந்தும் 12 பவுண்டு பீரங்கிகளுடன் இரண்டு கும்பினிப் பட்டாளங்கள் பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்து சேர்ந்தன. விடிந்ததும், லெப்டினண்ட் டல்லாஸ் என்பவன் தலைமையில் குதிரைப் படையொன்று கோட்டையைச் சுற்றிலும் வளைத்துக்கொண்டது. முன்னணியில் குதிரைப் படையினரும் அதற்குப் பின்னால் காலாட்படையினரும் அணிவகுத்து நின்றனர்.

கோட்டைக்கு வெளியில் தங்கிவிட்ட கட்டபொம்மன் ஆள்கள், இந்த முற்றுகையை உடைத்துக்கொண்டு உள்ளே புக முயன்றனர். ஆனால் அது முடியவில்லை. இந்த முயற்சியில் பலபேர் உயிரிழந்து போயினர்.

கோட்டையைத் தாக்குவதற்கு முன்னதாக, மேஜர் பானர்மென் தன்னுடைய துபாஷ் இராமலிங்க முதலியார்,

ஹவில்தார் இப்ராஹீம்கான், அரிகாரன்சாமி ஆகிய மூவரையும் கட்டபொம்மனிடம் தூதனுப்பி வைத்தான். அவர்கள் கட்டபொம்மனைச் சந்தித்து, அவன் தங்கள் பின்னாலேயே வந்து மேஜர் பானர்மென் முன்பு ஆஜராக வேண்டும் என்று தெரிவித்தனர்.

அவர்களைப் பக்கத்திலிருந்த ஒரு கட்டடத்துக்கு கட்டபொம்மன் அழைத்துச் சென்றான். அவனது மாமனாகிய கெட்டிபுட்டி நாயக்கரும் உடனிருந்தார். இவருக்குக் கெடிவேட்டூர் நாயக்கர் என்ற பெயரும் உண்டு.

கட்டபொம்மன் தனக்குக் கும்பினியின் மீது எந்தவிதமான பகைமையும் கிடையாதென்றும், கும்பினியின் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து மேஜர் பானர்மெனைப் பாளையங்கோட்டையில் வந்து பேட்டி காண அவன் ஏற்பாடுகள் செய்து கொண்டிருப்பதாகவும், அதற்குள் அவசரப்பட்டு கும்பினித் தளபதி பாஞ்சாலங்குறிச்சியின் மீது படை திரட்டி வந்திருப்பது கொஞ்சமும் நியாயமல்லவென்றும், அவன் தூதுவர்களிடம் எடுத்துக் கூறினான்.

அதற்குத் துபாஷ் இராமலிங்க முதலியார், "நீங்கள் துரைக்கு எழுதிய கடிதத்தில் நிச்சயமாக இன்ன தினத்தில் வருகிறேன் என்று குறிப்பிட்டு எழுதியிருந்தால், இந்த விபரீதம் வந்திருக்காது!" என்று பதிலளித்தார்.

பிறகு, மேஜர் பானர்மென் எழுத்து மூலமாக ஏதாவது ஓர் உத்தரவாதம் தருவாராயின், அவரை நேரில் வந்து பார்க்கச் சம்மதிப்பதாகக் கட்டபொம்மன் கூறினான். பானர்மென் அப்படிப்பட்ட எந்த உத்தரவாதத்தையும் தரத் தயாராயில்லையென்று இராமலிங்க முதலியார் தெரிவித்தார்.

எழுத்து மூலமாக இல்லாவிட்டாலும், கும்பினிப் பட்டாக் கத்தியையாவது ஓர் அடையாளத்திற்காக அனுப்புமாறு



கட்டபொம்மன் கேட்டுக்கொண்டான். ஆனால் துபாஷ் முதலியார் அதுவும் இயலாதென்று சொல்லிவிட்டார்.

பின்னர் மேஜர் தம் வாய்மொழியாகவாவது "கட்டபொம்மனை எதுவும் செய்வதில்லை!"யென்று உறுதி தந்தால் போதும் என இறங்கிவந்தான்.

"அதெல்லாம் ஒன்றுமே முடியாது. கும்பினியின் நீதியில் நம்பிக்கை வைத்து நீர் இன்னும் அரைமணி நேரத்திற்குள் பானர்மென் முன்பாக ஆஜராக வேண்டும். தீர விசாரணை செய்த பிறகு உண்மையைக் கண்டறிந்து அதற்கு தகுந்த முறையில் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். இதைத்தவிர வேறு எந்தவிதமான உத்தரவாதமும் தரமுடியாது" என்று கண்டிப்பாகக் கூறிவிட்டு, துபாஷ் முதலியார் தம்கூட வந்தவர்களுடன் புறப்பட்டுவிட்டார்.

கோட்டை வாசல் வரையில், கட்டபொம்மன் அவர் பின்னாலேயே தொடர்ந்து வந்தான். கடைசியாக, "நீங்களே எனக்கு ஏதாவது ஒரு உறுதிமொழி கொடுங்கள், நான் அந்தத் தைரியத்திலாவது பானர்மெனை வந்து சந்திக்கிறேன்!" என்று அவன் இராமலிங்க முதலியாரை கெஞ்சினான். முதலியார் அதற்கும் மறுத்துவிட்டுத் தம் பாசறைக்குத் திரும்பிவிட்டார்.

அவர் போன அரை மணி நேரத்திற்கெல்லாம், கட்டபொம்மன் தன் தூதுவன் ஒருவனைக் கும்பினித் தளபதியிடம் அனுப்பி வைத்தான். தளபதி "கவுல்" கொடுத்தால் கட்டபொம்மன் அவரை வந்து பார்க்கத் தயாராயிருப்பதாக அத்தூதுவன் பானர்மெனிடம் தெரிவித்தான். கவுல் கொடுத்து விட்டால்,பேட்டி முடிந்ததும் பாளையக்காரனைத் திரும்பிச் செல்ல அனுமதிக்க வேண்டும் என்பது விதிமுறையாகும். எனவே பானர்மென் கவுல் கொடுப்பதற்கும் மறுத்துவிட்டான்!

அதற்கப்புறம் அரைமணி நேரம்வரையில் அவன் கட்டபொம்மனது வருகையை எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

கட்டபொம்மன் வராது போகவே, அவனது கோட்டையைத் தாக்குமாறு உத்தரவிடப்பட்டது!

தெற்கு வாயிலை நோக்கிப் பீரங்கிகள் சுடத் தொடங்கின. அதே சமயம் வடக்கு வாசலை லெப்டினண்ட் டல்லாஸ் தலைமையில் ஒரு படை சென்று தாக்கியது. தெற்கு வாசலைத் தாக்கிய அதிகாரிதான் காலன் துரையென்று நாடோடிப் பாடல்களில் குறிப்பிடப்படும் நெப்ளண்டு காலின்ஸ் என்பவன்!

தெற்குக் கோட்டை வாயிலில்தான் முதலில் பிளவு வீழ்ந்தது. உடனே காலின்ஸ் தன் படையுடன் உள்ளே புக முயன்றான். அவ்வாயிலைக் காத்து நின்ற வீரன் ஒருவன். காலின்சை ஈட்டியால் குத்தினான். அந்த ஈட்டி அவன் மார்பில் பாய்ந்து முதுகின் வழியாய் வெளியே வந்தது. ஆனால் அந்த நிலையிலும், அஞ்சா நெஞ்சம் படைத்த காலின்ஸ் தன்மீது பாய்ந்த ஈட்டியிலேயே வழுக்கி முன்சென்று, அவ்வீட்டியைப் பிடித்திருந்தவனைத் தன் கைவாளால் வெட்டினான். இருவரும் அந்த இடத்திலேயே மடிந்து வீழ்ந்தார்கள். காலின்ஸின் இந்த வீரத்தைக் கண்ட எல்லாருமே, "ஆஹா! ஆஹா!" என்று வியப்பால் திகைப்புற்றனர்.

காலின்ஸ் இறந்தவுடன், தெற்கு வாயிலை மேற்கொண்டு தாக்காமல் அங்குக் காவல் போட்டான் மேஜர் பானர்மென். இரவு வந்தவுடன் அவன் போரை நிறுத்திவிட்டு, கோட்டைச் சுவர்களைப் பிளக்கக்கூடிய பெரிய பீரங்கிகளைக் கொண்டு வருவதற்காகப் பாளையங்கோட்டைக்கு ஆள்களை அனுப்பினான்.

மறுநாள் காலையில், கட்டபொம்மன் மீண்டும் ஒருமுறை பானர்மெனிடம் தன் தூதுவனை அனுப்பினான். தன்னுடைய பரிவாரங்கள் சிலரையும் காப்டன் டேவிசனையும் உடனழைத்துக் கொண்டு சென்னைக்குச் சென்று, அங்குள்ள கும்பினி கவர்னரிடம் தான் சரணாகதியடைய விரும்புவதாக



வும், அதற்கு மேஜர் பானர்மென் பெரிய மனது பண்ணி அனுமதியளிக்க வேண்டும் என்றும், கட்டபொம்மன் மன்றாடிக் கேட்டுக்கொள்வதாக அந்தத் தூதுவன் தெரிவித்தான்.

ஆனால் மேஜர் பானர்மென், மிகுந்த ஆலோசனையின் பேரில், அதற்கு உடன்பட மறுத்துவிட்டான். "கட்டபொம்மன் உடனே என்னிடம் வந்து சரணாகதியடைய வேண்டும். அதன் பிறகு, கும்பினி மேலிடத்தார் எப்படி உத்தரவிடுகிறார்களோ, அப்படி அவன் நடத்தப்படுவான்!" என்று அவன் பதில் கூறியனுப்பினான்.

சண்டையை நடத்துவதில், கட்டபொம்மனுக்கு ஆரம்ப முதற்கொண்டே துணிவு ஏற்படவில்லை. கும்பினிக்கு நல்ல பிள்ளையாகி, மீண்டும் அவர்கள் தயவை எப்படிப் பெறுவது என்பதில்தான் அவன் எண்ணம் தீவிரமாகச் சென்றது. முன்பு கலெக்டர் ஜாக்சனுடன் பகைமை கொண்டபோது திருச்சியிலிருந்த கும்பினி அதிகாரிகள் இவனிடம் பரிவு காட்டியது இவன் நினைவுக்கு வந்தது. அதேபோல் இப்போதும் மேஜர் பானர்மெனைத் தாண்டிச் சென்று திருச்சி அல்லது சென்னையிலுள்ள கும்பினி மேலதிகாரிகளிடம் சரண் அடைந்தால், அவர்கள் தன்னை மன்னித்து விட்டுவிடுவார்கள் என்று அவன் மனப்பூர்வமாக நம்பினான். எப்படியாவது இந்தத் தடவை தன் உயிரைக் காப்பாற்றிக் கொண்டால் போதும் என்ற முடிவுக்கு அவன் வந்துவிட்டான். எனவே, அன்று (அதாவது, செப்டம்பர் 7-ஆம் தேதி) இரவு பத்தரை மணிக்கு, முற்றுகையாளர்கள் சற்று அயர்ந்திருக்கும் வேளை பார்த்து, பொறுக்கியெடுத்த ஓர் ஐம்பது வீரர்களுடன் கட்டபொம்மன் தன் கோட்டையைவிட்டு வெளியேறினான்!

அவனுடைய தம்பியர் இருவரும், தானாதிப் பிள்ளையும், மற்றும் சில முக்கியமானவர்களும் அவனுக்குத் துணையாக உடன் சென்றனர்!

மறுநாள் காலையில்தான் கட்டபொம்மன் தப்பியோடி விட்ட விவரம் மேஜர் பானர்மெனுக்குத் தெரியவந்தது. அவன் நேரே சென்னைக்குத்தான் போகிறான் என்பதைப் பானர்மென் புரிந்துகொண்டு விட்டான். உடனே அவனுக்கு ஒரு பயம் வந்துவிட்டது. கட்டபொம்மன் கும்பினி மேலதிகாரிகளின் காலில் போய் விழுந்து அவர்களைச் சரிக்கட்டிவிட்டால், முன்பு கலெக்டர் ஜாக்சனுக்கு ஏற்பட்ட கதி தனக்கும் ஏற்பட்டுவிடக் கூடுமேயென அவன் கவலைப்பட்டான். எனவே கட்டபொம்மன் சென்னை அல்லது திருச்சி போய்ச் சேருவதற்குள், அவனை எப்படியாவது வழியிலேயே மடக்கிப் பிடித்துவிடுவதற்குப் பானர்மென் தீவிரமான ஏற்பாடுகளைச் செய்தான்.

முதலில், கட்டபொம்மன் போகக்கூடிய வழியிலுள்ள பாளையக்காரர்களுக்கெல்லாம், பானர்மென் ஓர் அவசர உத்தரவை எழுதி அனுப்பினான். எந்தப் பாளையக்காரராவது கட்டபொம்மனைச் சந்திக்க நேர்ந்தால், அவர்கள் உடனே அவனைக் கும்பினி அதிகாரிகளிடம் ஒப்படைக்க வேண்டும் என்பதே அந்த உத்தரவின் சாரம். பின்னர், கட்டபொம்மனைப் பிடிப்பதற்காக, அந்தப் பகுதி பாளையங்களின் ஊடே செல்லும் குறுக்கு வழிகளையெல்லாம் நன்கறிந்த படையொன்றைத் தனக்குத் தந்துதவுமாறு, பானர்மென் எட்டயாபுரம் பாளையக்காரனைக் கேட்டுக் கொண்டான்.

கட்டபொம்மனும் அவனது முன்னோர்களும் எட்டயாபுரத்துக்கு இழைத்து வந்திருக்கும் கொடுமைகளையும் துரோகங்களையும் எண்ணியெண்ணி மனம் புழுங்கிக் கொண்டிருந்த எட்டயாபுரம் பாளையக்காரன், பானர்மெனின் வேண்டுகோளை மிக மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டு, அவனுக்கு ஒரு நல்ல திறமை வாய்ந்த படையைக் கொடுத்து உதவினான்.



லெப்டினண்ட் டல்லாஸ் தலைமையில் இந்தப் படையை ஒப்படைத்து, கட்டபொம்மன் எங்குச் சென்றாலும் விடாமல் துரத்திப் பிடித்துக்கொண்டு வருமாறு கட்டளையிட்டான் பானர்மென்.

இதற்குள் கட்டபொம்மன் கோலார்பட்டிக்குப் போய், அங்கு ஒரு வீட்டில் மாறுவேடத்தில் தங்கியிருந்தான். இரவோடிரவாக டல்லாஸின் படைகள் போய் அந்த வீட்டைச் சூழ்ந்துகொண்டு விட்டன. உடனே பெருத்த குழப்பம் ஏற்பட்டது. அந்தக் குழப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, கட்டபொம்மன் தன் ஆள்கள் ஆறு பேர்களுடன் அங்கிருந்து தப்பியோடிவிட்டான். கட்டபொம்மன் தம்பிமார் இருவரும் தானாபதிப் பிள்ளையும் உள்பட முப்பத்து நான்குபேர் கும்பினிப் படைகளிடம் பிடிபட்டுப் போனார்கள்!

பின்னர், தப்பியோடிய கட்டபொம்மனைத் தொடர்ந்து, வடக்கு நோக்கி ஒரு படை அனுப்பப்பட்டது.

அகப்பட்டுக் கொண்டவர்கள் மேஜர் பானர்மென் முன்னால் கொண்டுவந்து நிறுத்தப்பட்டார்கள். அவர்களில் நாகலாபுரத்தைச் சேர்ந்த சௌந்தரபாண்டிய நாயக்கர் என்பார் ஒருவர். அவர் பல கொலைக் குற்றங்களுக்காகத் தேடப்பட்டுவந்தவர். அவரையும் பாண்டியத்தேவன் கொலைக்குக் காரணமாயிருந்த தானாபதிப் பிள்ளையையும் தவிர மீதி எல்லோரையும் பாளையங்கோட்டைக்குக் கொண்டு போகுமாறு பானர்மென் உத்தரவிட்டான்.

கட்டபொம்மன் தப்பியோடின மறுநாளே, பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டை வீழ்ச்சி அடைந்துவிட்டது. கட்டபொம்மனின் மனைவி மற்றக் குடும்பப் பெண்கள் ஆகியோர், தூத்துக்குடியிலிருந்த டேவிசனிடம் அடைக்கலம் புகுந்தனர். அவர்களையெல்லாம் பாளையங்கோட்டையிலுள்ள கும்பினி அதிகாரிகளிடம் கொண்டுவந்து டேவிசன் ஒப்படைத்துவிட்டான்! அவர்கள் அத்தனை பேரும்

சிறையிலடைக்கப்பட்டனர்.

தானாபதி சுப்பிரமணியப் பிள்ளை தூக்கிலிடப்பட்டார். அவருடைய தலையை வெட்டியெடுத்து ஒரு கொம்பில் குத்தி அதைப் பாஞ்சாலங்குறிச்சியில் கொண்டுபோய் நட்டு வைக்கும்படி உத்தரவிட்டான் மேஜர் பானர்மென்!

நாகலாபுரம் சௌந்தரபாண்டிய நாயக்கன் கோபாலபுரம் என்னும் ஊரில் தூக்கிலிடப்பட்டான்.

தென்னாட்டிலுள்ள பாளையங்களில் இனிமேல் கோட்டைகளேயிருக்கக் கூடாதென்று பானர்மென் தீர்மானித்தான். எல்லாப் பாளையக்காரர்களின் கோட்டைகளையும் இடித்துத் தள்ளுமாறும், அவர்களது வசமிருந்த ஆயுதங்கள் அனைத்தையும் பறிமுதல் செய்யுமாறும் அவன் உத்தரவிட்டான். ஆயுதங்கள் மறைத்து வைத்திருப்பவர்களுக்கும் ஆயுதம் தாங்கியவர்களுக்கும் மரண தண்டனை விதிக்கப்படும் என்று அவன் பிரகடனம் செய்தான். பாளையக்காரர்கள் இனிமேல் வெறும் பெருநிலக் கிழார்களாகத்தான் வாழ முடியும் என்பதை அவன் தெளிவுபடுத்தினான்.

## மக்களே தீர்ப்பு சொல்லட்டும்!

கோலார்பட்டியில் கும்பினிப் படைகளிடமிருந்து தப்பியோடிய கட்டபொம்மனும் அவன் ஆள்களும் எப்படியும் திருச்சியை அடைந்துவிட எண்ணினார்கள். அவ்விடம் உள்ள கும்பினி அதிகாரிகளிடம் சரணாகதியடைந்து உயிர்ப் பிச்சை கேட்பதே கட்டபொம்மனது நோக்கம் என்பதை, தி.நா.சு. அவர்கள் தமது "கட்டபொம்மு" என்ற நூலின் 165-ஆவது பக்கத்தில் வெளியிட்டிருக்கிறார்.

இதையே ஜெகவீர பாண்டியனார் பின்வருமாறு கூறுகிறார் :



"ஆண்டிருந்தவர்களனைவரும் 'ஐயனே! இது போழ்துயரம் கோபம் கொள்ள வேண்டாம். குறித்து வந்தபடி கும்பினித் துரைகளைக் கண்டு சமாதானம் செய்து, மேல் அல்லலுறாவகை அமைதி கொண்டு வருவதே மிகவும் நல்லதாம்' என உறுதி பல சொல்லி ஒருங்கே தடுத்தார். அதன் பின்னர் திருச்சிராப்பள்ளிக்கு நேரே போக உறுதிகொண்டு இவர் பொறுதி செய்திருந்தார்" - (பாஞ்சாலங்குறிச்சி வீரசரித்திரம் - பக்கம் 297.)

ஆகவே, சிலர் கூறுவதுபோல், கட்டபொம்மன் தன் கோட்டையை விட்டு ஓடியது ஆங்கிலேயரை மீண்டும் எதிர்த்துப் போராடுவதற்காக அல்ல என்பது மிகவும் தெளிவாகிறது.

தப்பியோடிய கட்டபொம்மனும் அவனது ஆள்களும் ஏறிச்சென்ற குதிரைகள் இடை வழியில் செத்து வீழ்ந்துவிட்டன. ஆகையால் பகல் நேரங்களில் எங்கேயாவது பதுங்கியிருந்துவிட்டு, இரவு நேரங்களில் மட்டும் இவர்கள் கால்நடையாகப் பிரயாணம் செய்ய வேண்டி வந்தது.

சிவகங்கைச் சீமையைச் சேர்ந்த ஆளியூர் என்னும் இடத்தை அவர்கள் அடைந்தனர். அங்குப் போதிய பாதுகாப்பு இன்மையால், அதைவிட்டுக் கலியபுரம் என்னும் ஊருக்குச் சென்றனர்.

இந்த ஊர் திருக்களம்பூருக்கு மேற்கேயுள்ள ஒரு காட்டின் நடுவில் இருக்கிறது. இந்தப் பகுதி முழுவதும் புதுக்கோட்டை மன்னரான தொண்டைமான் ஆட்சிக்கு உட்பட்டதாகும்.

திருக்களம்பூரில் புதுக்கோட்டை மன்னரின் தளபதியான சர்தார் முத்துவைரவ அம்பலக்காரர் என்பவர் இருந்தார்.

தம் அதிகாரத்துக்கு உட்பட்ட காட்டுப் பகுதியில் வேற்று ஆள்கள் நடமாடுவதாக அவர் கேள்விப்பட்டார். அதே

சமயத்தில், தெற்கேயிருந்து கட்டபொம்மனைத் தேடிவந்த கும்பினி வீரர்களும் திருக்களம்பூரை அடைந்தனர். அவர்கள் கூறிய செய்திகளைக் கேட்டவுடன், காட்டில் ஒளிந்திருக்கும் அந்த வேற்று ஆள்கள் கட்டபொம்மன் கோஷ்டியினராகத் தான் இருக்க வேண்டும் என்று ஊகித்து விட்டார் முத்து வைரவனம்பலம்.

இந்த முத்துவைரவ அம்பலகாரர் தூய மறவர் பரம்பரையில் பிறந்தவர். அவர் முன்னோர்கள் இராமநாதபுரம் சேதுபதியிடம் பணிபுரிந்தவர்கள். இராமநாதபுரத்திலிருந்து புதுக்கோட்டை அரசு தனியாகப் பிரிந்தவுடன், அவர்கள் மறவர்குல மன்னனாகிய புதுக்கோட்டைத் தொண்டைமானிடம் பணிபுரிய வந்துவிட்டார்கள்.

சர்தார் முத்துவைரவ அம்பலகாரர் ஒரு மாபெரும் வீரராவார். இவரது வீரத்தை பாராட்டி, ஒரு தனிக் கும்மிப் பாடலே இருக்கிறது.

சர்தார் முத்துவைரவ அம்பலகாரரும் அவர் வேந்தரான புதுக்கோட்டைத் தொண்டைமானும் ஆங்கிலேயரிடம் மிகவும் நட்புப் பூண்டவர்கள். மறவர் பாளையக்காரர்களை வேம்பென வெறுப்பவர்கள். அதிலும் வீரபாண்டிய கட்டபொம்மன் மறவர் பாளையங்களில் புரிந்து வந்த கொலைகளையும் கொள்ளைகளையும் கேட்டு உள்ளம் கொதிப்படைந்தவர்கள்.

எனவே முத்துவைரவ அம்பலகாரர் தம் படை வீரர்களுடன் காட்டுக்குள் சென்று, கலியபுரம் கிராமத்தை நாலா பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டுவிட்டார். கட்டபொம்மனுக்குத் தப்பிச் செல்ல வழியில்லாமல் போய்விட்டது. அவனையும் அவன் ஆறு ஆள்களையும் அம்பலகாரரின் படைவீரர்கள் பிடித்துக் கொண்டுவிட்டார்கள். பிடிபட்ட கட்டபொம்மன் தன்னைத் திருச்சியிலுள்ள கும்பினி அதிகாரிகளிடம் ஒப்படைக்குமாறு கேட்டுக் கொண்டான். ஆனால் அம்பலக்காரர், "உன்னைத் தேடி வந்திருப்பவர்களும் கும்பினி அதிகாரிகள்தாம். அவர்களுக்கும் திருச்சி அதிகாரிகளுக்கும் இடையே நான் வித்தியாசம் காட்ட முடியாது!" என்று கூறிவிட்டார்.



முத்துவைரவ அம்பலகாரர் கட்டபொம்மனை ஒரு மதிப்பிற்குரிய விடுதலை வீரனாகக் கருதவில்லை; தண்டனைக்குத் தப்பியோடிவந்த குற்றவாளியாகவே, அதிலும் ஒரு கொலைகாரனாகவும், கொள்ளைக்காரனாகவுமே கருதினார். எனவே அவனைத் தேடிவந்த கும்பினிச் சிப்பாய்களிடம் அவர் அவனை ஒப்படைத்தார். புதுக்கோட்டை மன்னருக்கே அதன் பிறகுதான் இந்தச் செய்தி தெரியவந்தது.

உண்மையிப்படியிருக்க, கட்டபொம்மன் முதலானோர் புதுக்கோட்டை அரண்மனையில் தங்கியிருந்ததாகவும், அப்போது தொண்டைமான் அவர்களை நயவஞ்சகமாக வெள்ளைக்காரர்களிடம் பிடித்துக்கொடுத்துவிட்டதாகவும் ஒரு கட்டுக்கதை வழக்கிலிருந்து வருகிறது. அது பொய்! பொய்!! முற்றிலும் பொய்!!!

*1799-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 16-ஆம் தேதியன்று* கட்டபொம்மன் கயத்தாறுக்கு கொண்டு வரப்பட்டான். அவனை விசாரிப்பதற்காக, ஒரு பெரும் கூட்டத்தையே கூட்டியிருந்தான் மேஜர் பானர்மென். தென்பாண்டி நாட்டிலிருந்த எல்லாப் பாளையக்காரர்களையும் கும்பினி அதிகாரிகளையும் அவன் அங்கு வரவழைத்திருந்தான். விசாரணை தொடங்கியது. குற்றச்சாட்டுகள் படிக்கப்பட்டன. பிறகு பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டைக்குள் கடைசி முறையாகத் தூதுசென்ற துபாஷ் இராமலிங்க முதலியாரின் வாக்குமூலம் வாசிக்கப்பட்டது. கட்டபொம்மன் அது சரியாயிருப்பதாக ஒப்புக்கொண்டான். பிறகு சாட்சிகள் விசாரிக்கப்பட்டனர். கட்டபொம்மன் மாமனாகிய கெடிவேட்டூர் நாயக்கரும் ஒரு சாட்சியாக விசாரிக்கப்பட்டார். சாட்சி விசாரணை முடிந்த பிறகு,

"உம்மீது சாட்டப்பட்டுள்ள இக்குற்றங்களை மறுத்து நீர் ஏதாவது சொல்லிக்கொள்ள விரும்புகிறீரா?" என்று கட்டபொம்மனை கேட்டான் மேஜர் பானர்மென்.

தான் பேட்டி காணக் கவுல் கேட்டதாகவும், கவுல் கிடைக்காமையாலேயே பேட்டிக்கு வரவில்லையென்றும், சிவகிரிப் பாளைய விவகாரத்தில் தான் தீய நோக்கத்துடன் நடந்துகொள்ளவில்லையென்றும் கட்டபொம்மன் பதிலளித்தான். அவன் முன்பு போட்டிருந்த திட்டப்படி திருச்சி அல்லது சென்னைக் கும்பினி மேலதிகாரிகளைத் தனிமையில் சந்தித்திருந்தால் அவர்கள் காலில் விழுந்து கெஞ்சுவதற்குக்கூட அவன் தயங்கியிருக்க மாட்டான். இங்கே மற்றப் பல பாளையக்காரர்களின் மத்தியில் பானர்மெனுக்குப் பணிந்து கெஞ்சுவது அவனுக்கு அவமானமாகப்பட்டது. மேலும், பானர்மென் தன்னைத் தண்டிப்பது என்ற தீர்மானத்துக்கு வந்துவிட்டதால், அவனிடம் என்ன சமாதானம் கூறினாலும் எடுபடாது என்பதையும் கட்டபொம்மன் நன்கு புரிந்துகொண்டு விட்டான். எனவே, தான் கூறவேண்டியது இதற்குமேல் ஒன்றுமில்லையென்று அவன் சொல்லிவிட்டான்!

உடனே பானர்மென் தன் தீர்ப்பை அறிவித்தான். ஊருக்குப் பக்கத்தில் அமைந்திருந்த ஒரு பழைய கோட்டையின் சமீபத்தில், ஒரு பெருவழியின் ஓரத்தில் நின்ற கட்டை புளியமரத்தில், தூக்குமேடை அமைக்கப்பட்டிருந்தது. தூக்குமேடையை அடைந்ததும், கட்டபொம்மன் தான் பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை விட்டு ஓடிப்போயிருக்காமல், அங்கேயே இறுதிவரை நின்று சண்டையிட்டு மடிந்திருந்தால் எவ்வளவோ பெருமையாக இருந்திருக்குமே என்று வாய்விட்டுக் கூறி வருந்தினான்!

வீரபாண்டிய கட்டபொம்மனுடைய வாழ்வு,அவனுடைய 39-அவது வயதில், 1799-ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 16-ஆம் தேதி மாலை முடிவுற்றது!



சிலம்புச் செல்வர் ம.பொ.சி.யின் கருத்துப்படி வீரபாண்டிய கட்டபொம்மன் 1780-ஆம் ஆண்டு பிறந்தான் என்றும் 39 ஆண்டு வாழ்ந்தான் என்றால் 1818-ஆம் ஆண்டு அவன் மறைந்த ஆண்டாக இருக்க வேண்டும். ஆனால் 1799-ஆம் ஆண்டு இறந்தான் என்று சொல்லப்படுவது தவறு. இதை வரலாற்று ஆசிரியர்களின் ஆய்வுக்கு விட்டுவிடுவோம்.

பானர்மென் நடந்துகொண்ட விதம் நீதியா அநீதியா என்பது வேறு விஷயம். நம் நாட்டைப் பிடித்து அதன் ஆட்சியைக் கைப்பற்றுவதற்கு, வெள்ளைக்காரர்கள் பல்வேறு உபாயங்களைக் கையாண்டனர். அதை எதிர்த்து எழுந்த பல உண்மையான வீரர்கள் இந்த நாட்டில் வாழ்ந்திருக்கிறார்கள். அதற்கு மாறாக, வெள்ளையர்களுடன் சேர்ந்து ஆதாயம் அடைந்தவர்களும் உண்டு. குழப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளையடித்தவர்களும் இருந்திருக்கிறார்கள். தாம் வழக்கமாக நடத்திவந்த கொள்ளை தொழிலுக்கு வெள்ளையர்கள் இடையூறாக இருக்கிறார்கள் என்பதற்காக அவர்களை எதிர்த்தவர்களும் சிலர் இருந்தது உண்மையே!

ஆகையால், ஒருவன் வெள்ளையனை எதிர்த்தான். அல்லது வெள்ளையனால் வீழ்ச்சியுற்றான் என்பதற்காக மட்டுமே அவனுக்கு நாம் விடுதலை வீரன் என்று பட்டம் சூட்ட முற்படுவோமேயானால், அப்புறம் விருப்பு வெறுப்பற்ற சரித்திர ஆராய்ச்சியென்பதற்கே அர்த்தமில்லாமல் போய்விடும்!

தமிழ்மண்ணின் பழங்குடி மகனாகிய புலித்தேவன் போன்றவர்கள், தம் சொந்த இலாபம் எதையுமே கருதாது வெள்ளையர்களை எதிர்த்து விடுதலைப்போர் புரிந்து, மாற்றான் குருதியையும் தம் குருதியையும் இந்த மண்ணில் ஆறாகப் பெருக்கி மடிந்து வீழ்ந்த வீர காவியத்தையும் நாம் பார்த்தோம்.

அதே சமயத்தில், வந்தவர்களுக்கெல்லாம் மண்டியிட்டு சொந்த நாட்டு மக்களுக்குத் துரோகம் பல இழைத்து,

கொள்ளையையும் கொலையையுமே குலத்தொழிலாகக் கொண்டு, இறுதியில் தன்னுடைய தீச்செயல்கள் பலவற்றால் கும்பினியின் பகைமையைத் தேடிக்கொண்டு, தான் அவர்களுக்குப் பணிந்துபோக விரும்பியும் அவர்கள் அதற்கு இடங்கொடுக்காமல் போக, தன்னுடைய தீவினைகளே திரண்டுவந்து தூக்குக் கயிறாகித் தன் கழுத்தைச் சுருக்க உயிர்நீத்த வீரபாண்டிய கட்டபொம்மனையும் பார்த்தோம்.

இவ்விரு திறத்தினரில் யார் உண்மையான விடுதலை வீரன்? யார் கொள்ளைக்காரன்?

மக்களே தீர்ப்புச் சொல்லட்டும்!

(முற்றியது).

